முதற் பதிப்பு : ஜூன், 1999
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 2000
மூன்றாம் பதிப்பு : ஜூன், 2010



**KATHAL CHADURANGAM**

**By : Indra Soundarrajan**

Third Edition : June - 2010

No.of Pages : 320

Paper Used : 11.6 N.S. Book Print

**விலை : ரூ.120.00**



**Thirumagal Nilayam**
New No. 16, Old No. 55,
Venkatnarayana Road,
T.Nagar, Chennai - 600 017.

**Laser at : Goodwill Computers,** T.Nagar, Chennai - 17.
E-mail : goodwilltngr@yahoo.co.in Cell:9444006583

**Printed at :** மஞ்சு ஆப்செட்,
செல் : 90940 52427

## சமர்ப்பணம்!

'திட்டமிட்ட செயல் திறன், உணர்வு வயப்படாத திடத்தன்மை, தளராத மனோ உறுதி, சேவை உதவி இவைகளில் அசாத்ய ஈடுபாடு என்று பாத்திரச் சிறப்பால் என்னை மிகக் கவர்ந்த

என் இனிய நண்பன்

***செல்லப்பா***

என்கிற

***SP. வெங்கடசுப்ரமண்யனுக்கு***

இந்நூலை
சமர்ப்பணம் செய்கிறேன்.

— இந்திரா சௌந்தர்ராஜன்

# என்னுரை!

இது ஒரு வெற்றித்தொடர்! இதன் வெற்றியை இந்தத் தொடரை இதயத்தில் எழுதத் தொடங்கும் போதே தீர்மானித்துவிட்டேன். இது நிச்சயம் ஒரு சலசலப்பை பார்வையை உருவாக்கப்போகிறது என்றும் நம்பினேன்.

என்னை அது ஏமாற்றவில்லை.

பொதுவில் காதல் காதலிப்பவர்களை வேண்டுமானால் படுத்தி எடுக்கும். பார்வையாளர்களுக்கும், வாசகர்களுக்கும் அது என்றும் சஞ்ஜீவி பர்வதம்தான்.

அதனால்தான் சினிமா, டி.வி. நாவல் எல்லாவற்றிலும் அதற்கு அப்படி ஒரு ரத்தினக் கம்பள வரவேற்பு...

புராணகாலம் தொட்டே இதுதான் நிலை...

ஏன் இந்த ஒரு விஷயம் மட்டும் திகட்டாதபடி ஜெயித்துக் கொண்டேயிருக்கிறது என்று நான் யோசித்ததுண்டு. வாழ்வில் எத்தனையோ உணர்வுகள். பாசம், அன்பு, கடமை என்று அந்த உணர்வுகளின் தளங்களும் மிகப் பெரியவை. ஆனால் காதல் உணர்ச்சி மட்டும் எல்லா மனித மனதுக்கும் பொதுவாக இருக்கிறது. அதனால்தான் அது மிக நேசிக்கப்படுகிறது.

இதே காதல் இளமையில் மயக்கி பின் நடுமையில் மாறிப்போய் விடுகிறது. அதைத்தான் இந்த தொடரில் சொல்லியிருக்கிறேன்.

பொதுவில் காதல் என்பது என்ன? அது ஒரு அன்புமயமான ஒன்று என்று மட்டும் சொல்லிவிட



முடியாது. பின் அம்மா அப்பா மேல், சகோதர சகோதரிகள் மேல் இருப்பதும் அன்புதானே... அதைக் காதல் எனலாமா? என்றெல்லாம் கேள்விகள் எழும்.

ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே காமத்தின் நிமித்தமும் நேரிடும் அன்புதான் காதல். அதை எப்படி காமமில்லாத நட்பு, பாசத்திடம் பொருத்திப் பார்க்க முடியும்?

அதனால்தான் பல காதல் காமம் தீர்ந்தவுடன் அதுவும் தீர்ந்துவிடுகிறது.

காமம் வேறு காதல் வேறல்ல இரண்டு எமனும் ஒன்றுதான் என்பது சிலரின் காட்டமான வாதம். என் வரையில் அதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஒரு பெண்ணை பார்த்த மாத்திரத்தில் காதல் என்றால் அது அவள் உருவ ஈர்ப்பால் வந்ததுதானே?

பழகிப் பார்த்து அன்பு பரிமாற்றம் செய்து கொண்டு மனதைத் தான் காதலிக்க வேண்டும் என்றால் உலகில் ஊனமுற்ற, குருட்டுப் பெண்களே அதிகம் காதலிக்கப் படுவர். ஏனென்றால் அவர்கள் மனதிற்குதான் ஊனத்தை வென்ற சக்தியும், ஏகத் தனித் தன்மைகளும் உண்டு.

ஆனால் அவர்களை இன்று எண்ணிப் பார்க்க ஒருவரும் இல்லை. அழகை பார்த்து விழத்தான் ஆசைப் படுகிறோம்.

இந்த விடுதலைதான் சற்றே தெளிந்த காமத்தைக் கடந்த மூத்த சமூகம் எதிர்க்கிறது.

காமத்திற்காக உயிரை விடாதே. அதற்காக சாதி சமய இரு மொழியின் தனித்தன்மைகளை துறந்து விடாதே. நீ எதிர்பார்க்கும் காமம் நாங்கள் உனக்காக அழைத்து வரும் பெண்ணிடமும் உண்டு. அவளிடம்

அதைப் பெற்று, அவளுக்கும் அதைக் கொடுத்து மரபு களைச் சிதைக்காமல், மதியிழக்காமல் வாழ்ந்து செல்... என்கிறது.

இது எந்த அளவு சரி...? இது எந்த அளவு சாத்யம்? இது எந்த அளவு நியாயமானது? என்பதெல்லாம் விடை காணப்படாத கேள்வியாகவே இன்றளவும் இருப்பவை.

இத்தொடரில் இந்த கேள்விகளுக்கெல்லாம் விடை தேடிப் பார்த்தேன். ஒரு நடுநிலையாளன் போல இரு தரப்புக்கும் இடமளித்துப் பேசிச் செயல்பட்டேன். இறுதியில் என் கருத்தாக காதலர் பக்கம் சாய்ந்து இந்த கதைப் போக்கை பொறுத்தமட்டில் அப்படிச் செய்வதே சரி என தீர்மானித்தேன்.

என் முடிவை நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள் என நம்புகிறேன்.

வாசக உலகம் பலத்த ஆதரவு தந்தது.

'இதயம் பேசுகிறது' இதழும் புத்தெழுச்சியோடு வெளியிட்டு உற்சாகமூட்டியது. ஆசிரியர் முருகன் மிக வித்யாசமாக என்னை மர்மக்கதை எழுதப் பணிக்காமல் குடும்பப்பாங்காக எழுத வைத்துப் பார்த்து எனக்கு சுதந்திரம் அளித்தார். அவர் ஆசிரியர் குழுவினர் காட்டிய அன்பும் ஆதரவும் மறக்கமுடியாதது.

இதயம் பேசுகிறது இதழிற்கும் அதன் வாசக உலகத்திற்கும் இதை நூலாக்கி அளிக்கும் திருமகள் நிலையம் பதிப்பகத்திற்கும் என் நன்றிகள் என்றும் உரியது.

27.4.99 — பணிவன்புடன்,

மதுரை-3 — **இந்திரா சௌந்தர்ராஜன்**



## வாசகர் கடிதம்

வித்யாசமான தொடர்... அதுவும் இந்திரா சௌந்தர் ராஜனின் கைவண்ணத்தில் இது மிக வித்யாசமான தொடர். இரண்டு காதல் ஜோடிகளை களத்தில் உலவ விட்டு முதல் முறையாக இரண்டு ஜோடிகளின் நான்கு பெற்றோர்களையும் ஒன்று சேர்த்து குழுவாக்கி, அவர்களை பொதுவான வில்லனாக்கி ஆசிரியர் கதை அமைத்திருப்பது புதுமையான ஒன்று.

முடிவில் காதல் ஜோடிகளை பிரிக்காமல் சேர்த்து வைத்து புண்ணியத்தைகட்டிக்கொண்ட விதத்தில் அவரைப் பாராட்டுகிறேன்.

**பத்மா ரவி, செங்கல்பட்டு.**

இதயம் வந்ததும் முதலில் வாசிப்பது இந்த தொடரைத் தான். ஒரு மர்மக்கதை போல அத்தனை வித்யாசம். கொலை, ரத்தம், போலீஸ் துப்பு துலக்கல் எல்லாம் இருந்தால் தான் விறுவிறுப்பு வரும் என்று நினைத்திருந்த எனக்கு இந்திரா சௌந்தர்ராஜன் சரியான பாடம் கற்பித்தார் என்றே சொல்ல வேண்டும்.

மனித மனங்களையும் அதன் கோணல்களையும் சொல்லும் விதமாக சொன்னாலே மர்மம் தானாக வரும் என்று அவர் நிரூபித்திருக்கிறார்.

காதலை அக்கு வேறாக ஆணி வேறாக அலசிச் சலித்துப் பார்த்துவிட்ட இந்த தொடர் என் வரையில் ஒரு குறிஞ்சிமலர்!

**R பாபு கணேஷ், திருச்சி – 2**

தொடரை வாசிக்கத் தொடங்கும் போதே முடிவெடுத்து விட்டேன். இது விஷுவல் மீடியாவுக்கென்றே பிரத்யேகமாக சிந்தித்து இந்திரா எழுதும் கதை என...

என் நினைப்பை அவர் பொய்யாக்கவில்லை. விரைவில் இது தொலைக்காட்சியில் வெளிப்படுத்தப் போவதாக அறிந்தேன். எப்படி கதையாக வந்தபோது கவர்ந்ததோ அதை விட மீடியாவில் இது பல மடங்கு வரவேற்பு பெறும், Best of luck.

அன்புடன்

**வசந்தகுமார், மதுரை**

நல்ல கதை... நல்ல நடை... நல்ல திருப்பங்கள் நல்ல அலசல்... நல்ல Lead points. நல்ல முடிவு!

அன்புடன்

மாணிக்கம், கோவை – 6

முடிவு மிக சினிமாத்தனமானது. ஆனால் நாங்கள் எதிர் பார்க்காதது. கதை மிக சுவாரஸ்யமாக சென்றது. அதே சமயம் தாவல்களும், சில இடத்தில் இழுபட்டது என்பதையும் கூறத்தான் வேண்டும். இந்திரா விஷுவல் மீடியாவில் தொடர்ந்து சாதிக்க காரணம் இந்த தொடரை படித்தால் புரிந்து விடும்.

இளசைகுமாரன் சென்னை – 18

அன்புள்ள இந்திரா சௌந்தர்ராஜன், வணக்கம்.

ஐயா... உங்களுக்குத்தான் எத்தனை விதமான கரங்கள்? ஒன்று சரித்திரம் எழுதுகிறது. ஒன்று மர்மத்தில் அமர்க்களம் செய்கிறது. இன்னொன்று சமூகத்தில் காதைத் திருகிச் சிந்திக்க வைக்கிறது.

கல்கி, சுஜாதாவுக்கு பிறகு பல முனைகளில், பல விதங்களில் எழுதும் ஒரே எழுத்தாளர் தாங்களே என்பது என் தீர்மானம்.

சுவை, சுவாரஸ்யம், செறிவு எல்லாம் உங்கள் எல்லா படைப்பிலும் பரவிக் கிடக்கிறது. தென் கிழக்கு மின்னலை படித்துவிட்டு இந்த காதல் சதுரங்கத்திற்கு வந்தால் அடேயப்பா எத்தனை வேறுபாடு... எத்தனை வேறுபாடு...

பெங்களூரில் உங்கள் புத்தகத்திற்கென்றே ஒரு தனி கூட்டம் இருக்கிறது. அந்த வாசகக் கூட்டத்துடன் நீங்கள் ஒருநாள் அமர்ந்து விவாதித்து விருந்தும் உண்ண வேண்டும்.

இந்த காதல் சதுரங்கம் பற்றி சன் டிவி. வணக்கம் தமிழகத்தில் தான் விரிவாக அறிந்தேன். அந்த பேட்டியும் சரி, உங்கள் வெளிப்பாடும் சரி மிக அருமை.

கதை முடிவை நிச்சயமாக நான் இப்படி எதிர் பார்க்க வில்லை. Excelent அது சரி நீங்கள் காதலுக்கு எதிரியா... நண்பனா? அதுவும் புரியவில்லை.

அன்புடன்,

ஜெயந்தி நாகராஜன், பெங்களூர் – 86

# காதல் சதுரங்கம்

## 1

'காதல்
விசித்திர மந்திரம் இது! ஓதுபவர்களுக்கு
எப்பொழுதும் நேர் எதிர் பலன்களையே
தரும்.'

விடிந்து கொண்டிருக்கிறது.

இருளின் காதைப் பிடித்துத் திருகி முதுகில் நாலு வைத்து அதைத் துரத்தி அடித்தபடி நிமிர்ந்து பார்க் கிறான் கதிரவன்!

ஆடி மாதத்து வானம் ஆகையால் பழைய மெத்தை யின் அழுக்குப் பஞ்சாக மேகக் கூட்டம் சூழக் கிடப்ப தால் எட்டிப் பார்க்கும் கதிரவனின் கதிர்க் கரங்கள் மதுரைக்குள்ளே அவ்வளவாக ஊடுருவ முடியவில்லை!

இல்லாவிட்டால் இந்த வினாடி ஜோதி ஷங்கரின் லாவண்யமான பங்களாவின் மாடி அறைக்குள் கண்ணாடிச் சாளரம் வழியாக அது நுழைந்திருக்கும். ஃபோம் மெத்தை மேல் ரோஜா நிறக் கம்பளிக்குள் மர வட்டையாய் முகம் மட்டும் வெளித் தெரிய சுருண்டு கிடக்கும் அவன் முகத்தின் மேலும் பட்டு சுள்ளென்று இளஞ் சூட்டைத் தாளித்திருக்கும். அவனும் கண்களைக் கசக்கியபடி விழித்திருப்பான்.

இருந்தாலும் அது செய்யத் தவறியதை அலாரம் டைம்பீஸ் ஆறு மணி எனும் எல்லையைத் தொட்டு அலறியபடி செய்ய ஆரம்பிக்கிறது.

ஜோதி ஷங்கரும் அஷ்ட கோணங்களோடு சோம்பல் முறித்து பலிக் கோழி போல் சிலுப்பல்களோடு எழுந்திருக்கத் தொடங்குகிறான்.

அலாரம் சப்தம் மாடியைக் கடந்து கீழ் வரை பாய்கிறது.

நடுஹாலில் நல்ல நவீன சோபா கிடக்கிறது. அதில் இந்தியன் எக்ஸ்பிரஸை மேய ஆரம்பித்திருக்கும் அவனது அப்பா தர்மராஜன் தனது சுமாரான வழுக்கைத் தலையை உயர்த்தி மாடிப்பக்கம் பார்க்கிறார் - நிறைய ஆச்சர்யப்படுவதை அவரது பரந்த நெற்றியின் சுருக்கங்கள் காட்டுகின்றன.

கொட்டக் குழம்பாட்டம் காபி தம்ளரோடு வரும் ராஜேஸ்வரியும் அவருக்குச் சளைக்காத ஆச்சரியத்தோடு மாடியைப் பார்க்கிறாள்.

"என்ன ராஜேஸ்வரி இது - அலாரம்லாம் அடிக்குது?"

"அதானே... ஐ.ஏ.எஸ். பரிட்சை எழுதப் போனப்ப கூட இந்தப் பய எட்டுமணிக்கு எழுந்தரிச்சதில்லியே...?"

-அவர்களின் ஆச்சரியத்தைக் கூட்டுவதுபோல ஜோதி ஷங்கர் ஜாகிங் உடுப்புடன் படி இறங்க ஆரம்பித்திருக்கிறான்.

"என்னடா ஜோதி இது அதிசயம்... ஆறுமணிக்கே எழுந்திரிச்சுட்டே! உடுப்பெல்லாமும் ஒரு மாதிரியா இருக்கு?" தர்மராஜன் வியப்பை கேள்வியாக்குகிறார்.



"ஆமாம்ப்பா... இன்னில இருந்து தினம் காலைல ஓடப் போறேன். காலைல ஓடின அன்னிக்கு பூரா பிரிஸ்கா இருக்கலாமாமே...?"

"அப்படின்னு யார் சொன்னது?"

"நம்ப ஃபேமிலி டாக்டர்தான்." சொன்னபடி அங்கேயே ஸ்டெப் எடுக்க ஆரம்பிக்கிறான்.

"டேய் காபி குடிச்சிட்டுப் போடா..."

"எல்லாம் வந்து..." - ஓடிக் கொண்டே சொல்கிறான். வாசல் மெயின் கேட் வரை சாதாரணமாக ஓடி பின் அசுர வேகம் எடுக்க ஆரம்பிக்கிறான்... ஜாகிங் போலவே தெரியவில்லை! வேறு எதற்கு?



வெள்ளைத்தாளைச் சுருட்டி எடுத்துக் கொண்டு, இளக்கமான கூந்தல் பின்னலை மார்முன் போட்டுக் கொண்டு வாசலைத் தாண்டுகிறாள் வசந்தா.

"அம்மா நான் இன்ஸ்ட்டியூட் போய்ட்டு வரேன்..." பேசியதில் இருந்து குரலில் குயில் குடி இருப்பது தெரிகிறது. நல்ல உயரம், சிம்ரன் ஜாடை! சாதாரண கைத்தறிப் பாவாடை தாவணிதான்! ஆனாலும் தைத்து அணிந்து தாவணி முகப்பை இடுப்பில் செருகாமல் தழையத் தொடங்க விட்டு நடப்பதில் அதி அற்புத கலா லாவண்யம் இழைகிறது.

சின்ன ஸ்டிக்கர் பொட்டும், அது ஒட்டியிருக்கும் பளிச்சென்ற நெற்றியும், திருத்தமான மூக்கும், சுழித்த உதடும், ஜாம் பூசின கன்னங்களும் பிரம்மன் இவளைப் படைக்க சற்று சிரத்தை எடுத்துக் கொண்டதை உணர்த்துகின்றன.

அதிக அகலமோ இல்லை... குறுகலோ இல்லாத சுமாரான வீதி அது. ஆயிரத்து சொச்சம் சம்பளக் காரர்களுக்கு மட்டும் என்றே மாறியும் போனது. பெரும் பாலும் வாடகை வீடுகள்! அந்த வீடுகளில் விடலைகள் இருந்ததால் அவர்கள் இப்பொழுது வாசற்படியில் நின்று கொண்டிருக்கிறார்கள்.

வசந்தா தங்கள் வீட்டு வாசலை கடந்த பிறகுதான் உள் பக்கமே திரும்புகின்றனர். சாதாரணமாக வீட்டுக் குள் சட்டையோ பனியனோ போடவே மாட்டான் கதிரேசன், இப்பொழுதெல்லாம் தூங்கும்போது கூட அதைக் கழட்டுவதில்லை.

தெருவே அதிரும்படி பேசுவதும் 'திம்திம்' என்று நடப்பதும் நடராஜனுக்கு வாடிக்கை! அவன்கூட மாறிப் போய் 'நிதானமாக நடந்து நளினமாக பேசுவது' என்று மாறியிருக்கிறான்.

தங்க பாண்டிக்கு புரோட்டின் குறைவோ என்ன எழவோ, 18 வயதாகியும் மீசை துளிர்க்கவில்லை! முகத் தில் பால் வடிதலும் மாறவில்லை. வெம்பிப் போய் ஐப்ரோ மீசை போட்டுக் கொண்டிருக்கிறான்.

ஒரு பெண்ணால் ஒரு வீதியே இப்படி மாறிப்போகுமா என்ன! 'அழுத்தமான அழகு! அதுவும் எட்டக் கூடிய உயரத்தில்!' என்று இருந்துவிட்டால் மிக சகஜமாகி விடுகிறது இந்த விஷயங்கள் எல்லாம்! ஆண்களுடைய தரப்பில் மட்டும்தானா இந்த மனவேதியல் மாற்றங்கள்... பெண்களுக்கில்லையா என்ன...?

வசந்தா முகத்திலும் ஒரு குறுஞ்சிரிப்பிருக்கிறது. 'ஈர உதட்டில் சின்ன இடத்தில் அது இருக்கிறது' என்று கூற முடியாவிட்டாலும் இருக்கிறது! வாலிப பார்வைகள்



தன்னை மேய்வது 'தப்பா சரியா' என்று அவளால் பிரித்துப் பார்க்க முடியவில்லை... ஆனால் உணர்ச்சி களுக்கு அது பிடித்திருக்கிறது!

சாதாரண மெக்கானிக்கின் மகள் என்கிற தாழ் வுணர்ச்சிக்கு இவர்கள்தான் வெள்ளையடிக்கிறார்கள், "வீடு கூட்டுவது... பாத்திரம் தேய்ப்பது என்பதை மீறிய ஒரு சக்திப் பொருள் தன்னிடம் இருக்கிறது! அதற்கு இந்த சமூகத்தில் நல்ல மதிப்பும் கிடைக்கும்!" என்பதாக ஒரு அர்த்தப்படுத்தலில் கொஞ்சம் கர்வமும் பூத் திருக்கிறது.

இல்லாவிட்டால் எதிர்வரும் பகவதி பாட்டியைப் பார்த்ததும் பார்க்காத மாதிரி போவாளா என்ன? இயல்பான நடை மாறி சற்று விரைவும், கையசைப்பில் ஒரு வகை 'விசுக் விசுக்'கும் வருமா என்ன?

"யாரு வசந்தாவா போகுது?

"ஆமாமா; மெக்கானிக் மாணிக்கம் பொண்ணு வசந்தாதான்."

"என்னாச்சு இவளுக்கு - இந்த வெட்டு வெட்டறா?"

"எல்லாம் வயசு படுத்தற பாடுடி! நீதான் வெட்ட லையா - இல்ல நான்தான் வெட்டலையா?"

குழாயடிப் பெண்கள் இரண்டு பேர் எக்ஸ்ரே பார்வை பார்த்து தீர்மானம் வாசிக்கும்போது கச்சிதமாக அந்தத் தெருவுக்குள் நுழைகிறான் ஜோதி சங்கர் இந்த இரண்டு பெண்கள் கவனிப்பது தெரியாமல் ஒரு கடிதத்தை வசந்தா வசம் குதித்தபடியே சேர்க்கிறான்.

அவளும் வேகமாக வாங்கிக் கொண்டு ஜாக்கெட் டுக்குள் தள்ளி விட்டுக் கொண்டு நடக்கிறாள்.

"அடக் கருமமே... இது எத்தனை நாளா?"

- குழாயடியில் கலக்கம்!



டைப்ரைட்டிங் இன்ஸ்ட்யூட்!

ஏகத்திக்கும் 'தட் தட்' சப்தங்கள். தனது மெஷினுக்கு முன் அமரும் வசந்தா பேப்பரை ரோலரில் இன் செர்ட் செய்து செட் பண்ணிவிட்டு சுற்றிச் சுற்றிப் பார்த்தபடி ஜாக்கெட்டுக்குள் கையை விட்டு, ஜோதி ஷங்கர் தந்த கடிதத்தை எடுக்கிறாள்.

முன்னால் சின்ன நடுக்கத்தோடு விரித்தபடி பார்த்து படிக்க ஆரம்பிக்கிறாள். 'என் வசந்தமே' என்று துவக்கத்திலேயே அவளை தேன் கொட்டாரத்தில் தள்ளுகிறான் ஜோதி ஷங்கர். அந்த நொடி அவளைப் பொறுத்து உலகில் துன்பம் என்ற ஒன்றே இல்லை. கடிதம் தொடர்கிறது.

'உனக்காகவே இன்று அலாரம் வைத்து ஆறு மணிக்கு எழுந்தேன். ஒண்ணரை மைல் தூரம் ஜாகிங் என்று ஓடியும் வந்திருக்கிறேன். இனி இன்றைய தினம் எனக்கு உற்சாகமாகக் கழித்துவிடும். கொஞ்சம் டல்லடித்தாலும் பர்சிலிருக்கும் உன் பாஸ்போர்ட்டைப் பார்க்க, அது ஒரு பாட்டில் குளுகோஸ் ஆகி உள்ளே நுழைந்து விடும். போகட்டும் இன்று மாலை ஆறு மணிக்கும் மறக்காமல், மீனாட்சியம்மன் கோவில் ஆயிரங்கால் மண்டபத்துக்கு வந்து விடு... எனக்கும் ஒரு கோவிலில் இரண்டு அம்மனைத் தரிசித்த பாக்யம் கிடைக்கட்டும்!"

இப்படிக்கு

உன் ஊனில் உயிரில் குடி புகுந்த

ஜோதி ஷங்கர்.



மீனாட்சியம்மன் கோவில்!

நிறைய மாறி விட்டிருக்கிறது. சைக்கிள் ஸ்டாண்டில் சைக்கிளை நிறுத்திவிட்டு டோக்கனுக்காக கை நீட்டும் வேணு அதில் ஐம்பது பைசா கட்டணம் என்பதை அடித்து விட்டு "ஓர் ரூபா தா!" எனும் தெனாவெட்டான மனிதனைப் பார்த்து முறைக்க ஆரம்பிக்கிறான்.

"என்னா முறைக்கறே...? ஃபீசைத் தந்துட்டு போய் கிட்டே இரு..."

"தரேன்... எட்டணாக்கு மேல ஒத்த காசு தர மாட்டேன்."

"அப்ப வண்டிய நிறுத்தாதே... எடு."

"என்னய்யா அநியாயம் இது... எட்டணான்னு அப்ப எதுக்கய்யா இதுல போட்டுருக்கீங்க...?"

"அநாவசியமா. பேசாதே... லட்சக் கணக்குல பணம் கட்டி காண்ட்ராக்ட் எடுத்தீன்னா தெரியும்..."

"கோவில்ங்கறது பணம் பிடுங்கற இடம் கிடையாது தெரிஞ்சிக்கோ. உன்னை யாரு காண்ட்ராக்ட் எடுக்கச் சொன்னது?"

"இஷ்டமிருந்தா வண்டியை நிறுத்து... இல்லாட்டி போய்க்கிட்டே இரு..." காண்ட்ராக்ட்காரன் பேசிய படியே ஒரு பைக் நிறுத்திய நபர் பக்கம் திரும்ப அவர் கேட்ட காசைக் கொடுத்துவிட்டு போய்க் கொண்டே யிருக்கிறார்.

"பாத்தியா... இப்படி ஜென்டிலா நடந்துக்க... ஆமா..." ஒரு கீறு வேறு கீறுகிறான் அவன்.

"ச்சை...!" சலிப்போடு ஒத்த ரூபாயை விட்டெறிந்து விட்டு சாலையை ஆக்ரமித்து நிற்கும் வியாபாரிகளை, ஜனங்கள் கோயில் மாடுகளைக் கடந்து தெற்கு கோபுர வாசலுக்கு வந்து செருப்பு விடச்சென்று அங்கேயும் இதே கட்டணத் தகராறு பண்ணி 'சில்லரை இல்லை' என்று பதிலுக்கு தலையில் கட்டப் பார்த்த கற்பூரத்தை அரை மனதாக வாங்கிக்கொண்டு, முகத்தில் இடிக்கிற குறையாக காசு கேட்கும் பிச்சைகாரர்களிடம் இருந்து தப்பித்து கோயிலுக்குள் நுழைபவன் கைக் கெடி காரத்தைப் பார்த்துவிட்டு ஒரு துள்ளு துள்ளுகிறான். மணி ஏழு!

"ஐய்யய்யோ.. ஆறு மணிக்கே வந்திருப்பாளே அனு!" - வாய்விட்டு முனங்கியபடி ஓட ஆரம்பிக்கிறான். விபூதிப் பிள்ளையாரைக் கடந்து, பொற்றாமரைக் குளத்து காவியடித்த கருங்கல் படிகளில் கண்களை பரக்க பரக்க அலைய விட்டதில் அகப்படுகிறாள் அனுவும்!

'சுடிதார், போனி டைல் லாக்கெட் செயின்' என்கிற பணக்கார நாகரீக லட்சணங்கள்! முன்னிரண்டு காலை உயர்த்தி நடுவில் முகம் புதைத்தபடி அரையடிக்கு தேங்கி நிற்கும் குளத்துத் தண்ணீரைப் பார்த்தபடி அமர்ந்திருக் கிறாள்!

"பார்ட்டி ரொம்ப நேரமா காத்துக்கிட்டிருக்கு துடா..."

"லவ்ஸா- இல்ல டாவா? நைஸா ரேட் எவ்ளோன்னு கேட்டுப் பாரேன். ஓ.கே.ன்னா சினிமா தியேட்டர் பக்கம் தள்ளிக்கிட்டு போய்டுவோம்."



"அப்படியே சென்ட்ரல் ஜெயிலுக்கும் போக வேண்டியிருக்கும் பரவால்லியா?"

- இரண்டு விடலைகளின் வக்ரத்தை சாதாரண மாக எதிர் கொண்ட கோபத்தோடு முட்டிக்கால் திரும்ப முகம் புதைக்கிறாள் அனு!

- அவளைப் பார்த்துவிட்டு ஓடி வருகிறான் வேணு.

"ஹாய் அனு... சாரிடா லேட்டாயிடுச்சு.." சொன்ன படி மடித்துக் கட்டிய வேட்டியை அவிழ்த்துவிட்டுக் கொண்டு அவள் பக்கமாக உட்காருகிறான். அவள் உடனே ஒதுங்கி உட்காருகிறாள்.

"நீ கோபிப்பேன்னு தெரியும். என்ன பண்ணச் சொல்றே? ஷிப்ட் முடியவே ஆறு மணியாயிடுச்சு. சூப்ரவைசர் கரெக்டா அப்ப பார்த்து ஒரு ஜாப்பைக் கொண்டு வந்து முடிச்சுக் கொடுத்துட்டு போங்கறான். 'போடா நாயே... வேற ஆளைப்பாரு'ன்னு சொல்லி, அவனை சமாளிச்சிட்டு சைக்கிள் பஞ்சர் எல்லாத்தையும் மீறி கோவிலுக்கு வந்தா இங்க பகல் கொள்ளை! செருப்பு சைக்கிள் எல்லாத்துலையும் பணம் பிடுங்கறாங்க.

மீனாட்சியம்மன் இவங்ககிட்ட மாட்டிகிட்டிருக்கா அனு, இப்படி எல்லாம் ஒரு அனுபவம் ஒரு சர்ச்சுக்கு போனாலோ, இல்லை... மசூதிக்குப் போனாலோ ஏற்பட்றதேயில்லை... ச்சசே!"

- கட கடவென்று மழைச் சொட்டாய் பேசிவிட்டு அந்த ஆத்திர உணர்வின் வசம் திரும்ப அலைப்படு கிறான். 'பக்கமாய் ஒரு காதலி பனிக் கட்டியாட்டம் இருக்கிறாளே இப்பொழுது போய் யாராவது ஊர்க்கதை பேசி விசனப் படுவார்களா' என்கிற சிந்த னையோ விவேகமோ இருக்கிற மாதிரியே தெரிய வில்லை!

அவள் அந்த கோபக்கார மனிதன் பக்கம் மெல்ல திரும்புகிறாள். சுருட்டைத் தலையும் சின்னக் கண்ணும் அடர்ந்த மீசையுமாம் இரும்புத்திரை படத்து சிவாஜி யாட்டம் தெரிகின்றவனைப் பார்க்கப் பார்க்க அவளது கோபம் ஆவியாகிறது. இடது கை அவன் வலது கையைத் தேடிப் பற்றுகிறது. அவனையும் அது என்னவோ செய்கிறது. அவள் பக்கம் திரும்புகிறான். ஒரு மனித தேகம் நெருப்பில்லாமல் எப்பொழுது எரியும் என்பது அவனுக்குப் புரிய வருகிறது.

“காதல்ல காத்திருக்கிறது ஒரு மகாசுகம்! அதுலை யும் உன்னைப் போல சமூகப் பிரக்ஞையுள்ள கோபக் காரனுக்காகக் காத்திருக்கிறது பெரிய சுகம் வேணு...”

- அவள் கிசுகிசுக்கிறாள். அவன் பார்த்துக் கொண்டேயிருக்கிறான். சற்று அக்கம் பக்கமும் பார்க் கவே கையை மட்டும் விலக்குகிறாள். ஆனால் அவனால் விலக முடியவில்லை. அந்த வைர மோதிரம் தரித்த கையை இழுத்துப் பிடிக்கிறான். அவன் கையில் ஒரு வெள்ளி மோதிரம்... அதில் ஒரு சின்ன செம் பவழக்கல்.

“இது ராசிக்கல் மோதிரம்... இதைப் போட்டா வாழ்க்கையே மாறிப் போகும். நினைச்சதெல்லாம் நடக்கும்.” கேகே. நகரில் ஒரு கிழட்டு ஜோசியர் முன்னூறு ரூபாயை அவனிடம் பறித்துக் கொண்டு சொன்னது.

“வாழ்க்கை மட்டும் மாறாம இருக்கட்டும்... உங்களை வந்து கவனிச்சுக்கறேன்...” என்று பாதி நம்பிக்கை பாதி சந்தேகத்தோடு அவன் வாங்கிப் போட்டுக் கொண்ட மோதிரம் அது.

வாழ்க்கை மாறித்தான் போய் விட்டது. இல்லா விட்டால் அவன் வேலைக்குப் போகும் அனு இண்டஸ்ரீஸ்



கம்பெனியின் முதலாளி மகளே காதலியாக வந்து மாட்டு வாளா என்ன?

“ஏய் கைய விடு... இது கோவில்!” அவள் விடுபடப் பார்க்கிறாள்.

“முடியலியே... பூட்டிக்கிட்ட மாதிரி இருக்கு சாவி காணாம போச்சு.”

“போகும்... போகும்...” அவள் வேகம் காட்டி கையை விடுவித்து பின் மார்போடு கட்டிக் கொள்கிறாள். அவனும் விடுபட்டு சுற்று முற்றும் பார்க்கிறான். பின் மெதுவாய்க் கேட்கிறான்.

“சந்திக்கணும்னா ஆயிரம் வெளியிடம் இருக்கு. கோவிலுக்கு எதுக்கு வரச் சொன்னே?”

“காரணமாத்தான்... எழுந்திரு. சாமி கும்பிடப் போவோம்.”

“சரிதான் சாமி கும்பிடத்தான் கூப்டியா?”

“இல்ல... அவகிட்ட நம்மைக் காப்பாத்தச் சொல்ல.”

“அதுக்கென்ன... சொல்லிட்டா போச்சு. ஆமாம். என்ன திடீர்னு அவமேல இத்தனை பக்தி?”

“எனக்கு எப்பவுமே உண்டு. உனக்குத்தான் கிடை யாது!”

“எனக்கு இல்லைன்னு உனக்கு யார் சொன்னது...?”

“எல்லாம் எனக்குத் தெரியும். இந்தக் கம்யூனிஸ்ட் டுங்களப் பத்தி தெரியாதா என்ன?”

“வேற என்னல்லாம் தெரியும்...?”

“அதை நாளைக்கு ராஜாஜி பார்க்கில சந்திக்கும் போது சொல்றேன். இப்போது எழுந்திரி...”

"போகலாம் உக்காரு. மீனாட்சி ஒண்ணும் கோவிச்சுக்க மாட்டா..."

"ஆனா யாராவது நம்மளை இங்க பார்த்து அப்பா கிட்ட போய் போட்டு விட்டா அப்பா கோபிப்பார். அப்புறம் கதை கந்தல ஆயிடும்."

"காதலிக்கறவங்களுக்கு முதல் தேவை துணிச்சல்! அதைத் தெரிஞ்சுக்கோ..."

"விவேகமான துணிச்சல்னு அதை மாத்திக்கோ வேணு - எழுந்திருன்னா..."

சொன்னபடியே எழுந்திருக்கிறாள். அவனும் அவளும் நடக்கத் தொடங்குகின்றனர். சன்னதி முகப்பில் போய் நிற்பவர்கள் சுற்றி ஒரு பார்வை பார்த்துக் கொள்கின்றனர்.

"வேணு..."

"என்ன...?"

"ஒரு தேங்காய் பழத்தட்டு வாங்கிட்டு வந்துடேன்..."

"ஏன் வெறும கும்பிட்டா ஆகாதா? இந்த தேங்கா பழத்தை எல்லாம் மீனாட்சி சாப்பிட்றதில்ல அனு..."

"சொன்னதைக் கேளுடா..."

"சரிடி..." - செல்ல முணுமுணுப்போடு பிரிகிறான். அவள் ஒரு ஓரமாக ஒதுங்கி நிற்கத் தொடங்குகிறாள்.

●●●

**பூ**ஜைத் தட்டுடன் வந்து கொண்டிருக்கிறாள் வசந்தா. "சீக்கிரம் வா... திரை போட்டுடப் போறாங்க..." அவளைப் பார்த்து குரல் கொடுத்தபடி இணைந்து கொள்பவன் ஜோதி ஷங்கர். இருவருமே வேகமாக நடை போடுகின்றனர்.



கிழக்கு கோபுர வாயிலில் இருந்து நேராக அம்மன் சன்னதி நோக்கிய நடை!

"ரொம்ப நேரம் பேசிக்கிட்டிருந்ததுல நேரம் போனதே தெரியலை. சாமியை மறந்தே போயிட்டோம்..." - அவள் தாவணியைச் சரி செய்தபடி சடைத்துக் கொள்ள -

"நல்ல உத்தரவு வரணும்னு வேண்டிக்கோ வசந்தி..." - என்று சற்று பயம் காட்டத் தொடங்குகிறான் ஜோதி.

"என்ன சொல்றீங்க ஜோதி...?"

"நாம கல்யாணம் பண்ணிக்க மீனாட்சி உத்தரவு தரணும்... அதைச் சொன்னேன்..."

"அவ தரலைன்னா பண்ணிக்க மாட்டீங்களா?" - நின்று வெடுக்கென்று கேட்கிறாள்.

"பைத்தியம்... அதுக்கு அர்த்தம் அப்படியில்லை. உடனே பாயறியே - உனக்குத்தான் என் நிலைமை தெரியுமே..."

"என்ன பெரிய நிலைமை - ஜோதி நீங்க என்னை ரொம்ப பயமுறுத்தறீங்க..."

"பயமுறுத்தலைடா... பிரச்சினையச் சொன்னேன். இன்னிக்கு கூட மாமா வந்துட்டார். மாப்ள எப்ப கல்யாணத்த வெச்சுக்கலாம்... சீக்கிரமா அனு கழுத்துல தாலியக் கட்டுங்கன்னு ஒரே பினாத்தல்"

"என்ன சொன்னீங்க?"

"இப்ப எதுக்கு மாமா கல்யாணம்... பின்னால பாத்துக்கலாம்னு சொன்னேன்."

"எத்தனை நாளைக்கு ஜோதி இப்படி சமாளிக்கிறது? எங்க வீட்லையும் எங்கம்மா என் மாமா பையனை

வேணுவைக் காட்டி பயமுறுத்திக்கிட்டேயிருக்காங்க... நாம சீக்கிரம் ஒரு முடிவுக்கு வரணும்."

"வருவோம் வருவோம்... இரு... போய் அர்ச்சனை டிக்கட் வாங்கிட்டு வந்துட்றேன்" - ஜோதி ஷங்கர் பர்ஸில் கை வைத்தபடி நழுவ ஒதுங்கி ஓரமாக நிற்க ஆரம்பிக்கிறாள் வசந்தா.

சில வினாடிகளுக்குப் பிறகு நடந்து சன்னதி வாசலுக்கே போய்விடுவோம் என்று நடந்தபோதுதான் பாய்ச்சலோடு வரும் வேணு பழத்தட்டுடன் அவள்மேல் எதிர்பாராதாவிதமாக மோதிக் கொண்டான்!

மோதின வேகத்தில் வசந்தாவைப் பார்த்துவிட்டு பதறவும் தொடங்கினான்.

"ஏய் நீ எங்க இங்க?"

"நீங்க எங்க இங்க?"

"கோவிலுக்கு எதுக்கு வருவாங்க டான்ஸ் ஆடவா?"

"யார் கண்டா... சாமியில்ல பூதமில்ல ஆசாமி யாச்சே நீங்கள்லாம்... அதுக்காக கூட இருக்கும்..."

"அறைஞ்சேன்னா?" - கோபிக்கும் போதே வேணு தூர நிற்கும் அனுவைப் பார்க்கிறான். அவளோடு இப்பொழுது ஜோதி ஷங்கரும் நிற்கிறான்.

"எங்க அனு இங்க?"

"சும்மா... சும்மா வந்தேன்"

"நானும் தான்... நானும்தான்... வா போகலாம்." - ஜோதி சமாளிக்கப் பார்க்கிறான்.

அவளிடமும் பதட்டம்.... இந்த வேளை பார்த்து வேணு வந்து விட்டால் என்னாவது என்கிற பதட்டம், பயம்!



அவனுக்கும் வசந்தா வந்து விட்டால் என்னாவது என்கிற பயம் - பதட்டம்!

இருவரும் சன்னதிக்குள் நுழைகின்றனர்.

பின்னாலேயே அதே சமாளிப்பைத் தொடர்ந்தபடி வேணுவும் வசந்தாவும்!

காதல் ஜோடிகளாக நுழைய ஆசைப்பட்டவர்கள் பெரியவர்கள் விரும்பும் ஜோடிகளாக மாறி நுழைகின்றனர்!

# 2

*'காதல்!*
*மோசமான இந்த மின்சார உணர்வு*
*விளக்காய் எரிவதை விடவும்-*
*விறகாகி எரிப்பதில்தான்*
*முன்னிலை வகிக்கிறது!'*

**ச**ன்னதிக்குள் கூட்டம் கட்டி ஏறிக் கொண்டிருக்கிறது. செவ்வாய் கிரக பிரவேசம், குளோனிங் சாதனை, இன்டர்நெட் இணைப்பு என்கிற எந்த ஒரு விஞ்ஞான சிந்தனையும் துளிகூட பக்தசிகாமணிகளை யோசிக்க வைத்த மாதிரியே தெரியவில்லை. மூங்கில் தடுப்பெல்லாம் போட்டு வளைய நெளிய விட்டு க்யூ வரிசையை மீனாட்சிக்கும் கொண்டு வந்துவிட, அதில் வேணுவும் வசந்தாவும், ஜோதி ஷங்கரும் அனுவும் ஓரிடத்திலுமாக வசமாக மாட்டிக் கொண்டு நகர்கின்றனர்.

ஊடே ஊடே எட்டி எட்டிப் பார்த்து மெலிதான சமிக்ஞை. 'நாளைக்கு சந்திப்போம் நாளைக்காவது

பிரச்னையின்றி சந்தித்துக்கொள்வோம்' என்று மீனாட்சி முன் அந்த உலகச் சிக்கலாக கருதி பிரார்த்தித்தும் கொள்கின்றனர்.

நினைக்க நினைக்க சிரிப்பாகத்தான் இருக்கிறது இருவருக்கும். "நல்ல வேளை போ... எங்க நீ உன் அத்தை பையனை இழுத்துக்கிட்டு நேரா என்கிட்ட வந்துடுவியோன்னு பயந்தே போயிட்டேன்..."

"எனக்கும் அதே பயம்தான்... 'யாரது அத்தை பையன்... எனக்கு போட்டியா'ன்னு கேட்டுக்கிட்டு நீங்க எங்க என்கிட்ட வந்துடுவிங்களோன்னு எனக்கும் பயம்...?"

வேணுவும் அனுவும் உரசியபடி உட்கார்ந்து கொண்டு கோவிலில் பிரிந்து சென்ற அனுபவத்தை அசைபோட்டுக் கொண்டிருக்கின்றனர்.

## இடம் ராஜாஜி பார்க்!

இப்போதைக்கு மதுரைவாசிகளுக்கு சிக்கியிருக்கும் ஒரே இடம் இலுப்பை பூ பூங்கா! இதை விட்டால் மாரியம்மன் தெப்பக் குளத்துக்குத்தான் போக வேண்டும். அங்கே மதுரைக்கே தண்ணீர் தரும் அளவு அதன் கொள்ளளவு இருக்கும். இன்று அதில் திசைக்கொரு கிரிக்கெட் மேச் என்று ஒரே சமயத்தில் ஏழெட்டு மேச் பார்க்கலாம்! நடுவில் ஒரு கோவில் மண்டபம் சன்னதியோ வழிபாடோ கிடையாது. இதன் காரணமாக பொன்னியின் செல்வனையும், சிவகாமியின் சபதத்தையும் ஏழாவது எட்டாவது தடவையாக படுத்துக் கொண்டே படிப்பவர்களின் எண்ணிக்கை குறைந்துள்ளது.



அட! இந்த இடம் பார்த்து வந்து விட்டதா ஜோதி ஷங்கர் - வசந்தா ஜோடி? முதுகோடு முதுகைச் சாய்த்த படி கால் நீட்டி அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். வாங்கி வந்திருந்த பட்டாணிக் கடலை தீர்ந்து போய் அந்த வெறுங்காகிதத்தோடு காற்று விளையாட, மரத்தடியில் ஒருவன் மாத நாவல் படிக்கும் சாக்கில் அவ்வப்போது இருவரின் உரசலையும் ஊடலையும் லவட்டிக் கொண்டிருக்கிறான்.

"ஜோதி... நீங்க என்ன சொன்னாலும் சரி; நேத்து சாமி சன்னதியில சேர்ந்து போய்க் கும்பிட முடியாததை நினைச்சா எனக்கு வருத்தம் அடங்கவே மாட்டேங்குது..."

"நான் என்ன பண்ணட்டும்... சொல்லி வெச்ச மாதிரி வந்து நிக்கறா அனு! அங்க உன் கிட்டயும் என்னை மாதிரியே ஒரு தொந்தரவு. நாம பாத்துகிட்டிருந்தா தேவையில்லாத சர்ச்சைகள் நிச்சயம் வந்திருக்கும். தவிர்த்துட்டுப் போனது சரிதான்."

"அது சரி; இவ்வளவு பயப்படறோமே... எப்படி ஜோதி நாம வாழ்க்கையில சேரப் போறோம்...?"

"இதுக்கு பேர் பயமில்லைடா. இது ஒரு விவேகமான போக்கு. இந்த விவேகம் இல்லைன்னாதான் சேராம போயிடுவோம்."

"பாப்போம்... பதிலுக்கு ஒண்ணும் குறைச்சலில்லை. பணக்கார புத்தியைக் காட்டாம இருக்கீங்களான்னு பாக்கத்தானே போறேன்." வசந்தா லேசாக அவனைக் கீறுகிறாள்.

முதுகைப் பிரிந்து இப்பொழுது நேராகத் திரும்புபவன், "அடிக்கடி நீ பணக்காரன், பணக்காரன்னு

சொல்லிக் கிட்டேயிருக்கே... நல்லா இல்லை..." என்று ஆட்காட்டி விரலை ஒரு மாதிரி ஆட்டுகிறான்.

"இல்லியா பின்ன... நீங்க என்ன ஏழையா?"

"பணக்காரனோ - ஏழையோ; அதுக்கும் நம்ம காதலுக்கும் என்ன சம்பந்தம் வசந்தா?"

"என்ன சம்பந்தமா...? நான் சாதாரண மெக்கானிக் பொண்ணு ஜோதி. நீங்க கிட்டதட்ட கோடீஸ்வரன். எங்க இந்த அந்தஸ்து பேதம் நம்மை பிரிச்சிடுமோன்னு" வசந்தா லேசாகக் கலங்கவும் செய்கிறாள்.

"எத்தனை தடவை இந்த பல்லவியை பாடுவே வசந்தா! காதல் சந்திப்புகள் ருசிகரமா இருக்கணும்னா இப்படி பயந்த பல்லவி பாடக்கூடாது. நான்தான் சொல்லிட்டேன்ல... என் வீட்ல எனக்கு எதிரா ஒரு துரும்பைக் கிள்ளிப் போட்டாலும் அடுத்த க்ஷணம் வீட்டை விட்டு வந்துடுவேன்னு..."

"நிஜமா?"

"சத்யமா?" - அவள் மருதாணியால் சிவந்த கைகளை நீட்ட, அவன் சத்யம் செய்ய, கதை படிக்கும் நபர் தலையிலடித்துக் கொள்கிறான். 'காதலிக்கறவங்கன்னா இப்படி சத்யம் செய்துகிட்டுதான் தீரணுமா... எத்தனை ஜோடியடா சாமி இப்படி பார்க்க... ச்சை!"

**ரா**ஜாஜி பார்க்கிலும் கிட்டதட்ட இதே பல்லவி; அனுபல்லவி; தொகையறாதான்! அங்கே ஏழைப் பெண் கை நீட்ட பணக்கார வாலிபன் என்றால், இங்கே - ஏழை வாலிபன் கை நீட்ட பணக்கார பெண் சத்தியம் செய்து தருகிறாள்.

கூடவே "வேணு... ஒரு பொண்ணு ஒருத்தனைத் தான் நினைப்பா - அப்படி ஒருத்தனை நினைச்சுட்டா அவன் கூனோ, குருடோ, ஏழையோ, பணக்காரனோ மாறவே மாட்டா... உங்க கம்யூனிச புத்திக்கு இது மட்டும் ஏன் புரியவே மாட்டேங்குது?" - என்று அவன் கன்னத்தில் ஒரு செல்லக் கிள்ளும் கிள்ளுகிறாள்.



வேணு அவள் சொன்னதைக் கேட்ட சிலிர்ப்போடு அப்படியே மல்லாந்து மரக்கிளைகளைப் பார்த்து ஆட்காட்டி விரலால் கன்னத்திலும் தட்டிக் கொள்கிறான்.

"என்ன தீவிர சிந்தனை?"

"தீவிர சிந்தனைல்லாம் இல்லை. இந்த டயலாக்கை இப்பத்தானே டி.வி.ல. கேட்டேன். எந்த சீரியல்ன்னுதான் யோசிக்கிறேன்."

"மண்ணாங்கட்டி! கோவலன் கண்ணகி காலத்துல இருந்தே ஒரு ஆணைப் பார்த்து ஒரு பொண்ணு இப்படித் தான் சொல்வா. 'ஒரு வார்த்தை ஸ்பெஷல்' மணிரத்னம் வசனம் எழுதினா கூட இந்த டயலாக்ல மட்டும் கை வைக்க மாட்டார். இந்தத் தகவல் போதுமா... இல்லை இன்னும் கொஞ்சம் வேணுமா?"

"என்ன அனு... இப்படி அசத்தறே... சினிமா வசனம் பேசலாம் தப்புல்ல... காதலும் சினிமா மாதிரியே ஆயிடாதே?"

"எப்படி?"

"நான் உங்க வீட்டுக்கு வந்து பொண்ணு கேட்பேனாம். உடனே உங்க அப்பா 'அன்றாடங்காய்ச்சிக்கு ஆகாச நிலா கேக்குதா'ன்னு டயலாக் பேசுவாரு. நான் உடனே, 'அன்றாடங்காய்ச்சியா இருக்கலாம் - ஆனா தேயற ஆகாச நிலவா இருக்கறதுதான் ஆபத்து'ன்னு அடிச்சுடுவேன். பேச்சு இப்படியே போய் "சொந்தமா ஒரு நல்ல சைக்கிள் இல்லாத பய நீ - பல கார்களுக்கு

அதிபதியான என் மகளைக் கட்டிகிட்டு சொத்தை அள்ளிக்கலாம்னு பாக்கறியான்'னு கேப்பார்"

"மாமா இப்ப கேட்டுக்குங்க... அடுத்து உங்களைப் பார்க்க வந்தா கார்லதான் வருவேன்! ஒரு கார்ல இல்ல - ஒன்பது கார்லம்பேன்!'

"அப்படி வா... அப்ப பேசறேன்னு சொல்லுவார். நீ மாடத்துல நின்னு ஃப்ளையிங் கிஸ் தந்து கண்ணீரோடு வழி அனுப்புவே!

நானும் பட்டணம் போவேன். வண்டி இழுப்பேன்... செருப்புக்கு பாலீஷ் எல்லாம் போடுவேன்... மறக்காம இப்பல்லாம் பாட்டு பாடுவேன்... அப்ப ஒரு பணக்காரரை சில ரவுடிங்க தாக்க வருவாங்க. நான் சண்டை போட்டு அவங்களைத் துரத்தி அடிப்பேன். அந்த பணக்காரர் என்னைப் பார்த்து இனி நீதான் என் மகன்னு சொல்லி கூட்டிக்கிட்டுப் போவார். அவருக்கு ஏழெட்டு மில்லு இருக்கும்! அதுல நான்..."

"போறும்... போறும்..." அனு காதைப் பொத்திக் கொள்கிறாள்.

"ஏன் அனு... நல்லா இல்லையா? நாப்பது வருஷமா இந்த மாதிரி நாலாயிரம் சினிமா வந்துடுச்சு. அதையெல்லாம் ரசிக்கறீங்க. நான் இங்கே பேசும்போது மட்டும்..." குறும்பு கொப்பளிக்கிறது வேணுவிடம். ஒரு சில வினாடி எந்த பதிலும் சொல்லாமல் அவனைக் கூர்மையாகப் பார்க்கிறாள் அனு.

"ஏய் அப்படிப் பாக்காதே... இது பார்க்... இல்லேன்னா இப்படிப் பாத்ததுக்கே உன்னை..."

"என்னை...?"



"வேண்டாம்... அது ஒரு கெட்ட விஷயம்."

"சும்மா சொல்லு..."

"கெட்ட விஷயத்தைச் சொல்றதவிட செய்யறதுல தான் த்ரில் அதிகம்! செய்யட்டுமா... எப்படி வசதி?" - வேணு கைகளைப் பிசைந்து கொண்டு ஒரு தினுசாகக் கேட்கிறான். அனு அதைப் பார்த்து வெட்கப்பட்டு தலை குனிந்து கொள்கிறாள், கத்தரிக்கிறது ஒரு குரல்.

'ஏய் வேணு..."

நிமிர்ந்தால் எதிரில் ஒர்க்ஷாப் சூப்ரவைசர் சுந்தரம். "சா... சார் நீங்களா??" - பதறிப் போகிறான் வேணு.

"என்னப்பா எங்க் இங்க... ஹலோ மேடம்." - சுந்தரம் முதலாளி மகன் என்கிற பயத்தையும் மரியாதையையும் ஒரு சேரக் காட்டியபடி வேணுவைப் பார்க்கும் பார்வையில் ஆயிரம் ஈசல்களில் படபடப்பு!

"சு...சும்மா வந்தேன். அனுவும் வந்திருந்தா... சாரி; வந்துருந்தாங்க... அதான் பேசிக்கிட்டிருக்கோம்..."

"அப்படியா... நானும் பார்க்குக்கு பல வருஷமா வரேன்... நமக்கு இப்படி மாட்ட மாட்டேங்குது" - என்று சற்று வில்லத்தனமான கமெண்டடுடன், "ஓ.கே. கேரி ஆன்... நீங்க பேசுங்க, வரேன் மேடம். வரேன்பா..." - என்று நழுவுகிறான்.

அவன் நழுவும்போதும் சரியான கழுகுப்பார்வை. அனு சற்று வியர்த்து மேலாடை நழுவ விட்டிருக்கிறாள். ஹார்லிக்ஸ் - காம்ப்ளான் என்று சாப்பிட்டு வளர்ந்த ஊட்டத்தில் மரத்து ஆப்பிள் மார்பில் தெரியும் ஆச்சரியத்தை அந்தப் பார்வையில் கவனிக்கத் தவறவேயில்லை அவன்.

"பரவால்ல வேணு... ஃபிட்டரா இருந்தாலும் ஸ்பேனரைப் பிடிக்காம புளியங்கொம்பைப் பிடிச்சிருக்கே பாரு..." - என்று போகிற போக்கில் ஒரு கமெண்ட் வேறு அவனிடம்...!

அடுத்த நொடியே இருவரிடையேயும் இதமான வெப்பமாக, குளிராக, தென்றலாக, எல்லாமுமாக இருந்த நெருக்கமும் சந்தோஷமும் அப்படியே மாறிப் போகிறது! ஏற்கனவே தாழ்வு மனப்பான்மையில் வசனம் பேசிய வேணு, இப்பொழுது ஸ்பேனர் - புளியங்கொம்பு உதாரணத்தால் தரை தட்டிய கண்ணாடிபோல் உடைந்து போய் விட்டிருக்கிறான். ஆனால் அனு தடுமாற்றத்தை, சில நொடிப் பொழுதில் தாண்டி அவன் கரத்தைப் பற்றுகிறாள். அந்த ஸ்பரிசம் அவனது தாழ்வு மனப் பான்மைக்கான மருந்தாக மாறுகிறது!

"நீங்க பேசின சினிமா வசனத்தை ஒருக்கால் அப்பா கிட்ட நிஜமாலுமே பேசும்படி வரலாம். வரலாம் என்ன? வந்தே தீரும்... அப்ப சினிமா ஹீரோ மாதிரியே நீங்களும் ஜெயிக்கணும் வேணு. கொஞ்சம் கூட அசரக்கூடாது என்ன?"

-அனுவின் கேள்வி இப்பொழுது அவனைப் புரட்டிப் போட்டு நிமிர்த்துகிறது.

"அசரமாட்டேன் அனு... உனக்காக கொலை கூட செய்வேன்." - என்று பேச வைக்கிறது.

"தப்பு... இந்த சிந்தனையே கூடாது. காதல் எப்பவும் நல்ல விஷயத்துக்கான ஒரு மோட்டிவேடர். அதை ஞாபகத்துல வெச்சுக்குங்க..."

"நிச்சயமா." - அவன் அவள் கரத்தை முடிந்த மட்டும் இறுக்கமாகப் பற்றுகிறான். அவளிடம் எதிர்ப்போ வலி உணர்ச்சியோ துளியும் இல்லை.



"வலிக்கல...?"

"இல்ல..."

"பொய்..."

"சத்யம்?"

"இப்படி நான் இரும்புப் பைப்பைப் பிடிச்சா அது கூட நெளிஞ்சு போயிடும்."

"இருக்கலாம் - ஆனா என் வேணு என்னை கத்தியால் குத்தினா கூட எனக்கு வலிக்காது. Because that's love' " அனு தன் உணர்வை அற்புதமாக விவரிக்க நெகிழ்கிறான் வேணு.

"அனு... உனக்காக... உனக்காக... நான் எவரெஸ்ட்ல கூட ஏறுவேன்..." கண் கலங்கிப் போகிறான்.

**அ**னு இண்டஸ்ட்ரீஸ்!

மதுரையிலிருந்து விமான நிலையம் கடந்து அருப்புக் கோட்டை சாலையில் வளையங்குளத்தை ஒட்டி உருவாகியிருக்கும் ஒரு ராட்சஸத் தொழிற்சாலை.

செக்யூரிட்டிகளின் சல்யூட்டோடு அதனுள் நுழைந்து கொண்டிருக்கிறது மெரூன் வண்ண படகுக் கார் ஒன்று. அதன் பிரவேசம் காக்கிச் சட்டை தொழிலாளர் கூட்டத்திலும் பட, அவர்களிடம் "முதலாளிடா... முதலாளி கார்..." என்கிற பதட்டமும் விரைப்பும் வந்து தொற்றுகிறது. ஷாப் ஃப்ளோரில் இருந்தபடியே கண்ணாடி விண்டோ வழியே மெரூன் கலர் காரைப் பார்க்கும் சுந்தரம் மட்டும் அர்த்தத்துடன் சிரித்துக் கொள்கிறான்.

# 3

*"காதல்...*

*இது ஒரு அற்புதமான அழகான ஆனால்*

*பைத்திய உணர்வு!"*

**சு**ந்தரம் ஒரு தினுசாக சிரிப்பதோ, இல்லை மொத்த தொழிலாளர் கூட்டமும் இயல்பு மாறி விறைத்திருப்பதோ, எதுவுமே வேணுவுக்குத் தெரியாமல் போகிறது.

காரணம், ஒரு எந்திரத்தின் பிரேக் டவுனில் அதன் உதிரி பாகங்களுடன், பாகங்களோடு பாகமாக அவன் கிடந்ததுதான். கையும் காலும் ஒரே மசி! நெற்றி முழுக்க வியர்வைப் பொட்டுக்கள் கண்களில் கோளாறு எங்கே என்று தேடும் கூர்மை!

இப்பொழுது அதைக் கலைக்கிற மாதிரி சூப்பர்வைசர் சுந்தரம் நிழல் மேலே விழுகிறது.

"என்ன வேணு... ஓவரா படம் காட்றே போல ருக்கே?"

சுந்தரத்தின் குத்தலான கேள்வி வேணுவை நிமிர்த்துகிறது. ஏற்கனவே சுந்தரம் ஏழையான ஒரு மனிதன்.

அதிகாரவர்க்கத்தவர்கள் ஆகாசம் வழியாகப் பிறந்தவர்கள். மற்றவர்கள்தான் யோனியில் வந்தவர்கள் என்று எண்ணுகிற ஜாதி! இதில் நேற்றைய ஞாயிறுக்கு முந்தின சனிக்கிழமையன்று ராஜாஜி பார்க்கில் அனுவோடு வேணுவைப் பார்த்தது முதலே அவனது சுபீரியாரிடி காம்ளக்சில் இடி இடித்து மழை பெய்து புயலும் வீசி முடிந்துவிட்டது!



"ஒரு லேபர் நாய்க்கு எம்.டி. மக கேக்குதா?" என்று சகாக்களிடமும் புலம்பி விட்டான்.

"நல்லா பாத்திய... எம்.டி. மகதானா அது?"

"நல்லாவா.. லென்ஸ் வெச்சே பார்த்துட்டேன். முதலாளி மக அனுவேதான்! பய உள்ற பேசறது கம்யூனிசம். வெளியே அடிக்கற லூட்டியோ காதலிசம்..."

"எம்.டிக்குத் தெரிஞ்சா கட்டி வெச்சு உரிக்கப் போறாரு.

"உரிச்சாதான் இவனெல்லாமும் வழிக்கு வருவான். இங்க ஒரு அஞ்சு நிமிஷம் கூட இருடான்னா ஓவர் டைம் தரியான்னு நம்மகிட்ட சட்டம் பேசுவான். இவனுக்கு வக்காலத்து வாங்க ஒரு யூனியன் வேற. இப்ப இந்தக் காதலுக்கு எந்த யூனியன் வருதுன்னு பார்ப்போம்."

சுந்தரம் தன் சகாக்களிடம் ஒரு விவாத மேடையே நடத்தி முடித்து விட்டுத்தான் எம்.டி.உள் நுழையும் நேரமாகப் பார்த்து நமட்டுச் சிரிப்பு சிரிக்கிறான். வேணுவையும் எட்டி, படம் காட்றையா என்கிற கேள்வி. அதன் தொடர்பால் முறைப்புகள்.

"என்ன முறைக்கறே... இன்னிக்கு உன் கதை கந்தல் தான். இந்த மெஷின் பார்ட்ஸை விட உன் உடம்போட பார்ட்ஸை எம்.டி. அதிகமாகவே கழட்டப் போறாரு பார்..."

சுந்தரம் பொறுமுவது வேணுவையும் சற்று கிலி கொள்ளச் செய்கிறது.

"போட்டு விட்டுட்டீங்களா சார்..." ஈனசுரத்தில் கேட்கிறான்.

"பின்ன என்ன. உங்களுக்கு உதவி செய்துட்டு, நான் இங்க எம்.டி.கிட்ட மொத்து படுவேன்னு எதிர்

பார்த்தியா?" இருவரும் உரசிக் கொள்ளும் போது உள்ளே நுழைகிறார் எம்.டி.

பெயரைச் சொல்லவில்லையே... மயில் வாகனம்! நல்ல செக்கச் சிவந்த உருவம் - நெடிதுயர்ந்த சரீரம். அனு குரூப் ஆஃப் கம்பெனீஸ் என்னும் ஏழெட்டு கம்பெனிக்கும் அதன் ஐயாயிரம் சொச்ச ஊழியர்களுக்கும் சோறிடும் தெய்வம்!

டெல்லி வரை எல்லா அரசியல்வாதிக்கும் பரிச்சயமான பாத்திரம். எந்த கட்சியும் பகைத்துக் கொள்ள விரும்பாத திடகாத்திரம். யார் வந்து நிதி கேட்டாலும் கோணாமல் கொடுப்பதால் பெயருக்கு முன் கலியுக கர்ணன், இந்தியத் தொழில் மேதை தொழிலாளர் நிலவு என்றெல்லாம் பட்டங்கள்!

"குட்மார்னிங் சார்... குட்மார்னிங் சார்!"

உள்ளே நுழைந்து விட்ட அந்த கர்ணனுக்கு எல்லோரும் சல்யூட் அடிக்கின்றனர். கூடவே தொத்திக் கொண்டு படபடப்போடு வருகிறார் யூனிட் மேனேஜர் மருதாசலம் எம்.டி. மயில்வாகனத்தின் பார்வை அப்படியே சுற்றி வந்து அளக்கிறது. சில இடங்களில் சம்பந்தமில்லாத பொருட்கள், கசடுகள். அதைச் சுட்டிக் காட்டி அகற்றச் சொல்லுகிறது.

"சாரி சார்..." என்று சமாதானம் சொல்லும் டிபார்ட்மெண்ட் ஹெட்டைப் பார்த்து முறைக்கிறார்.

"என் காதுல சாரிங்கற வார்த்தையே விழக்கூடாது. அதுக்கு இந்த அனு இண்டஸ்ட்ரீஸ்லையே இடம் கிடையாதுன்னு தெரியும் தானே?" என்று பதிலுக்குப் பாய்ந்து விட்டு மெல்ல வேணுவின் எந்திரப் பக்கமாக வருகிறார்.



"முறைக்கப் போகிறார், கடுக்கப் போகிறார்' என்று கருதி எல்லோரும் பார்த்து நிற்க, அவர் கரங்கள் வேணுவின் தோள்மேல் அன்போடு விழுகிறது.

"நீங்க வேணு கோபால்தானே?"

"ஆமாம் சார்!"

"குட்... ரொம்ப சின்சியர்னு கேள்விப்பட்டேன். அப்புறமா ஆபீஸ்ல என்னை வந்து பாருங்க..."

"சரிங்க சார்..."

- அவன் ஒப்புதலுடன் அங்கிருந்து அவர் நகர, சுந்தரம் முகம் என்னவோ போலாகிறது. இதென்ன இத்தனை மரியாதை? அன்பு? என்ன நடக்கப் போகிறது?

**வெ**ளியே கிளம்பும் மும்முரத்தில் இருக்கும் தர்மராஜன், ராஜேஸ்வரி இருவரும் ஜோசியர் கோதண்டராமய்யர் உள்ளே நுழைவதைப் பார்த்து பெரிதாக முகம் மலருகின்றனர்.

"வாங்க... வாங்க... உங்கள பார்க்கத்தான் கிளம்பிகிட்டிருக்கோம்..." என்று அவர் வரவுக்கு ஒரு அர்த்தத்தையும் உருவாக்குகின்றனர்.

"எதுக்கு... அதான் நான்தான் சொல்லியிருந்தேனே, நானே வரேன்னு..." ஜோசியர் அமர்ந்தபடி சொல்கிறார்.

"போகட்டும், ஜாதகப் பொருத்தத்தைப் பார்த்தீங்களா?" - சோபாவில் அமர்ந்து காலை அகட்டியபடி நேராக விஷயத்துக்கு வருகிறார் தர்மராஜன்.

"பார்த்தேன். அவ்வளவு ஸ்லாக்யமா சொல்ல முடியல..."

"என்ன ஜோசியரே... இப்படி சொல்றீங்க? என் மைத்துனர் மயில் வாகனம் இரண்டு பேருக்கும் பத்து பொருத்தமும் நல்லா இருக்கிறதாச் சொன்னாரே..."

"பத்து பொருத்தம் மட்டும் போதுமானதில்ல. மாங்கல்ய தோஷங்கள் இருக்கக் கூடாது. பாவ கிரக சேர்க்கை கூடாது. ஜாதகத்துல பல கட்டங்கள் இருக்கு. நான் ஜாதகத்தை மேலோட்டமா பாத்து பலன் சொல்ற ஆள் இல்ல. ஸ்புடம் போட்டுச் சொல்றவன்"

"அது தெரிஞ்சுதானே... என் மச்சினன்தான் ஜாதகப் பொருத்தம் பார்த்துட்டேன்னு சொன்னப்ப கூட நான் உங்க கிட்ட வந்தது! சரி, முடிவா என்ன பண்ணலாம்?"

"சில பரிகாரங்களைப் பண்ணுங்கோ... அப்புறமா கல்யாணம் பண்ணினா ஓரளவு சௌக்யமா இருப்பா?"

"அப்ப கூட ஓரளவுதானா?"

"என்னால அப்படித்தான் சொல்ல முடியும்!"

- கோதண்டராமய்யர் சற்று நிறுத்தி நிதானித்து, சில நிஜங்களைப் போட்டு உடைக்க, அது இருவரையும் சற்று கலக்கும் போது மாடியில் இருந்து இறங்குகிறான் ஜோதி ஷங்கர்.

நெற்றிச் சூர்ணமும் பஞ்சகச்சமுமாய் கையில் பஞ்சாங்கத்துடன் தெரியும் கோதண்டராமய்யரை அவனுக்கும் தெரியும். அவரைப் பார்த்த க்ஷணம் அவன் முகம் மாறுகிறது.

"வாப்பா ஜோதி, சௌக்கியமா?" - ஜோதிடர் க்ஷேம நலன் விசாரிக்க, ஜோதி ஷங்கர் இறுக்கமாய் தலையை அசைக்கிறான்.



"ஜோதி,. உனக்கும் அனுவுக்கும் கல்யாணம் பண்றது சம்பந்தமாதான் பேசிக்கிட்டிருக்கோம். போனவாரம் கூட மாமா வந்துட்டுப் போனாரில்ல..." - ராஜேஸ்வரி மகனிடம் அவன் நிலை தெரியாமல் கல்யாணப் பேச்சைத் தொடுகிறாள்.

"நான் தான் இப்ப வேண்டாம்னு சொன்னேல்ல...?"

"இப்ப வேண்டாம்னா வேற எப்படா பண்ண? இப்பவே உனக்கு வயசு இருபத்தஞ்சு இருபத்தியோரு வயசுலேயே கல்யாணம் பண்ணலாம். ஆனா நாங்க போகட்டும்னு நாலு வருஷம் கூடவே போயாச்சு. இன்னும் வேண்டாம்னா என்ன அர்த்தம்?" - இது தர்மராஜன்.

"நீங்க வேற தர்மராஜன். டீசண்டான பசங்க வேண்டாம்னுதான் சொல்வாங்க. நாமதான் அதைப் புரிஞ்சுக்கணும்,"

- ஜோசியர் நைச்சியமாக குறுக்கில் நுழைகிறார்.

"ஜோசியரே? நான் டீசண்டால்லாம் வேண்டாம்னு சொல்லலை. என் கல்யாணத்தை எப்ப எங்க பண்ணிக்கணும்னு எனக்குத் தெரியும், அதோட இந்த ஜாதகம் ஜோசியம்லாம் பார்க்க நான் தயாரில்லை. எனக்கு அதுல நம்பிக்கையும் இல்லை. இதையும் நீங்க புரிஞ்சுக்கணும்..."

"தெரியும் ஜோதி. உன் ஜாதகத்துல புதனோட கேது பரிவர்த்தனை ஆகறான். இப்படி ஆனாலே நாஸ்திகம்தான். நாக்கு பேசும்! நல்லதெல்லாம் கெட்டதா தெரியும். கெட்டதெல்லாம் நல்லதா தெரியும்" - ஜோதிடர் சளைக்காது பதில் சொல்ல, ஜோதி ஷங்கர் சிவந்து போகிறான்.

"அம்மா அப்பா... தயவுசெய்து கல்யாணப் பேச்சு எடுக்காதீங்க, மீறி எடுத்தா என் விருப்பத்துக்கு விட்டுடுங்க..." சொல்லிவிட்டு விறுவிறுவென்று வெளியே கிளம்பி வாசல்தாண்டி மறைந்தும் போகிறான்.

உள்ளிருப்போர் முகத்தில் ஈயாடவில்லை.

"என்ன ஜோசியரே, இப்படிச் சொல்லிட்டுப் போறான்?"

"அப்படித்தான் சொல்வான். அதுக்காக விட்டுட்டுடுங்கன்னா அவ்ளோதான்? அவனை திரும்ப நீங்க மகனா எந்த காலத்துலையும் பார்க்க முடியாது. இதை ஞாபகத்துல வெச்சுக்கோங்கோ...?"

"பயமுறுத்தறீங்களே..."

"என்ன பண்ணட்டும். கட்டங்கள் அப்படிச் சொல்லு!"

- ஜோதிடரின் பதில் தர்மராஜனையும், ராஜேஸ்வரியையும் தீவிரமாக யோசிக்க வைக்கிறது.

- என்ன செய்யலாம்?



அந்த ஏ.சி. அறைக்குள் எம்.டி.மயில்வாகனனைத் தவிர யாரும் இல்லை. உள்ளே நுழைகிறான் வேணு.

"குட்மார்னிங் சார்."

"குட்மார்னிங்... உட்காருங்க..."

"இருக்கட்டும் சார்"

"பரவால்ல உட்காருங்க"

அதற்குமேல் அதிகம் நெளியாமல் நாற்காலியில் அமருகிறான். அவர் எதிரில் சாதாரணமாக எத்தனை சொன்னாலும் மேனேஜரே உட்கார மாட்டார். அதட்டி உட்கார வைத்தாலும் நுனி நாற்காலியில் தான் உட்காருவார், நிறைய பயப்படுவார். நடிப்பா, இல்லை நிஜமா என்றெல்லாம் தெரியாது. லேபர் லீடர் கூட கட்டிய கையைத் தொங்க விடமாட்டான்.



ஆனால் வேணுவிடம் அந்த பாசாங்குகள் இல்லை. சகஜமாக உட்கார்ந்து கொண்டு அவரைப் பார்க்கிறான்.

"எத்தனை வருஷ சர்வீஸ்?" அவர் கண்ணாடியைக் கழட்டி துடைத்தபடி கேட்கிறார்.

'பதிமூணு வருஷம்...'

அவன் விதரணையாகச் சொல்கிறான்.

"இந்த பதிமூணு வருஷத்துல இந்த ரூமுக்கு எத்தனை தடவை வந்திருப்பீங்க?"

"ஒரு தடவை கூட இல்ல சார்..."

"அது சரி... நான் கூப்பிட்டிருந்தாதானே வர முடியும்! ஆமாம்; எதுக்கு கூப்பிட்டேன்னு தெரியுமா வேணு?"

அவர் செருமியபடி கேட்கிறார்.

"தெரியும் சார்" அவனிடமும் சீவினமாதிரி பதில்!

"அப்ப நேரா விஷயத்துக்குப் போகலாம்... சுற்றி வளைச்செல்லாம் பேச வேண்டாம் - சரிதானே?'

"தாராளமா?"

"அதுக்கு முந்தி ஒரு கேள்வி; அனுவை எங்க பாத்தீங்க முதல்ல...?"

"சரியா ஞாபகமில்லை..."

பொய்... காதல்ல முதல் சந்திப்பு; முதல் முத்தம் முதல் ஸ்பரிசம்லாம் மறக்கக் கூடியது கிடையாது வேணு...

"அது உண்மைதான் சார். முதல் சந்திப்பு காதல் நிமித்தம் நடந்திருந்தா ஞாபகத்துல இருந்திருக்கும். அப்படி நடக்கல. இந்த ஃபாக்டரியிலேயே பல தடவை பார்த்துருக்கேன். ஆனா முதல் முத்தத்தையும், ஸ்பரிசத்தையும் நல்லா ஞாபகத்துல வெச்சுக்கிட்டிருக்கேன். அவசியம் தெரிஞ்சுக்கணுமா நீங்க...?"

வேணுவின் பதில் மயில் வாகனத்தை சற்று எகிறி அடிக்கும் என்று பார்த்தால் அது எதுவுமே செய்ய வில்லை, மாறாக பேப்பர் வெயிட்டைச் சுழற்றியபடி சிரிக்க விடுகிறது.

"பரவால்ல வேணு... கொஞ்சம் கூட பயமில்லாம பேசறீங்க. ஐ லைக் இட்..." என்கிறார் அவனும் அதைக் கேட்டு சிரிக்கிறான்.

"ஏன் சிரிக்கறீங்க?"

"சிரிக்காம என்ன சார் பண்ண... தமிழ் சினிமாக் கள்ல வர்ற அப்பா மாதிரியேதான் நீங்க பேசறீங்க நடந்துக்கறீங்க. அடுத்தடுத்து என்ன செய்வீங்கன்னும் யோசிச்சேன்... வந்துடிச்சி...!"

"என்ன செய்வேன்?"

"என்ன ஆழம் பார்க்கறீங்களா?"

"சாரி வேணு... நான் சினிமால்லாம் பார்க்கறதுல்ல.. ஐ டோன்ட் நோ சினிமா. ஈவன் ஐ நெவர் சீ டெலிட்ரா மாஸ் ஆல்ஸோ. அப்படியே பார்த்தாலும், அதெல்லாம் என்னைப் பாதிக்க முடியாது. எனக்கு இன்டிவிஜி வாலிடின்னு ஒண்ணு உண்டு வேணு."



அவர் அசராமல், கோபப்படாமல், உணர்வுகளில் சிக்காமல் அந்நிய தேசத்து விவகாரங்களை அலசும் ஒரு ராஜ தந்திரியாட்டம் பேசுவதாகத்தான் தோன்றுகிறது வேணுவுக்கு...

"உம் கமான்... நான் என்னல்லாம் செய்வேன்னு நினைச்சீங்க... அதைச் சொல்லலையே..." சின்னக் குழந்தை யாட்டம் பேப்பர் வெயிட்டை தூக்கிப் போட்டுபிடித்து விடாமல் கேட்கிறார், அந்தப் பெரிய மனிதர்.

வேணு மெல்ல தன்னிலையில் குழப்ப வசப்படு கிறான். தைரியம் இழக்கத் தொடங்குகிறான். தடுமாற ஆரம்பிக்கிறான்.

"சார் அது வந்து..."

"உம் கமான்... எது வந்து?"

"இல்ல... எனக்கு பணம் தந்து ஒதுங்கிக்கச் சொல் வீங்க... இல்லேன்னா... ஆள்வச்சு அடிச்சு கை காலை வாங்குவீங்க... அதுவும் இல்லேன்னா..."

தயங்கித் தயங்கி அவன் பேசுவதைக் கேட்டு அந்த அறையே நடுங்கும்படி சிரிக்கத் தொடங்குகிறார் அவர். அது அவனை உலுக்குகிறது!

"சார், எதுக்கு சார் இப்படிச் சிரிக்கிறீங்க... நான் தப்பா சொல்லல சார்... இந்த உலகத்துல காதலுக்கு எதிரா நடக்கறதத்தான் சொன்னேன்..." ஒரே மூச்சில் மடமடவென்று சொன்னவனை, சட்டென்று சிரிப்பை நிறுத்திவிட்டுப் பார்க்கும் மயில்வாகனம்,

"அப்படியா மாப்ளை?" என்று உருவாகப் போகும் புதிய உறவைச் சொல்லி அழைக்க, அவனுக்குத் தூக்கி வாரிப் போடுகிறது...!

# 4

**"காதல்**
**உணர்ச்சிகளிலேயே**
**வித்தியாசமான**
**ராஜ உணர்ச்சி!"**

மயில் வாகனம் பயன்படுத்திய 'மாப்பிள்ளை' என்கிற அந்த சொல் அவனுக்கு முதலில் அதிர்ச்சியையும் பிறகு மயக்கத்தையும் உருவாக்கப் பார்க்கிறது.

"என்ன பாக்கறீங்க வேணு... என்னடா மாப் பிள்ளைன்னு கூப்பிடறானேன்னா?"

"ஆமாம் சார்... அப்ப நீங்க எங்க காதலுக்கு சம்ம திச்சுட்டீங்களா?"

"சம்மதிச்சுட்டேனாவா? நிச்சயத்துக்கே நாள் பார்க்கப் போறேன்..." மயில் வாகனம் குண்டு மேல் குண்டாகப் போடுகிறார்.

"சார் என்னால நம்ப முடியல! இது கனவு இல்லையே...!"

"அடப்பாவி மனுஷா... காதல்னாலே பேரண்ட்ஸ் எஸ்பெஷலி என் மாதிரி பணக்கார அப்பாக்கள் ஒரு கைல துப்பாக்கி, மறு கைல சவுக்குமாதான் நின்னா கணுமா? ஏன் வித்தியாசமான அப்பாக்களைப் பார்க் கவே முடியாதா?"

"......"

"இப்படி மலங்க மலங்க பார்த்தா எப்படீ, சொல் லுங்க... உங்களச் சொல்லி குத்தமில்ல வேணு... சினிமாக் காரங்களைச் சொல்லணும். அவங்கதான் 'த்ரில் வேணும், திருப்பம் வேணும்'னு இப்படிப் பண்ணி, 'காதல்னாலே ஓடித்தான் போகணும். அப்பிடிப் போனாத்தான் கல்யாணம்'னு பண்ணிட்டாங்க. அதைப் பாத்து நீங்களும்..."

மயில்வாகனம் பேசப்பேச வேணுவுக்கு படப் படப்பாக இருக்கிறது. அதுவரை தாக்கியிராத உணர்ச் சிகள் ஒன்று கூடி வந்து தாக்குகிற மாதிரியும் அவன் உடம்பு ஆகாசம் எழும்புகிற மாதிரியும் பலவிதமாக நினைக்கிறான்.

அவர் உடனே தொலைபேசியை எடுத்து பட்டன் களைத் தட்டிவிட்டு "ஹலோ அனு..." என்கிறார் சற்று பலமாக! நிமிர்கிறான் வேணு.

"அனு கண்ணா... நீ ஆசைப்பட்ட மாதிரியே மாப்ள கிட்ட பேசிகிட்டிருக்கேன். ஆனா அவர்தான் நம்பாம என்னை என்னமோ அந்த கைலாசத்து சிவனைப் பார்க் கற மாதிரி பார்க்கறாரு! நம்பிக்கையே வரலைன்னு நினைக்கறேன். நீ பேசுடா!"

ரிசீவரை அப்படியே வேணு வசம் தருகிறாய்.

"ஹாய் வேணு... நான் அனு பேசறேன்."

"சொல்லு அனு..."

"என்னத்தச் சொல்றது... அப்பா நம்ம காதலுக்கு சம்மதிச்சுட்டார். உங்களை ஃபிட்டர்ல இருந்து பிராஞ்ச் மேனேஜர் லெவலுக்கு பிரமோஷன்லாம் பண்ணப் போறார். ஒழுங்கா மாமனார்க்கு ஏத்த மாப்ளையா நடந்துக்குங்க. மிச்சத்த இன்னிக்கி தாஜ் ஓட்டல் மீட்ல சொல்றேன்." அவள் நீட்டி முழங்காமல் ரிசீவரை மறு முனையில் முடக்க, வேணுவும் ரிசீவரை அதன் பாக்ஸ் பேசில் வைக்கிறான்.

"என்ன பேசிட்டாளா?"

"என்ன சொன்னா?"

"என்னை... என்னை..."

"உங்களை...?"

"என்னைமேனேஜராபிரமோட்பண்ணப்போறதா...!"

"ஆமாம் வேணு; நேத்து வரை நீங்க யாரோ... ஆனா, இனி நீங்க என் மாப்ளையா வரப் போறவர். என் ஸ்டேட்டசுக்குத் தகுந்த மாதிரி உங்களுக்கும் ஒரு ஸ்டேட்டஸ் இருக்கணும், இல்ல ஸ்டேட்டஸை நான் உருவாக்கணும். அப்பதான் நல்லா இருக்கும்?"

"......."

"என்ன பேசமாட்டேங்கறீங்க... ஐ திங்க் உங்களுக்கு இன்னும் முழுசா நம்பிக்கை வரலைன்னு நினைக்கிறேன். லுக் வேணு, எனக்கு அனு ஒரே பொண்ணு... அவ ரொம்ப க்ளவர்! ரொம்பவும் அக்யூரசி கேரக்டர்! அவ குப்பையா ஒண்ணைத் தேர்ந்தெடுத்தா கூட அதுல ஏதாவது அர்த்தமும் ஆழமும் இருக்கும்னு நம்பறவன் நான்! நம்பறது என்ன... அதுதான் உண்மை!

சோ அவளோட விருப்பத்துக்குக் குறுக்கே நான் நிக்கமாட்டேன். இதுதான் உண்மை. நீங்க இனியும் மலைக்கக் கூடாது. பை த பை... வெளிய எதையும் பேசிக்க வேண்டாம். அது அவ்வளவு நல்லா இருக்காது. உங்க விஷயத்த என்கிட்ட சொன்ன சூப்ரவைசர் சுந்தரத்தோட வாயைக் கூட நான் கட்டி வெச்சிருக்கேன்! நம்ப கம்பெனி இனாகுரேஷன் டே அடுத்தமாசம் வருது. அன்னிக்கு மேடைல நான் சஸ்பென்சா அனௌன்ஸ் பண்ணிடலாம்னு இருக்கேன், அதுக்குப் பிறகுதான் நீங்க மேனேஜர் மாப்ளை... சோ அண்ட் சோ...



நடுவுல இங்கிலிஷ் கோச்சிங் க்ளாசுக்குப் போங்க. உங்களுக்கு அந்த லாங்வேஜ்ல நாலட்ஜ் பத்தாதுன்னு பர்சனல் மேனேஜர் சொன்னார். மேனேஜராயிட்டா ஃபைல்ஸ் பார்க்கணும் எல்லாம் இங்கிலீஷ்லதான் இருக்கும். அப்படியே பார்ட் டைம்ல போஸ் கிராஜிவேஷன், எம்.பி.ஏ. எல்லாம் பண்ணப் பாருங்க. நீங்க உங்களை நிறைய வளர்த்துக்கணும். ஏன்னா, நீங்கதானே கம்பெனியோட வருங்கால சேர்மன்?!"

கடகடவென குற்றாலச் சிற்றருவியாட்டம் கொட்டி முடித்துவிட்டு தனது ஜலதோஷ மூக்குக்கு விக்ஸ் இன்ஹேலரைச் செருகி ஒரு இழு இழுக்கிறார் மயில் வாகனம்.

அவன் மொத்தமாய் ஸ்தம்பித்து உறைந்தே போய் விட்டிருக்கிறான்!

**த**ர்மாஸ் கம்ப்யூட்டர் பாண்ட்!' வெலிங்டன் டவரின் நான்காவது ஃப்ளோரில் உள்ள தர்மாஸ் குரூப்புக்கான ஆபீஸ் பகுதி. மொசைக்கில் இழைந்த ஏ.சி.யில் குளிர்ந்த, லாவெண்டர் வாசம் கமழும் மிக மாடர்னான அதன் உட்வட்டில் அங்கங்கே பிளைவுட் தடுப்பு அறைகள். அதனுள் எல்லாம் டை கட்டிய யூனிஃபார்ம் தரித்த, எம்.பி.ஏ., எம்.சி.ஏ. படித்த மனிதர்கள்.

தனியாக ஒரு வசீகரமான அறை. அதனுள் போர்ட்டபிள் கம்ப்யூட்டரோடு மல்லு கட்டியபடி ஜோதிஷங்கர் அறைக் கதவில் 'ஜோதி ஷங்கர் ஜாய்ண்ட் மேனேஜிங் டைரக்டர்' என்கிற தாமிர எழுத்துக்கள்.

அந்த அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைகிறார் தர்மராஜன். நிமிர்ந்து பார்ப்பவன் அப்பாவைப் பார்த்து விட்டு கம்ப்யூட்டர் பாக்ஸை மூடியபடி,

"வாங்கப்பா" என்கிறான் சுரத்தில்லாமல்... அவரும் அவனுக்கு முன் உள்ள நாற்காலியில் அவனையே வெறித்து பார்த்தபடி அமர்கிறார்.

"என்ன ஜோதி... கல்யாணப் பேச்சு எடுத்தப்போ அப்படி பேசிட்டு வந்துட்டே?" - எடுப்பிலேயே அவர் கேள்வியில் அவர் வந்த காரணத்தின் ஆதிக்கம். அவனிடமோ பதிலில்லை.

"ஏன் பேசமாட்டேங்கறே - உனக்கு இப்ப கல்யாணத்துல இஷ்டமில்லையா?"

"......"

"பேசு... வாயை மூடிக்கிட்டிருந்தா எப்படி? உனக்கு இப்ப வயசு என்ன தெரியுமா?"

"......"

"நான் ஒரு முடிவோடதான் வந்துருக்கேன். கல்யாணத்துல இஷ்டமில்லைன்னு பொய்யெல்லாம் மட்டும் சொல்லிடாதே."

- அவன் கிள்ளப்பட்டது போல நிமிர.

"நான் உன் வயசைக்கடந்து வந்தவன்தான். இந்த வயசுல ரத்தம் எவ்வளவு மைல் வேகத்துல ஓடும்... என்னல்லாம் நினைக்கும்கறது எனக்கும் தெரியும்."

"என்னப்பா... என்னென்னமோ பேசறீங்க?" அவன் மெல்ல வாய் திறக்கிறான்.

"சரியாதான்பா பேசிகிட்டிருக்கேன். ஆமா யார் அந்த வசந்தா?"

- தர்மராஜன் பாக்கு வெட்டி போல நறுக்கி மிக நேராக வருகிறார்.



"அப்பா உங்களுக்கு....?" அவன் முகத்தில் இப்பொழுது கணிசமான அதிர்ச்சி.

"எல்லாம் தெரியும்டா... உன் காதலை நீ மறைக்கலாம். ஆனா சலவைக்கு போட்ட உன் பேண்ட் மறைக்காம காட்டிக் கொடுத்துடுச்சி. அதுல இருந்துச்சு அந்தப் பொண்ணு உனக்கு எழுதுன லவ்லெட்டர். வேலைக்காரன் எடுத்துகிட்டு வந்து நல்லவேளை என்கிட்ட தந்தான். உன் அம்மாகிட்ட தந்துருந்தா கதை கந்தலாயிருக்கும்."

அவர் அந்தக் கடிதத்தை சட்டை பாக்கெட்டில் இருந்து எடுத்து, அவன் முன் நீட்டுகிறார். அவனிடம் இப்பொழுது இலேசான தடுமாற்றம்!

"கவலைப்படாதே... உனக்கும் அனுவுக்கும் அவ்வளவா ஜாதகப் பொருத்தம் இல்லைங்கற மாதிரி சொல்லிட்டார் ஜோசியர். இந்தப் பொண்ணு ஜாதகத்தை வாங்கித்தா... பொருந்துதான்னு பாக்கறேன்."

"அப்பாாா..." - சீட்டில் இருந்து அப்படியே துள்ளி எழுகிறான் ஜோதி ஷங்கர்.

"உக்காரு... உக்காரு... ஆமா எவ்வளவு நாளா பழக்கம்?"

"ஒரு பத்து மாசமாதாம்ப்பா...?"

"லெட்டரைப் படிச்சா பத்துமாசப் பழக்கம் மாதிரியே தெரியலியே... பல வருஷம் பழகின மாதிரி தெரியுதே...!"

"இல்லப்பா பத்து மாசமாதான்... ஆனா நீங்க சொல்றது சரிதான்! எங்களுக்குள்ள பலயுகமா நாங்க பழகிக்கிட்டு இருக்கற மாதிரிதான் ஒரு ஃபீலிங் இருக்கு!

வசந்தா ரொம்ப நல்ல பொண்ணுப்பா. பாத்தா அசந்துடுவீங்க!"

"அத நீ சொல்லணுமா? அப்படி அவ அசத்தினதால தானே காலைல ஆறுமணிக்கே எழுந்து ஜாகிங் போறே. போற வழிலதான் இருக்கா அவ வீடு?"

"ஆமாம்ப்பா... எப்படிப்பா இவ்வளவு கரெக்டா சொல்றீங்க?"

"ஜோசியர்கிட்டே கேட்டேன்... சொன்னாரு. கிறுக்குப் பயலே - இதெல்லாம் சாதாரண ஐ-க்யூடா! ஒரு வயசுப் பையன் விறைப்பா நடந்தா, மடிப்பு கலையாம டிரெஸ் பண்ணினா, கைய்யுல சதா கர்ச்சீப் இருந்தா; பல தடவை கூப்ட்டு திரும்பிப் பார்க்கலைன்னா - அவன் காதல் வசப்பட்டிருக்கான்னு அர்த்தம். இன்னும் இருக்கு ஒரு நாளைக்கு இரண்டு தடவை ஷேவ் பண்ணினா, கவிதை புத்தகம் படிச்சா; அடிக்கடி தலை சீவினா; சைக்கிளையோ ஸ்கூட்டரையோ வேகமாவே எப்பவும் ஓட்டினான்னு அடுக்கிட்டே போகலாம்."

- தர்மராஜன் காதலின் பாதிப்புகளை பிசிறின்றி அடுக்க அடுக்க ஜோதிஷுங்கருக்கு மலைப்பு தட்டுகிறது!

"சரி? கொஞ்சம் பிசினஸ் பத்தியும் பேசறேனே? ஆமா, அந்த விஜயவாடா பார்ட்டி அம்பது லட்சம் செக்க அப்படியே பெண்டிங் வெச்சிருக்கானாமே..."

"ஆமாம்ப்பா...?"

"அவனுக்கு காம்ப்பனன்ட்ஸை இனி அனுப்பாதே. செக்க வாங்கிட்டு வர அக்கௌண்ட்ஸ்ல இருந்து வைத்திய நாதனை நேர்ல அனுப்பு...

மினரல் வாட்டர் புராஜக்ட்டுக்கு மெஷினரிஸ் ஹார்பருக்கு வந்தாச்சா?"



"வந்தாச்சுப்பா..."

"ஜப்பான்ல இருந்து தண்ணிய சுத்தப்படுத்தறதுக்கு மெஷினரிஸ் வாங்கின கம்பெனி நம்ம கம்பெனியாதான் இருக்கும். எரெக்ஷன் ஒர்க்கை நேர்லபோய்ப் பாரு..."

"சரிப்பா..."

"நான் கிளம்பறேன். ஜாதகத்தை மறந்துடாதே!" அவர் எழுதுகிறார். அவனும்,

உள்ளே அவர் நுழையும்போது கான்க்ரீட் இறுக்கம் காட்டியவன் இப்பொழுது பாலாடைபோல இளக்கம் காட்டி வழியனுப்புகிறான்.

உள்ளுக்குள் 'வசந்த்' இன்னிக்கு உனக்கு நூறு முத்தம் என்று குதூகலிக்கிறான்!

**ஹோட்டல் பிக்னிக்!**

கர்ட்டனை விலக்க, கண்ணாடிச் சாளரம் வழியாக மீனாட்சி கோயில் கோபுரம் தெரிகிறது. வெளிச்சமும் விழுகிறது. அந்த வெளிச்சம் மெக்கானிக் மாணிக்கம் மேலும் விழுகிறது.

"என்ன சாப்பிட்றீங்க?" - உபசரணையாகக் கேட்டபடி கோபுரத்தைப் பார்த்துக் கொண்டே வந்து அவர் எதிரில் அமருகிறார் தர்மராஜன்.

"இருக்கட்டும்... எதுக்கு வரச் சொன்னீங்கன்னு தெரிஞ்சுக்கலாமா நான்..." மாணிக்கம் கேட்கிறார்.

"ஏன் என் பி.ஏ. எதையும் சொல்லலையா?"

"உங்களைப் பாக்கணும்னு முதலாளி சொன்னாரு பிக்னிக் ஹோட்டல்ல காத்துக்கிட்டுருக்காருன்னாரு... அவ்வளவுதான்!"

"அப்படியா... ஆமா... நீங்க டு வீலர் மெக்கானிக்கா இல்ல..."

"எல்லாம் பாப்பேன். டி.வி.எஸ்.ல இருந்தேன். ரிசைன் பண்ணிட்டு தனியா இப்ப பட்றை வெச்சுருக்கேன். பஸ், ஸ்கூட்டர் எல்லா என்ஜின் வேலையும் தெரியும்..."

"ஐ சீ...."

"ஏதாவது காண்ட்ராக்ட் எடுத்து செய்து தரணுமா? சொல்லுங்க. டி.வி.எஸ். அனுபவம் கைல இருக்கு. அதனாலதான் மதுரை பூரா எனக்குப் பேரு."

"ஏன் டி.வி. எஸ்ஸை விட்டுட்டீங்க? நல்ல கம்பெனியாச்சே...?"

"நல்ல கம்பெனிதான். அங்க மாதிரி தொழில் பழக எங்கேயும் முடியாதுதான். எனக்கென்னமோ ஒருத்தருக்குக் கீழ கை கட்டி வேலை பாக்க பிடிக்காம போயிடிச்சு.

மனசு வெச்சா நாமளே ஒரு டி.வி. எஸ். கம்பெனி மாதிரி ஒண்ணை உருவாக்க முடியும்னு ஒரு தன் நம்பிக்கை ஏற்பட்டுச்சு... அதான்."

தர்மராஜ் சிரிக்கிறார்.

"என்ன சிரிக்கறீங்க... எங்க முதலாளியோட அப்பா சுந்தரம் ஐயங்கார் கூட சிறுக ஆரம்பிச்சி தாங்க பெரிசா வந்தாரு...!"

"அப்ப நீங்களும் வந்துடுவீங்கன்னு சொல்லுங்க..."

"அது தெரியாதுங்க... ஆனா வரணும், வரணும்! அதுதான் என் லட்சியம்."

"நான் அதுக்கு உதவி செய்யறேன்... என்ன சொல்றீங்க?"



"ரொம்ப சந்தோஷம். ஆனா நீங்களும் டி.வி.எஸ். மாதிரி ஒரு பெரிய முதலாளி. என் மேல உங்களுக்கு ஏன் இவ்வளவு அக்கரைன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

"சொல்றேன். உங்களுக்கு ஒரு மகள் இருக்காள்ல."

"ஆமாங்க... ஏன் கேக்கறீங்க?"

"நான் வளவளன்னு பேச விரும்பல மிஸ்டர் மாணிக்கம். .நேரா விஷயத்துக்கு வந்துடறேன்... உங்க மகளும் என் மகனும் காதலிக்கிறாங்க. பிரிக்க முடியாத படி காதலிக்கறாங்க. அதிர்ச்சியடையாம மேல சொல்றதக் கேளுங்க... அவங்களக் கூப்பிட்டு, 'ஒத்து வராது - மறந்துடுங்க'ன்னு இந்த 1998ல் சொன்னா அது பேத்தலா தான் இருக்கும்.

ஏன்னா சினிமா, டி.வி தொடர்கதை நாடகம் எல்லாமே காதலன்னுதான் மாரடிக்கிறாங்க. காதலிக்கறவங்களை சேர்த்து வைக்கற இந்தியா, பாகிஸ்தான் இணைப்பு மாதிரியெல்லாம் நினைக்கறாங்க.

பேண்ட்டு போடாத பையன் - வயசுக்கு வராத பொண்ணெல்லாம் காதலிக்கறாங்க, ஓடியும் போறாங்க. 'அவர்களைப் போகவிடுங்கள். காதல் மலர்களைப் பறிக்காதீர்கள் கசக்காதீர்கள்! காதல் ஒரு புனிதம்! காதல்... ஒரு கங்கை'ன்னு பெனாத்து பெனாத்துன்னு பெனாத்துறாங்க.

அப்படி ஓடுறவனால அவளை வெச்சு குடும்பம் நடத்த முடியுமா? - வாழ்க்கைச் சிக்கலைச் சமாளிக்க முடியுமா? தாகத்துக்கு குடிக்கிற தண்ணி பாட்டில் பத்து ரூவா விக்குதே... இவங்க என்ன செய்வாங்கன்னுல்லாம் யோசிக்கறதே இல்லை!

அவங்களே அப்படின்னா இளசுகளைக் கேக்கணுமா?

அதான் ஒரு பெரிய ராஜவைத்யமாச்சே... 'அன்பே ஆட்டுக்குட்டி'யேன்னு இதுங்க கிறங்கித் திரியுது. இவங்க கிட்ட பேசவே கூடாது. பேசாம காரியம் பாக்கணும்."

- தர்மராஜ் 'வளவள' என்று பேச விரும்பவில்லை என்று சொல்லி விட்டு சற்று வளவளத்துதான் முடிக்கிறார். மாணிக்கத்திடம் தலையில் நடுப் பாகமாகப் பார்த்து இடி இறங்கினது போல ஒரு பாதிப்பு!

"இப்படி அதிர்ச்சியடையறதுல கொஞ்சமும் பலன் கிடையாது. நல்லவேளை நம்ம பசங்க கொஞ்சம் கண்யமாதான் காதலிக்கறாங்க. அபார்ஷனுக்கெல்லாம் இடம் கொடுக்கலை! அந்த மட்டுல சந்தோஷப்பட்டுக் கணும். அப்படியே போனாலும் அதிர்ச்சியடையக் கூடாது. ஆனானப்பட்ட அமெரிக்க ஜனாதிபதியே அம்மட்டுல அம்பேலாயிட்ட உலகம் இது! நான் ஒருத்தன் ஏதேதோ பேசறேன்... பாருங்க மிஸ்டர் மாணிக்கம்... நான் உங்களை நீங்க ஆசைப்பட்ட மாதிரி ஆக்கறேன். நான் சொல்றபடி கேட்டா உங்க பொண்ணு என் மகனுக்கு மனைவியாக மாட்டா... தங்கச்சி ஆயிடுவா... எப்படி வசதி?"

"எப்படி சார்...?" மாணிக்கம் ஈனசுரத்தில் கேட்கிறார்.

"என் மனைவி ராஜேஸ்வரிக்கு ஒரு தங்கச்சி இருந்தா... எங்க கல்யாணத்துக்கு முந்தியே ஒருத்தனோட ஓடிப் போயிட்டா! என் மாமனாரும் அவ முகத்துலேயே முழிக்கக் கூடாதுன்னு அவளோட போட்டோவைக் கூட எரிச்சுட்டார். அப்படி ஓடிப்போன தங்கச்சிதான் உங்க சம்சாரம். நான் என்ன சொல்றேன்னு உங்களுக்குப் புரியுதா?"

"புரியுது சார்..." என்கிறார் மாணிக்கமும் பிரகாசமாக...!



# 5

***'காதலுக்கு மயக்கம் அதிகமென்றால்***
***அதற்கான சதிக்கு அறிவு அதிகம்!'***

'புரிகிறது' என்று சொன்ன மாணிக்கத்தின் எதிரே இப்பொழுது ஒரு பிளாங்க் செக். நீட்டுபவர் தர்மராஜ்.

"இருக்கட்டுங்க... முதல்ல விவகாரம் முடியட்டும்... பிறகு வாங்கிக்கறேன்..." - தான் ஒன்றும் பணத்துக்குப் பறக்கும் நபர் கிடையாது என்பது போன்ற தயக்கம் மாணிக்கத்திடம்.

"இல்ல மாணிக்கம்; வாங்கிக்கங்க... பணத்தை வாங்கிகிட்டா உங்களுக்கும் ஒருவேகம் வரும், கைநீட்டி காசு வாங்கிட்டோம் காரியத்தை நல்லபடி முடிக்கணும்'கற டெம்ப்ரமென்ட் உங்களுக்கு இருக்கும்..."

தர்மராஜ் தான் எந்த ஜாதி என்று அந்த பதிலிலேயே சொல்கிறார்.

"ஒருக்கால் நம்ம பசங்க நம்ம பிளானுக்கு அல்வா கொடுத்துட்டா என்ன பண்ணுவீங்க? செக்க திரும்பிக் கேட்பீங்களா?"

"சேச்சே... கீழ சிந்துன சோறும் என் கையவிட்டுப் போயிட்ட செக்கும் எனக்கு ஒண்ணுதான். அத திரும்ப எடுக்க நான் நினைச்சு கூட பாக்கமாட்டேன்..."

"பணத்த சரி... அவங்க உறவ?"

"அத எப்படிக் கழட்டறதுன்னு அதுக்கப்புறமா யோசிப்பேன்."

"காதல்னா எந்த அளவுக்கு உங்களுக்கு வெறுப்பா?"

"ஆமா... காதல்ன்னா என்ன? மனசுக்குப் பிடிச்சவ ளோட படுத்துக்க ஆசைப்படறது தானே?"

"அதுல தப்பில்லியே..."

"எப்படித் தப்பில்ல? அப்படி அவங்க செய்யறதால யாருக்கும் எந்த சிக்கலும் வரலேன்னாதான் அது சரி."

"நம்ம பெரிய மனசு பண்ணினா சிக்கல் எங்க இருக்கு?"

"அப்படின்னா... என் மகன் ஒரு அன்னக் காவடியைப் பாப்பான். அவன் ஏதோ சில்மிஷம் பண்ணு வான்... அது பிடிச்சுப் போயிடும் அவளுக்கு. அவளுக்குப் பிடிச்சுட்டதாலேயே எனக்கும் பிடிக்கணுமா? உடம்பும் உடம்பும் பாத்துக்கவர்ற விஷயம் தானேய்யா இன்னைக்கு காதல்?"

"அப்ப மனசும் மனசும் பாத்துக்கறதேயில்லை?"

"எந்தக் காலத்துல பாத்துக்கிட்டிருக்கு? இரண்டு குடும்பங்களுக்கு வேணும்னா நீங்க சொல்றது சாத்யம்! அதுவும் கொஞ்சம்தான். முப்பது வருஷமாச்சு எனக்கு கல்யாணமாகி... என் பொண்டாட்டிக்கு இன்னும் என் மனசு தெரியல சரியா... உங்க பொண்டாட்டி உங்களை புரிஞ்சுகிட்டாங்களா முழுசா?"

"அப்படின்னா... காதல்னாலே அபத்தம் தாங்க நீங்களா?"

"கற்பூரம் வாங்கிட்டு வாங்க. அடிச்சு சத்தியம் பண்ணிச் சொல்றேன் அதை...!"

தர்மராஜ் சளைக்காமல் சொன்ன பதில்களைத் தொடர்ந்து செக்கை எடுத்து பாக்கெட்டில் போட்டுக் கொள்கிறார் மாணிக்கம்.



"நிறைய எழுதிக்குங்க... பெரிய பிசினஸ் மேனா வரணும்... பாக்கும்போது நான் சந்தோஷப்படுவேன். மகளை சட்டு புட்டுன்னு வேற யாருக்காவது பாத்து மாட்டிவிடவும் தயாராயிருங்க..."

"தயாராவே இருக்கான்... ஒருத்தன்... பேர் வேணு! என்னைப் போலவே ஸ்பேனர் பிடிக்கறவன்..."

"ரொம்ப சந்தோஷம். முதல்ல சாமர்த்யமா கழட்டி விடுவோம். பிறகு நீங்க வேணுவைப் பிடியுங்க. நான் என் மச்சினன் மகள் அனுவை பிடிக்கறேன்."

மாணிக்கம் சிரித்தபடி அங்கிருந்து கிளம்பத் தயா ராகிறார். வாசலைத் தாண்டும்போது கேட்கிறார் தர்மராஜ் "நம்மோட அடுத்த கட்டம்?"

"நீங்க காதலுக்கு சம்மதம் சொல்லி, மகனோட பெண் பார்க்க வீட்டுக்கு வர்றீங்க. அங்க உங்க சம்சாரம் என் சம்சாரத்தைப் பாத்து தங்கச்சிம்பாங்க, என் சம்சாரமும் அக்காங்கும்..." அப்புறம் என்ன?"

"அப்ப அணுகுண்டு வெடிக்கும், வெடிக்கணும், சரிதானே?"

"சரிதான்!"

மாணிக்கம் பாக்கெட்டில் தஞ்சமடைந்த செக், அவரை அழுத்தமாகவே நிமிர்த்தில விட்டிருக்கிறது.

வாழ்க செக்குகள்!



**ப**வுடர் தீர்ந்து விட்டது. இருந்தும் இண்டு இடுக்கில் ஒட்டி இருப்பதை நகத்தால் கீறி எடுத்து. முகத்தில் பூசிக் கொண்டு கண்ணாடி பார்க்கிறாள் வசந்தா, சுமாராகத் தெரிவதாகத்தான் தோன்றுகிறது. டி.வி,யில் வரும்

அழகு சுந்தரிகளின் ஒரு லோஷனை போட்டுப் பார்க்க வக்கில்லாத கோபம், மூக்கு நுனியை மட்டும் சிவப்பாக்கு கிறது.

"சிம்பிளா இருக்கும் போதுதான் வசந்தா நீ அழகா இருக்கே..." ஜோதி சொன்னது உள்ளுக்குள் ஓடி மேக்கப் கவலை போதும் என்கிறது. இருந்தும் மனது கேட்க வில்லை. 'திரும்ப ஒரு தடவை சோப் போட்டு முகம் கழுவ லாமா?'

அப்படியும் இப்படியுமாகத் திரும்பி கோணம் கோணமாக அழகு பார்த்துக் கொண்டே நினைக்கிறாள். பாவாடை தாவணி வேறு, 'பழசான என்னை என்ன செய்யப் போகிறாய்' என்று கேட்கிறது.

"கவலப்படாதே... ஹனிமூன் போகும்போதே நூறு சேலைக்கு ஆர்டர் கொடுத்துடறேன். ஒரு மணி நேரத் துக்கு ஒரு சேலை நீ கட்டினாலும் எனக்கு ஆட்சேபனை இல்லை" ஜோதி அவளிடம் தன் பணக்கார கித் தாப்பைக் காட்டியிருந்தது கச்சிதமாக அந்த வேளையில் மனதில் டாலடிக்கிறது.

கொஞ்ச நாள்தான்...

இன்னும் கொஞ்சமோ கொஞ்ச நாள்தான்...

அதன்பின் இந்த ரசம்போன கண்ணாடியோ சாயம் போன தாவணியோ எதற்கும் வேலையில்லை. சோழராணிகளின் அந்தப்புரம் போலிருக்கும் அறை தான் இனி தன் உலகம்! அங்பே பறக்கலாம் - மிதக்கலாம் - எல்லாம் செய்யலாம்.

கனவு...

கலர் கலராகக் கனவு!



வசந்தாவுக்குள் பட்டுப் பூச்சிகளைப் போல பறக்கும் கனவு - அதை தூர இருந்தபடி சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கிறார் மாணிக்கம்... "பாத்தியா வள்ளி உன் மகளை... அரை மணி நேரமா மேக்கப் போட்டுக்கிட்டு கனவு கண்டுகிட்டிருக்கறதை..."

"நானும் பாத்துகிட்டு தாங்க இருக்கேன். இங்கே என் தலைல கல்ல தூக்கி போட்டுடுவாளோன்னு பயமா இருக்கு..."

"இனிமேதான் போடணுமா என்ன... போட்டாச்சு வள்ளி."

"என்னங்க சொல்றீங்க?"

- மாணிக்கம் விவரிக்கத் தொடங்குகிறார். அந்த கீழ்த் தட்டுப் பெண்ணின் மஞ்சள் பூசிய முகத்தில் அதிர்ச்சியும் கவலையும் சரம்சரமாக வந்து தாக்கத் தொடங்குகின்றன.

"நெசமா... நெசமாவா?" என்று இடையிடையே கேட்டு ஊர்ஜிதம் செய்து கொள்கிறாள்.

"சத்யம் புள்ள... நம்ம தலைமுறைல யாரும் இப்படி வாசல் தாண்டினதில்ல நம்ம பொண்ணு தாண்டிட்டா... என்ன நெஞ்சழுத்தம் பாத்தியா? இந்த நிமிஷம் வரை ஒரு வார்த்தை உன்கிட்ட என்கிட்ட சொல்லலை... இதை இப்படியே விடச் சொல்றியா?"

"கூடாதுங்க... வேணுக்குத்தான் இவள்னு அவ னோட அப்பனும் அம்மாவும் சாகும்போதே செய்து கிட்ட சத்யம் அப்புறம் என்னாகறது...?"

"அதுக்குத்தான் ஒரு ஏற்பாடு செய்துருக்கேன்..."

"என்ன பண்ணப் போறிங்க? அவளைப் பிடிச்சு வீட்டுக்குள்ள ஒரு ரூம்ல பூட்டி வைச்சுடுவோமா?"

"பூட்டி வெச்சா? போக்கத்தவளே... எந்தக் காலத்துல இருக்கோம்கறத தெரிஞ்சுகிட்டு பேசு... அது இப்ப ஒரு போதைல இருக்குது... அந்த போதை இருக்கே... அது கொடுமையானது. பக்கத்து வீட்டு பால்காரன் பொண்ணு பார்வதி என்ன செஞ்சா - மறந்து போச்சா? மண்ணெண் ணையை ஊத்திகிட்டு வெச்சுகிச்சு... பத்தாததுக்கு அவங்க அப்பா அம்மாவை போலீஸ் அலைக்கழிச்சே தாளிச் சிட்டாங்க. பேப்பர்ல வேற தினசரி அந்த தீக் குளிப்பு பத்தி செய்திங்க... நாறிட்டாங்கள்ல...?"

"ஆமாங்க என்னங்க பண்றது?"

"அதான் சொன்னேனே... தர்மராஜ் சம்சாரம் உன் அக்கான்னு... நீ ஓடிவந்து என்னை கட்டிகிட்டவ. அதை அப்படியே சாதிச்சுடு."

"வசந்தா நம்புமா?"

"ஏன் நம்பாது? நம்ப வெப்போம். நாமளே காதல் ஜோடிங்கதானேன்னு பேச்சை ஆரம்பிச்சு அதோட காதலுக்கு சர்ப்போர்ட் பண்ற மாதிரி நடி! அதே நிலை தான் அங்கேயும்... தர்மராஜும் பொண்ணு பாக்க பையனைக் கூட்டிக்கிட்டு வருவார்.

வந்த இடத்துல குண்டு வெடிக்கட்டும். நாம என்னம்மா பண்றது. விதி சதி பண்ணிடிச்சு... இனி எங்களால உங்களை ஒண்ணு சேர்க்க முடியாது. ஊர் சிரிக்கும்னு சொல்வோம். அவங்களுக்கும் வேற வழி இல்லாம போயிடும்."

"கரெக்டா நடக்கணும்களே...?'

"நடக்கும் வள்ளி; நல்லவேளை தர்மராஜ் சம்சாரத் துக்கு அப்பா அம்மா இல்லையாம், உனக்கும் இல்லை, உடன் பொறந்தவங்களும் இல்லை. தூரத்து சொந்தங்க, இருந்தா சொதப்பிடுவாங்க. ஆனா அவங்களதான் நாம கிட்டையே சேர்க்கப் போறதில்லையே..."

நடுங்கியபடி ஒப்புக் கொள்கிறாள் வள்ளி. மாணிக் கத்தின் முகத்தில் கோபம் இழையும் வெற்றிப் புன்னகை பாவம் வசந்தா... காதல் கனவோடு ஜோதிஷங்கரை சந்திக்க கிளம்பிக் கொண்டிருக்கிறாள்.

●●●

**கோ**ன் ஐஸ் வாங்கிக் கொண்டு வந்து அமர் கிறான் ஜோதி. முகத்தை மத்தாப்பாக்கிக் கொண்டிருக் கிறான்' வசந்தா எதிரில் நீட்டியபடி "வாங்கிக் கொள் என் தேவதையே... வசந்தகாலம் பிறந்துவிட்டது." என்கிறான்.

"உங்களுக்குப் பொறந்துடிச்சு... எனக்குப் பொறக்க வேண்டாமா?" கவலையோடு மருதாணிச் சிவப்பு நகத்தை கடிக்கிறாள் வசந்தா.

"ஏய்... பெரிய கஷ்டம்னு நினைச்சது என் பேரண்ட்ஸைதான்! அதுவே சரியாயிடிச்சு. உனக் கென்ன?"

"எனக்கென்னவா... உங்கப்பாம்மாவுக்கு எங்கப் பாம்மா எதுல சளைச்சவங்க! வேணும்னா உங்ககிட்ட காசு இருக்கலாம் அதுக்காக நீங்க சம்மதிச்சிட்டீஙகன்னு எங்க வீட்ல இறங்கி வருவாங்களா என்ன? உங்கப் பாம்மாவுக்கு பணம் பெரிசு... எங்கப்பாம்மாவுக்கு ஜாதி பெரிசு...!"

"சரி; அப்ப மேல ஏறிக்க சொல்லு, நல்லா முட்டிக்க சொல்லு... யாரோ சொல்வியே ஒரு ஃபிட்டர் பையன் வேணுன்னு. அவனையே கட்டிக்கோ... நல்லா

இரு! என் லெவலுக்கு நான் சிம்ரனையாவது கஜோலையாவது ட்ரை பண்றேன்."

"சிம்ரனை... கஜோலை... நீங்க?"

"ஏன்... முடியாதுங்கறியா? நடிகைன்னா தொழிலதிபரைத்தான் கல்யாணம் செய்துக்கணும்கற எழுதப்படாத விதி ஒண்ணு இருக்கும்மா... எனக்கென்ன குறை? பதினேழு கோடி இப்ப என் பிராப்பர்டி!"

"அப்புறம் தெருக்கோடிதான்... அதத் தெரிஞ்சுக்கங்க..."

"இப்ப என்ன வாழுது... உனக்காக டெய்லி உன் பன்னியும் நாயும் திரியற தெருக்கோடிக்கு நாலு கார் இருந்தும் நான் வந்து நிக்கலை?"

"ஹலோ... காதலுக்காக சாம்ராஜ்யத்தையே இழந்த ராஜாக்களே உண்டு சார் - தெரிஞ்சுக்குங்க. இந்த தெருக்கோடி உங்களுக்குக் கசக்குதோ?"

"சரிங்க மகாராணி... வளவளப்பு போதும்... உன் ஜாதகம் வேணுமே."

"எதுக்கு?"

"என் அப்பா வாங்கிட்டு வரச் சொன்னார். பொருத்தம் பாக்கணுமாம்."

"ஜோசியர், 'ஜாதகப் பொருத்தம் இல்லை'ன்னா... 'இந்தக் கல்யாணம் நடக்க கூடாது'ன்னுட்டா?"

"வாயக் கழுவு." எகிறி கோன் ஐஸ் சிதற அவள் வாயைப் பொத்துகிறான் ஜோதிஷங்கர். அந்த க்ஷண விநாடியில் கண்களில் கண்ணீரின் துளிகளும் கூட...!

"ஜோதி..." - சிலிர்த்துப் போகிறாள் வசந்தா.



"கிளம்பு... நேரா கோவிலுக்குப் போறோம். மீனாட்சியைப் பாக்கறோம். அப்புறமா என் கார்லயே நான் உங்க வீட்டுக்கு வரேன். உங்க அப்பா அம்மாகிட்ட விஷயத்தைச் சொல்லி சம்மதம் கேக்கறேன். நடுவுல அபசகுனமா எதையும் சொல்லிடாதே வசந்தா. அவங்க முடியாதுன்னு பேசினா கால்ல விழறேன். எனக்கு என்ன குறை'ன்னு கேக்கறேன்... நிச்சயம் சம்மதிப்பாங்க. கிளம்பு வசந்தா..."

- கோன் ஐஸை விட்டெறிந்து விட்டு ஒரு சடார் வேகம் எடுக்கிறான் ஜோதிஷங்கர். வசந்தா அவனை அப்படி இப்படி அசையாது வெறிக்கிறாள்.

"ஏய் உன்னைத்தான்... கிளம்புன்னேன்..."

"பயமா இருக்கு ஜோதி... எதுக்கும் கொஞ்சம் யோசிச்சு..."

"வேண்டாம். என் தைரியம் கரையறதுக்கு முந்தி கிளம்பு... என்னிக்கு இருந்தாலும் ஒரு நாள் இப்படிப் பேசித்தானே தீரணும். கிளம்பும்மா. கிளம்பு..."

- அரை மனதாக நெஞ்சு கொள்ளாத பயத்தோடு அவனோடு கிளம்புகிறாள் வசந்தா!

●●●

அதே டேபிளில் இப்பொழுது அனுவும் வேணுவும்!

"யார் அனு இது? வாங்கின கோன் ஐஸை கூட சாப்பிடாம போட்டுட்டு போனது...?" - வேணு கடைத்துக் கொள்ள...

"இப்ப இதுதான் ரொம்ப முக்கியமாக்கும்." - என்று அவனை கூர்மையான தன் கண்களால் கொத்துகிறாள் அனு.

"தேங்க்ஸ்டா..."

"எதுக்கு?"

"இந்த கம்யூனிஸ்ட்டையும் ஒரு கேபிடலிஸ்ட் நேசிக்கச் செய்ததுக்கு..."

"கம்யூனிஸ்ட் கேப்பிடலிஸ்ட் எல்லாமே சும்மா... நீங்க நிஜத்துல காதலிஸ்ட்! தேங்க்ஸை அதுக்கு சொல்லுங்க."

"ஆமா... எப்படி சம்மதிக்க வைச்சே?"

"அவசியம் தெரியணுமா வேணு..."

"ஆமாம் அனு. உன் அப்பா சந்தோஷத்தோட சம்மதிச்சாரா, இல்லை நிர்பந்தத்தால சம்மதிச்சாராங் கறது எனக்கு ரொம்ப முக்கியம்."

"மொத்தத்துல சம்மதிச்சுட்டார். அதுதான் எனக்கு முக்கியம்..."

"அதுவும் முக்கியம். அதே சமயம் அதுல முழு மனசு இருக்கணும்."

"எந்த பேரண்ட்சும் காதலுக்கு முழுமனசோட சம்மதம் சொல்றதில்ல வேணு."

"அப்ப அரை மனசாதான் சம்மதிச்சாரா?"

"அரை கூட இல்லை... கால்.... ஊஹூம் அது கூட இல்லை... பாய்ன்ட் ஒன் பர்சன்ட் அதுகூட இல்லேன்னு சொல்லலாம்...."

"அப்ப உன் நிர்பந்தத்தால நடந்ததா அவர் மாற்றம்?"

"ஆமாம்..." - சொல்லிக் கொண்டே ஹேண்ட் பேக்கில் இருந்து பாய்சன் பாட்டில் ஒன்றை எடுக்கிறாள்.



"இதைகாமிச்சேன். நான் வேணும்னா சம்மதிங்க... இல்லேன்னா இது எனக்குள்ள போயிடும்னேன்"

"அடப்பாவமே..." - வேணு முகம் அஷ்ட கோண லாகிறது.

"என்ன பாவமே?"

"இல்ல அனு... அவர் முழு மனசா சம்மதிக்கணும். அதான் எனக்கு வேணும்."

"அது இந்த ஜென்மத்துல சாத்யமில்ல வேணு."

"சாத்யம் அனு... நான் வேலைய ரிசைன் பண் ணிட்டு டிக் லோன் போட்டு ஒரு மினி இன்டஸ்ட்ரி ஆரம்பிக்கறேன். என் சொந்த முயற்சில இங்கிலீஷ் ஃப்ரெஞ்ச் எல்லாம் படிக்கறேன்... அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கு... உங்கப்பா அளவு இல்லேன்னாலும் நானும் அவரைப் போல ஒரு இன்டஸ்ட்ரியலிஸ்ட்டா வருவேன்! என் முன்னேற்றம் அவரை அசைக்கும்."

"அப்ப அதுவரை...?"

"காத்திரேன். அதுல என்ன குறைஞ்சுடப்போகுது?"

"டேய்ய்..." - அனு அவன் கரத்தை இழுத்துப் பிடித்து முத்தமிடுகிறாள்.

"நீ கிரேட் வேணு. உன் இந்த பாலிசி, உன் இந்த மனசு, உன் இந்த தன்மானம், உன் இந்த சுயகௌரவம் இதுதான் என்னை எப்பவுமே கவர்ந்தது... கவர்ந்து கிட்டிருக்கு! அப்படியே செய் வேணு. அப்பா மூஞ்சியில கரியப் பூசு நான் காத்திருப்பேன்..."

அனு கசிகிறாள். கண்ணீர் சொறிகிறாள். பேரர் இருவருக்கும் இடையே மூன்றாவது முறையாக முகத்தை நுழைத்து "ஆர்டர் பிளீஸ்" என்கிறான்.

"ரெண்டு காபி..." என்கிறான் வேணு சிம்பிளாக.

அவள் அவனையே கண்களால் குத்தி நெம்பு கிறாள். அவனை அது குளுக்கோஸ் குளத்தில் தூக்கிப் போடுகிறது.

அப்பொழுது....

# 6

*'காதல் என்பது பாதரசம்...*
*சிதறினால் சேர்ப்பது மிகக் கடினம்!'*

**ஹோ**ட்டலுக்குள் தர்மராஜ் பிரவேசிக்கிறார்!

அவரது பிரவேசத்தை அனு பார்த்த மாதிரியே தெரியவில்லை. நவீன ஹோட்டலுக்கேயுரிய வெளிச்சம். உள்கட்டு மனிதர்களை கருப்பு நிழலுருவாகத்தான் காட்டுகிறது. ஆனாலும் கதவைத் திறந்து மூடும் இடம் அருகே அனுவும் வேணுவும் உட்கார்ந்திருப்பதால் அவர்களை அவ்வப்போது நல்ல வெளிச்சத்தில் தர்ம ராஜால் மட்டும் பார்க்க முடிகிறது.

கருப்பு நில ஆஸ்திரேலிய ஷாக்வம் சிகரெட் பிடித்தபடி உள்ளே வந்து அமர்ந்துவிட்டவர் ஆடாமல் அசையாமல் புகையைக்கூட உமிழாமல், அனு வேணுவைத் தான் பார்க்கிறார். 'அடச்சே...' என்று அடிமனசில் ஒரு புலம்பல்.

வயிற்றை சங்கடப்படுத்தியது சாப்பிட்ட ஏதோ ஒன்று. ஒரு பாதாம்கீர் சாப்பிட்டால் அந்த சங்கடம் சற்று சரியாகும். அதற்காக உள்ளே வந்தால் இப்படி ஒரு விபரீதமான காட்சி! ஒரே ஐஸ்கிரீமை இருவரும் விதரணையின்றி சப்பிச் சாப்பிடுவதும் அவள் கூந்தலை விலக்கி விட்டுக் கொண்டு ஒரே மாதிரி சிரித்தபடியே இருப்பதும் காதலிப்பவரிடம் தவிர வேறெங்கும் பார்த்திட முடியாது.



"யார் இந்தப் பையன்?" தர்மராஜின் மனதில் அனு நேசிக்கும் அவனைப் பார்த்துவிட வேண்டிய ஆசை முட்டி மோதத் தொடங்குகிறது, கிட்டே சென்று பார்க்க வும் தயக்கமாக இருக்கிறது. அவரது ஆசையைத் தெரிந்ததுபோல வேணுவும் எழுந்திருக்கிறான்.

"அனு... இரு ஒரு போன் பண்ணிட்டு வரேன்." - என்று சொன்னபடி அவரைத் தாண்டுகிறான். முகத் திலோ, உடுப்பிலோ எதிலும் துளிகூட பணக்காரத் தன்மையே இல்லை.

"யாராக இருக்கும்?"

கேள்வி, நெற்றி நரம்பைப் பியக்கிறது.

**மி**க லாவகமாய் வளைத்து போர்டிகோவில் அந்த ஆப்பிள் நிற சியலோவை நிறுத்துகிறான் டிரைவர்.

இறங்குகிறார் தர்மராஜ்.

உள்ளிருந்து மயில்வாகனத்தின் உற்சாகமான வரவேற்பு.

"வாங்க மாப்ள... என்ன இது ஒரு போன் கூட பண்ணாம?'

சற்று நமுத்த அப்பளமாக இருக்கும் தர்மராஜ் முகத்தைப் பார்த்துக் கொண்டே கேட்டபடி ஆசனத்தைக் காட்டுகிறார் மயில்வாகனம்.

"ஆமா... எங்க அனு?"

"என்ன இது, உள்ள நுழையும்போதே இன்னிக்கு மருமகளைக் கேட்கறீங்க... அதுக்கு இன்னும் நாள் இருக்கு மாப்ள..."

"எதுக்கு?"

"எதுக்கா... அனு உங்க மருமகளாக..."

"ஆவாங்கறியா மயில்வாகனம்?"

"நறுக்கென்று ஒரு குத்து... அதன் வலி மயில் வாகனத்திடம். என்ன சந்தேகம் அதுல மாப்ள..."

"அப்படியா... அப்படின்னா ஹோட்டல் பக்கம் போய்ப்பாரு, அவ ஒருத்தனோட இழைஞ்சுக்கிட்டிருக் கறத பார்க்கலாம்."

மயில் வாகனம் திணறலில் பொருமுகிறார்.

"எந்த ஹோட்டல்... யாரோட?"

"வருவா... நீயே கேட்டுத் தெரிஞ்சுக்க... ஆமா மகளை வளர்க்கற லட்சணம் இதுதானா?"

திரும்பவும் மயில் வாகனத்திடம் திணறலின் பெருக்கம்.

"இப்படி முழிச்சா எப்படி மயில் வாகனம்? அந்தப் பயல பார்த்தா அன்னக் காவடியாட்டம் இருக்கான். ஏன் இந்தப் பொண்ணுக்கு புத்தி இப்படிப் போகுது? அனு வுக்கு ஜோதி - ஜோதிக்கு அனுன்னு இன்னிக்கு நேத்தா பேசிக் கிட்டிருக்கோம். அவங்க பொறந்தப்ப இருந்து பேசல?"

தர்மராஜ் கிழிகிழி என்று கிழிக்க, மயில்வாகனம் மூடி மறைத்து சமாளிக்கப் பார்த்த ஒரு விஷயம் இப்படிக் கிழிபடுவதை நினைத்து வெலவெலக்க...



"மாப்ள... நீங்க டெம்ப்ட் ஆகாதீங்க. இப்ப என்ன கெட்டுப் போச்சு... அவ எவனை லவ் பண்ணாலும் சரி., அவங்கள பிரிச்சு ஜோதியோட சேர்க்க வேண்டியது என் பொறுப்பு. நீங்க கவலைப் படாதீங்க..."

"நல்லா இருக்கு மயில் உன் நியாயம்... மனசுல ஒருத்தன்... உடம்புக்கு ஒருத்தனா... உன் பொண்ணு ஒத்துக்குவாளா?"

"ஒத்துக்க வைக்கறேன். அது என் பாடு... என்ன மாப்ள நீங்க...? இன்டர்நெட் யுகத்துல வாழ்ந்துகிட்டு மனசு உடம்புன்னுல்லாம் பேசிக்கிட்டு?"

"எந்த யுகமா இருந்தாலும் இந்த காதல் கிறுக்கு இருக்கு பாரு... இது கொடுமையானது. கிரீஸ் பூசுன மாதிரியாயிடும் அறிவு."

"ஒத்துக்கறேன் ஒத்துக்கறேன்... இரண்டு பேரையும் பிரிக்கிற வேலைய நான் எப்பவோ ஆரம்பிச்சாச்சு. செடியும் நோகாம, காம்பும் பால் விடாம பூவை எப்படிப் பறிக்கறதுன்னு எனக்குத் தெரியும் மாப்ள..."

"அப்ப இவங்க காதல் உனக்கு முந்தியே தெரியுமா?" தர்மராஜ் மடக்குகிறார்.

மயில்வாகனம் திரும்ப பேந்தப் பேந்த முழிக்க பெரிய ஆளுய்யா நீ... மச்சினன் ஆச்சேன்னு பாக்கறேன்' என்று சொல்லும்போதே தன் மகன் ஜோதியும் இப்படித் தானே ஒரு பெண்ணிடம் கூத்தடித்துக் கொண்டிருக் கிறான் என்கிற நிஜம் மனதடியில் மெல்லக் கசிகிறது.

"ஊஹூம்... அதைப்பற்றி இங்கே பேசிவிடக் கூடாது. அதை சமாளிக்கத்தான் மாணிக்கத்தைப் பிடித்து செக்கைக் கிழித்து ஏகப்பட்ட வேலைகளை செய்தாகி விட்டதே...

இனி என்ன அதைப்பற்றி பேச்சு? நம் மகனும் இப்படி காதல் பைத்தியம் என்பது தெரிந்தால் மயில் வாகனத்தை இப்படி தடாலடியாக மிரட்டி பேச முடியுமா? சீர்வரிசை வகையறாக்களைத்தான் உரிமையோடு பட்டியல்போட்டு வாங்க முடியுமா?

தப்பித் தவறிக்கூட இங்கே ஜோதியின் காதல் பற்றி மூச்சுவிடக்கூடாது..."

தீர்மானிக்கிறார். கலக்கமுடன் பார்க்கும் மயில் வாகனத்தை நோக்கி "சரி சரி; ஏதோ ஆதங்கத்துல கத்திட்டேன்... மனசுல வெச்சுக்காதே... ஆமா எப்படி பிரிக்கப் போறே? என்ன பிளான் போட்டு வெச்சிருக்கே?"

நேராக விஷயத்துக்கு வருகிறார்.

"அது... அது..."

"எது...? சொல்லு... சொதப்பலா நீ எதையாவது சொன்னா நான் நல்லவிதமா சொல்லலாம் இல்லியா?"

கேட்டு விட்டு தனக்குள்ளே ஒரு காதல் ஜோடியை அண்ணன் தங்கையாகவே ஆக்கப்போகிறேன். இதென்ன சுண்டைக்காய், என்றும் சொல்லிக் கொள்கிறார்.

"அது வந்து மாப்ள... அந்தப் பையனை இப்போதைக்கு என் ஃபேக்டரி மேனேஜர் லெவலுக்கு ஆக்கறதா சொல்லி ஆசை காட்டி வெச்சிருக்கேன். போகப் போகத் தான் அவனை என்ன பண்றதுன்னு யோசிக்கணும்.

"இன்னும் யோசிக்கவேயில்லையா?"

"இல்ல... அனு கைல இருக்கற பாய்சன் பயமுறுத்திகிட்டே இருக்கு மாப்ள..."



"ஓஹோ... பாய்சன்தான் அவளோட த்ரெட் பாய்ன்ட்டா? இட்ஸ் ஓ. கே... அந்தப் பாய்சனை அவ கையாலயே அந்தப் பையனுக்கு கொடுக்க வைக்க நான் வழி சொல்லட்டுமா?"

"எப்படி?"

"அவனோட பலவீனம் என்னன்னு தெரியுமா உனக்கு?"

"ஏழ்மை"

"ஏய்... காதல்ல அது இப்ப பலம்! வேற ஏதாவது சொல்லு."

"கண்டுபிடிக்கணும். யோசிச்சா வேணு ஒரு கம்யூனிஸ்ட்..."

"என்ன சொன்னே... கம்யூனிஸ்ட்டா? அவன் பேரும் வேணுவா?"

"ஆமா..."

"இது போதுமே மயில் அவங்களப் பிரிக்க..."

"எப்படி?"

"இப்ப நீ தானே ஃபேக்டரிய பாக்கறே?"

"ஆமா..."

"இனி அனு பாக்கட்டும்... அவளை இறக்கிவிடு. நான் ஒருத்தனை உள்ள அனுப்பறேன். அவன் அவள் எதுக்க அடாவடி பண்ணுவான். ஆனா வேணு எதுக்க ரொம்ப யோக்யமா நடந்துப்பான்... அடாவடி பண்ணினதுக்கு அனு தண்டனை தரட்டும்... 'அவன் யோக்யன்... எப்படி தண்டனை தரலாம்'னு வேணு வக்காலத்து வாங்கட்டும் - யுத்தம் ஆரம்பமாகும். அப்புறம் என்ன... பிரிக்கறது சுலபம் தானே?"

- மயில் வாகனம் எழுந்து இரண்டு கைகளைக் கூப்பி பரவசத்தோடு நன்றி கூறுகிறார்.

"மாப்ள... உங்களுக்கு உடம்பெல்லாம் மூளை. நீங்க இந்தியாவுல இருக்க வேண்டிய ஆளே இல்லை!" என்கிறார்.

தர்மராஜ் கொழுப்பு கலந்த தனது கழுத்துச் சதை மடிப்பை கஷ்டப்படுத்தியபடி சிரிக்கிறார்!

"ஆல் தி பெஸ்ட்" இதில் வாழ்த்து வேறு-புடலங்கா!

**வீ**திக்குள் காரை ஓட்டுவதே பெரும்பாடாக இருக் கிறது. ஆடு; மாடு; கோழி; பன்றி - என்று வீட்டுக்குள் வைத்து வளர்க்க முடிந்த அத்தனையையும் வளர்க்கும் நடுத்தட்டு வளர்க்கும்... ஊஹூம் அதற்கும் கீழான கூட்டம். அந்த ஜந்துக்களைத் தாண்டிக் கொண்டு வண்டியை ஓட்டி வசந்தா வீட்டு முன் நிறுத்தவும் "ஹோய்ய்ய்..." என்கிற கூட்டமுடன் அழுக்கும் கருப்புமான சின்னஞ்சிறுவர்கள் கைகளில் சைக்கிள் டயரை உருட்டியபடி வந்து சூழ்ந்து கொள்கின்றார்கள்.

காரிலிருந்து இறங்குகிறான் ஜோதி ஷங்கர்.

கூடவே வசந்தா. நிறைய வியர்த்து, மயக்கத்துக்கு மிக சமீபத்தில் இருக்கிறாள்,

"இதான் உங்க வீடா!"

"ஆமா...!"

- அவன் அவளிடம் கேட்டபடி வீட்டைப் பார்க் கிறான். உள்ளிருந்து எட்டிப் பார்க்கிறாள் வசந்தாவின் அம்மா வள்ளியம்மாள்.

"யாரு இது கார்ல...?"



"வணக்கம்மா..." - ஜோதி அவளைப் பார்த்து ஒரு வணக்கம் போடுகிறான். "அம்மா... அம்மா..." வசந்தா விடம் இருந்து அவன் யார் என்னும் பதில் சற்று கிசுகிசுப்பாய்...

"உள்ள வாங்க... யார் நீங்க? அட வசந்தா... நீ எப்படி இவரோட கார்ல...!"

"உள்ள வாங்கம்மா சொல்றேன்..."

- அவன் அவர்கள் அழைப்பைப் பற்றிய லஜ்ஜையே இன்றி உள்ளே நுழைகிறான்.

கூடத்தில் நீண்ட பெஞ்ச் ஒன்று. அவன் மேல் ஒரு ஓரமாக எஞ்சின் கேஸின் பிரித்துப் பிடுங்கப் பட்ட பாகம். அதன் பக்கமாய் உட்கார்ந்து கொண்டு நிமிர் கிறான், முக்கோணச்சரிவுக் கூரை. மண் சுவர். சுவற்றில் முடிந்த அளவு காலண்டர்கள். அதன் ஆணிக் காதில் அழுக்குச் சட்டையின் காலர் மாட்டிய தொங்கல்.

"யாரு நீங்க... என்ன விசயம்?" - பொட்டுப் பொட்டாகத் துளிர்க்கும் வியர்வையை ஒத்தியபடி கேட்கிறாள் வள்ளி.

வசந்தா வாசல் கதவருகே நின்று கொள்கிறாள்.

வெளியே எட்டிப் பார்க்கும் விடலைக் கூட்டம்.

"போங்கடா அப்பால... என்ன இங்க டான்ஸா ஆட்றாங்க? வந்துட்டடுங்க... இது ஒரு வீணாப்போன தெரு... பளிச்சுன்னு ஒரு ஆள் வந்துடக்கூடாது... நீங்க சொல்லுங்க யார் நீங்க...! என்ன விசயம்... வசந்தா வேற உங்க கூட வந்துருக்கா?"

- வள்ளியின் கேள்வி முன் தயக்கமாய் தாவக் கட்டை தூக்கிப் பார்க்கிறான் ஜோதி.

"சொல்லுங்க தம்பி..."

"நான்... நான்... என் பேர் ஜோதி ஷங்கர். ஐ.ஏ.எஸ். பரிட்சை கூட எழுதியிருக்கேன். எம்.பி.ஏ கம்ப்யூட்டர் சைன்ஸ்லாம் படிச்சிருக்கேன். தர்மாஸ் அன்கோ'ன்னு கேள்விப்பட்டிருப்பீங்களே..."

"தெரியல... சொல்லுங்க... அதுக்கென்ன இப்ப?'

"இல்ல... அந்தக் கம்பெனி முதலாளி நான்..."

"ஆமாம்மா..பலகோடி ரூபா மதிப்புள்ள கம்பெனிங்க அதெல்லாம்" - வசந்தா குறுக்கில் புகுந்து எடுத்துத் தருகிறாள்.

"உம்ம்.."

"நான்...நான்..."

"சொல்லுங்க..."

"உங்க மக வசந்தாவை மனசார விரும்பறேன்."

அடுத்த நொடி வள்ளியம்மாள் மளமளவென்று வாயில் கதவருகே சென்று அதை ஒருக்களித்துச் சாத்து கிறாள்.

"தெரியும்... எனக்கு நல்லா தெரியும். வீட்ல பவுடர் டப்பா டின் டின்னா தீரும்போதே தெரியும். இப்படி ஒரு நாள் என் தலைல இடி விழும்னு..."

- சாத்தியபடி விசும்ப ஆரம்பிக்கிறாள்.

"அம்மா... நான் வேற சாதி கூட இல்லை... நம்ம ஜாதிதான். நீங்க தப்பா புரிஞ்சுக்கக்கூடாது. காதலிச் சாலும் நாங்க கண்ணியமாத்தான் பழகறோம், மத்தவங்க மாதிரி ஓடிப்போய் திருட்டுத்தனமா கல்யாணம் பணணிக்கறத பத்தி எங்களுக்குத் தெரியாம இல்ல.



ஆனா அது தப்புன்னு.." - அவன் முடிக்கும்முன் முறைப் போடு அவனைப் பார்க்கிறாள் வள்ளியம்மாள்.

"அது தப்பு... அதனால பண்ணலைங்கறியா... உங்களுக்கும் எங்களுக்கும் ஏணி வெச்சா எட்டுமா?"

"வேண்டாம்மா... அந்தஸ்து பேதம் பாக்காதீங்க. உங்க பொண்ணு இந்தக் கேள்விய என்னைப் பார்த்து லட்சம் தடவை கேட்டுட்டா. எனக்கு மனசுதான் பெரிசு. காசு பணம் பெரிசில்ல.."

"இப்ப அப்படிதான்பா சொல்வேன். ஆனா கல்யாணத்துக்குப் பிறகு எல்லாம் பாத்து முடிஞ்சபிறகு 'என்னத்தடி பெரிசா கொண்டுகிட்டு வந்துட்டே... அன்னக்காவடிதானேடி நீ'ன்னு கேப்பே..."

"சத்யமா கேக்கமாட்டேன். நீங்க தப்பா சொல்றீங்க, நான் அப்படிப்பட்ட பையன் இல்ல... நான் உங்க பொண்ணுமேலே உசுரையே வெச்சுருக்கேன். உங்க எல்லாரோட ஆசீர்வாதத்தோடத்தான் கல்யாணம் செய்துக்கணும்னு விரும்பறேன்."

"ஆமாம்மா... தயவு செஞ்சு எதுவும் எதிர்ப்பா சொல்லிடாது எங்களை ஆசீர்வாதம் பண்ணும்மா; அப்பாகிட்டேயும் நீதான்மா சொல்லி சம்மதம் வாங்கித் தரணும்."

- இருவரும் ஒரு சேர காலில் விழுகின்றனர். வள்ளி யம்மாவை அது பிசைகிறது. 'ஐய்யோ இப்படிப்பட்ட ஜோடியையா பிரித்து சகோதர உறவுக்கு மாற்றப் போகிறோம் தெய்வமே...?'

- கேள்வியைச் சுமக்க முடியாதபடி மயங்க ஆரம்பிக்கிறாள் வள்ளியம்மாள்.

# 7

**'ஓசைப்படாமல்'**
**கத்தியும் ரத்தமும் இல்லாமல்**
**ஒரு யுத்தம்**
**ஆரம்பமாகிவிட்டது!**

மயங்கப் பார்த்தாலும் வள்ளி சுதாரிக்கிறாள். காலடியில் கிடக்கும் இருவரையும் தொட்டுத் தூக்கி நிறுத்துகிறாள். இருவரும் பரிட்சை ரிசல்ட்டைப் பார்க்கும் மாணவர்களாட்டம் அவள் முகத்தையே பார்க்கின்றனர்.

நல்ல ஜோடிப் பொருத்தம் தான். சேர்ந்தால் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் மாணிக்கம் சொன்னது காதில் ஒலிக்கிறது. திரும்ப என்னவோ செய்கிறது.

"அம்மா... ஏம்மா. அப்படி பாக்கறே... நல்ல பதில் சொல்லும்மா..." சின்னக் குழந்தையாட்டம் கேவுகிறாள் வசந்தா.

"நல்லாருங்க... இரண்டு பேரும் நல்லாருங்க..." பொத்தாம் பொதுவாக ஒரு வாழ்த்து பொத்தென்று வந்து விழுகிறது.

"ரொம்ப நன்றிங்க. இவ்வளவு சீக்கிரம் சம்மதிப் பீங்கன்னு நாங்க எதிர் பார்க்கவேயில்லை" நெகிழ்ந்து போகிறான் ஜோதி ஷங்கர்.

"நான் சம்மதிச்சு பிரயோஜனமில்லை. அவர் சம்மதிக்கணும்..."

"அம்மா-நீதான் அப்பாவை சம்மதிக்க வைக்கணும்."



"பாக்கறேன்... பாக்கறேன்..." கழுத்து வியர்வையைத் துடைத்து விட்டுக் கொண்டு ஆசுவாசிக்கிறாள் வள்ளி.

உடனே, அனைவர் கவனத்தையும் வாயில் பக்கம் திருப்புகிறது.

"என்னடா இங்க கூட்டம், ரஜினியா வந்துருக்காரு - போங்கடா..." விரட்டும் குரலுக்குரியவர் மாணிக்கம்.

"வசந்தா உன் அப்பா வந்துட்டார்" - வள்ளி சொல்லி முடிக்கும் முன் ஒதுங்கச் சார்த்தப்பட்ட மாங் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பார்வையை விடுகிறார் மெக்கானிக் மாணிக்கம்.

பார்வையில் படும் ஜோதிஷங்கர் வியப்பை உரு வாக்க அவனும் மாமனாரை முதன்முதலாக நேருக்கு நேர் பார்க்கும் அந்த தருணத்தில் பெரிதாக கை எடுத்துக் கும்பிடுகிறான்.

"யார் வள்ளி... சார் யாரு?" செருப்பை ஓரமாக விட்டபடி கேள்வி மாணிக்கத்திடம்.

"தம்பி... தம்பி..."

"நானே சொல்லிட றேங்க. என் பேர் ஜோதி ஷங்கர், தர்மாஸ் இன்டஸ்ரீஸோட மேனேஜிங் டைரக்டர்."

"அப்படிங்களா... ரொம்ப பெரிய கையாச்சே... இந்த ஏழை குடிசைக்கு எதுக்கு வந்திருக்கீங்க...?"

- வசந்தா மேல் பார்வை ஒரு தினுசாக ஊற, மாணிக்கம் கேட்கும் விதத்திலேயே இருவருக்கும் அவர் விஷயம் தெரிந்தவர் என்பது புரிந்துவிட...

"இப்படி மௌனமா இருந்தா எப்படி... ஏ புள்ள... நீதான் சொல்லு, என்ன நடக்குது இங்க..."

"அது வந்துங்க..."

"மென்னு துப்பாதே... அதான். டிவி. ஒரு நாளைக்கு எட்டு படம் போடறாங்களே - பாக்கற எனக்குத் தெரியா தாக்கும். என்னப்பா லவ்வா?"

"அ... அ... ஆமாங்க."

"ஒத்து வருமா? இல்ல கேக்கறேன்... உங்களுக்கும் எங்களுக்கும் ஒத்து வருமான்னு...?"

"தப்பா எடுத்துக்காதீங்க... பத்து வருஷத்துக்கு முந்தி வரை கூட இந்த மாதிரி கேள்விக்கெல்லாம் ஒரு அர்த்தம் இருந்துச்சு. இப்ப இல்லீங்க... சாதி அந்தஸ்து எல்லாம் பெரிய விஷயமே இல்லீங்க. இது இன்டர்நெட் காலம்..."

"எனக்குத் தெரியாதாக்கும்... காலம் எந்த காலமா இருந்தா என்ன? எல்லா காலத்துலையும் அப்பன் ஆயி ஒண்ணாத்தானே இருக்காங்க."

"ஆமாங்க... காதலும் மாறாம அப்படியே தாங்க இருக்கு."

"மடக்கறீங்களா... சரி தம்பி, நான் வளவளன்னு பேச விரும்பல, போய் உங்கப்பா அம்மாவோட வந்து பொண்ணு கேளுங்க. பாக்கறேன் அப்ப..."

- மாணிக்கம் பெரிதாக உலுக்கப் போவது போல் பேச்செடுத்து பின் அப்படியே மாறியதில் இருவரிடமும் திக்கு முக்காடல்!

"ரொம்ப சந்தோஷங்க... நான் முறைப்படி அவங் களைக் கூட்டிகிட்டு வந்தே சம்பந்தம் பேசறேன்."

"சொல்லாதீங்க, செய்யிங்க. ஆனா ஒண்ணு..."

"என்னங்க?"



"அவங்க வரலை, முறையா சம்பந்தம் பேசலைன்னா இந்த கல்யாணம் நடக்காது."

"அதை பத்தி கவலையே படாதீங்க. என் அப்பா எப்பவோ இதுக்கு சம்மதம் சொல்லிட்டார். அம்மாவும் சொல்லிடுவாங்க."

"பாப்போமே."

- ஜோதிஷங்கர் அடுத்த நொடி வசந்தாவை பார்த்து எவரெஸ்டை ஏறி முடித்த பாவனையைக் காட்டுகிறான். அவளும் 'கந்தா கடம்பா' - என்று கை கூப்பி நெக்குருகியிருக்கிறாள்.

ஜோதியின் கார் சீறிக் கிளம்புகிறது.

வாசல்வரை சென்று வழியனுப்பும் முஸ்தீபில் வசந்தா.

உள்ளே வள்ளி மாணிக்கத்திடம், "என்னங்க... நாம இதுங்கள ஏமாத்தப் போறத நினைச்சா எனக்கு பாவமா இருக்குங்க..." தொண்டை அடைக்கக் கேட்கிறாள்.

"என்னடி பல்டி அடிக்கறே?"

"அந்தப் பையனை பாத்தீங்களா... மொகத்த பார்த்தா முருகனைப் பாக்கற மாதிரியே இருக்குதுங்க...."

"நீ எப்ப முருகனை பாத்தே...?"

"ஒரு பேச்சுக்கு சொன்னா?"

"பேச்சுக்கெல்லாம் சொல்லாதே... இந்துவும் முஸ்லீமும்கூட ஒரு கட்டத்துல ஒண்ணா வாழ்ந்துட லாம். ஆனா ஏழை பணக்காரனால முடியவே முடியாது. ஞாபகம் வெச்சுக்கோ! போய் வேலையைப் பாரு அவங்க வரும் போது சொதப்பிடாதே..."

வள்ளி சோர்வாக தலை ஆட்டுகிறாள்.



இப்பொழுதெல்லாம் வேணுவை தொழிலாளர்கள் பார்க்கும் பார்வையே மாறிப் போய்விட்டது. அவனுக்கே அது என்னவோ போல் இருக்கிறது சக அதிகாரிகள் கூட அவனை கூப்பிட்டு வேலை சொல்லத் தயங்குகிறார்கள். அங்கங்கே நின்று 'குசுகுசு' என்று காதை கடித்துக் கொள்கிறார்கள்.

ரகசியமாக வைக்க மயில் வாகனம் ஆசைப்பட்ட விஷயம் முடியாமல் போய் எந்திரம் எந்திரமாக சுற்றி வருகிறது.

'வேணு எதை வைத்து அனுவை அசத்தியிருப்பான்?' என்றெல்லாம் ஆராய்ச்சிகள்.

சினிமாவில் ரஜினி கமலிடம் மட்டும் பார்த்த விஷயத்தை இன்று நிதர்சனமாக நேரில் பார்க்கிறார்கள் அவர்கள்.

மெயிண்டனன்ஸ் மேனேஜர் மாதவராவ் ஒரு சரியான அராத்துப் பேர்வழி. குட்மார்னிங் பிரியர். எந்த ஒரு லேபரும் அவரைப் பார்த்து விட்டு விஷ் செய்யாமல்ல போனால் ஹார்ட் அட்டாக் வருமளவு. கொதித்துப் போவார்! அவரே வேணுவைப் பார்த்து முதலில் குட்மார்னிங் சொல்கிறார்.

வேணுவும் தீர்மானிக்கிறான்.

முதல்நாள் தாஜில் அனுவுடன் பேசியது நினைவில் நெளிகிறது.

எப்பொழுது மயில்வாகனம் அளித்திருப்பது நிர்பந்த சம்பந்தம் என்பது தெரிந்து விட்டதோ இனி இங்கிருந்தால் அது மரியாதையாகாது. எல்லாவற்றையும் உத்தேசித்து வீட்டிலேயே எழுதி எடுத்து வந்திருந்த ராஜினாமா கடிதம் பாக்கெட்டில் அமர்ந்திருக்கிறது.



அத்துடன் நேராக மயில் வாகனத்தைச் சந்திக்க அந்த அறைக்கு இரண்டாம் முறையாக செல்கிறான். அவனைப் பார்த்த மறுநொடி பி.ஏ. கதவைத் திறந்துவிட "வெல்கம் வேணு...." என்று மயில்வாகனமும் வரவேற்க, அவர் எதிரில் எதுவும் பேசாமல் ராஜினாமா கடிதத்தை எடுத்து நீட்டுகிறான்.

"என்ன இது?"

"ராஜினாமா சார்..."

"ராஜினாமாவா?"

"ஆமாம்."

மயில்வாகனம், வேணுவின் இந்த அதிரடியை அணுவளவும் எதிர்பார்த்திருக்கவில்லை. என்பது அவரது கன்னத்து தசை நார் துடிப்பில், கைகள் தடுமாறுவதில் ஊர்ஜிதமாகிறது.

"மன்னிக்கணும் சார்... எங்க காதலை நீங்க மனப்பூர்வமா ஒத்துக்கலை. எல்லாத்தையும் அனு சொன்னா விஷ பாட்டிலைக் காட்டி அவ உங்களை சம்மதிக்க வெச்சது எனக்கு முதல்ல தெரியாது. அப்படி நடந்துக்கிட்டதுல எனக்கு உடன்பாடு இல்லை.

நீங்க நம்பமாட்டீங்க. இருந்தாலும் சொல்றேன். உங்க மகள் தான் முதல்ல என்னைப் பார்த்து 'ஐ லவ் யூ' சொன்னா, நான் அதைக் கேட்டு விழுந்துவிழுந்து சிரிச்சேன். 'போய் வேலையைப் பாருங்க மேடம்'னு சொல்லி கோபிக்கவும் செய்தேன்.

ஆனா அவ, தன் காதல் நிஜமானது பூரணமான துங்கறதை எனக்கு பல விதங்கள்ல நிருபிச்சதாலையும் நான் நேசிக்கலைன்னா நிச்சயம் அனு உயிரை விட்டுடுவான்னு தெரிஞ்சதாலையும் அனுவை பார்த்து நானும் 'ஐ லவ் யூ' சொன்னேன்.

அதே அஸ்திரத்தை உங்க மேலையும் போட்டு தான் உங்களை சம்மதிக்க வெச்சிருக்கா... அவ செய்தது அவளுக்கு சரியா இருக்கலாம்... ஆனா எனக்கு சரி யில்லை!

அதே சமயம் ஒரு சாதாரண ஃபிட்டர் மெக்கானிக் கான என்னை உங்களாலையும் மனப்பூர்வமா ஒத்துக்க முடியாது. இதுக்கெல்லாம் தீர்வுகாணத்தான் ராஜி னாமா செய்திருக்கேன்..."

- ஒரு நீளப் பேச்சில் மயில் வாகனத்தை சற்று கூர்மையாக பார்க்கச் செய்யமட்டும்தான் அவனால் முடிகிறது.

அவரின் பார்வையும் என்னவோ செய்ய 'இன்னும் பத்து நாள் வேலைக்கு வருவேன் சார். வர்ற இருபதாம் தேதியோட இந்த கம்பெனியில் என்னோட எட்டு வருஷ சர்வீஸ் முடிஞ்சு ஒன்பதாம் வருஷம் ஆரம்பமாகும். அதுக்காகதான் அது எப்படி இருந்தாலும் எட்டு வருஷம் என் வாழ்க்கை சந்தோஷமா நடக்க நம்ம நிருவனம் ஒரு பெரிய காரணமா இருந்துருக்கு... அதுக்கு என்னோட நன்றி."

- சொல்லிவிட்டு விறுவிறுவென்று நடக்கிறான். அறைக்கதவைத் திறந்து வெளியே கால் வைக்க முனையும் போது,

"நில்லுங்க வேணு..." மயில்வாகனம் தடுக்கிறார்.



திரும்பிப் பார்க்கிறான்.

"கொஞ்சம் உள்ள வந்து உக்கார்றீங்களா?"

"வேண்டாம் சார்... என முடிவை மாத்தவோ அல்லது அதைக் குற்றம் சொல்லவோ நீங்க முயற் சிக்கலாம். வேண்டாம் அது வேஸ்ட்! நான் ரொம்பத் தெளிவானவன். ஒரு வார்த்தை மட்டும் சொல்லிக் கறேன். நானும் கூடிய சீக்கிரம் உங்களைப் போல வருவேன்... அது மட்டும் நிச்சயம். அப்பதான் அனு கழுத்துலையும் தாலி கட்டுவேன். அதுவரை உங்களுக்கு ஸ்டேட்டஸ் பயமோ கவலையோ இருக்காதுன்னு நம்புங்க... வரேன்."

- கதவு மூடிக்கொள்கிறது.

அவனது உறுதியான தீர்மானத்தைப் போலவே... மயில்வாகனம் கைகளை குத்திப் பிசைந்து கொண்டு முதல்காரியமாக தர்மராஜுக்குத்தான் போன் போடுகிறார்.

"என்ன மயில்வாகனம்?"

"மாப்ள... நாம போட்ட பிளான்படி நடக்காது போலத் தெரியுது அந்த வேணுப்பய திடீர்னு வேலைய ராஜினாமா செய்துட்டான். சொந்தமா தொழில் செஞ்சு என்னைப்போல வருவானாம். அப்பதான் அனு கழுத்துல தாலியும் கட்டுவானாம்."

"அப்ப அதுவரை இரண்டுபேரும் பீச், பார்க்குன்னு டூயட் மட்டும் பாடுவாங்களாமா?"

"என்ன மாப்ள... நான் பதறிப்போய் பேசிக்கிட் டிருக்கேன். நீங்க கிண்டல் பண்றீங்களே?"

"பண்ணாம... அவன்தான் காதல் மப்புல பெரிய ஆளா வருவேன். அப்படி இப்படின்னா அதைக் கேட்டு சிரிக்கறத விட்டுட்டு பதறினா என்ன அர்த்தம்?"

"ஐயோ... அவன் நல்லா தொழில் தெரிஞ்சவன். நிஜமாலுமே திடமான கேரக்டர்! இந்த காதல்ல கூட ஆரம்பத்துல இதெல்லாம் ஒத்துவராதுன்னு பேசியிருக்கான், நம்ம பொண்ணுதான் சொதப்பி சுண்ணாம்பு எடுத்தவ!"

"சரி... சரி...! எல்லாம் நான் பாத்துக்கறேன், ஆமா... அவன் ராஜினாமா கையெழுத்து போட்டாச்சா!"

"இல்ல..."

"போட வேண்டாம், அதுக்கு இடமில்லாதபடி அவனே வந்து ராஜினாமாவ வாபஸ் வாங்குவான். அதுக்கு நான் பொறுப்பு! நிம்மதியா ஆகவேண்டியத பாரு..."

"மாப்ள... எப்படி மாப்ள?"

"போகப் போகப் பாரு மயில்வாகனம்... எனக்கு இப்ப ஒரு முக்கியமான வேலை இருக்கு. அதை முதல்ல முடிச்சு ஒரு லைனை க்ளியர் பண்ணனும்... அப்பதான் உன் விஷயம் பக்கம் திரும்ப முடியும். வெச்சுடட்டுமா?"

"என்ன மாப்ள... லைன் கிளியர் அது இதுன்னு என்னென்னமோ சொல்றீங்க... உங்களுக்கு சிக்கலா?"

- பதிலின்றி மறுமுனையில் ரிசீவர் வைக்கப்படும் சப்தம் மட்டும் கேட்கிறது.



**வீ**ட்டு வாசலில் கார் வந்து தேங்கி நிற்க, மாணிக்கம் அக்கம்பக்கமுடன் வந்து பெரிய கும்பிடு போட்டு காரிலிருந்து இறங்கும் தர்மராஜையும் அவர் மனைவி ராஜேஸ்வரியையும் வரவேற்கிறார்.

உள்ளே பட்டுச்சேலையை உயர்த்திப் பிடித்தபடி நுழையும் ராஜேஸ்வரி எதிரில்நிற்கும் வள்ளியைப் பார்த்துத் திடுக்கிட, வள்ளியும் திடுக்கிட பேசி வைத்த நாடகத்தின் முதல் காட்சி எதிர் பார்ப்பைவிட கன ஜோராக அரங்கேறுகிறது!



ராஜேஸ்வரி வள்ளியைப் பார்த்து "வள்ளி" என்று உருக, வள்ளியம்மாளும் "அக்கா நீயா?" என்று கேட்க ஓசையே இல்லாமல், ஒரு இடி அங்கே இறங்கத் தொடங்குகிறது.

# 8

***"எனக்காக நீ மூச்சுவிட***
***உனக்காக நான் சாப்பிட***
***ஓ... நாம் காதலிக்கிறோமா?"***

**ரா**ஜேஸ்வரியைப் பார்த்து வள்ளி "அக்கா" என்று கூப்பிட, ராஜேஸ்வரியும், "வள்ளி நீயா?" - என்று கிட்டே நெருங்கிவர, இருவரிடமும் ஊடுருவும் பார்வை.

இப்படி எல்லாம் நடித்துப் பழக்கமில்லாததால், வள்ளி மட்டும் சற்று திணறி அலங்க மலங்க பார்க்க, மாணிக்கம் அருகிலேயே டென்ஷனோடு நின்று கொண்டு அதை ஊக்குவிப்பதுபோல தன் கன்னத்து தசையில் ஒரு சுருக்கத்தை உருவாக்க,

"என்ன ராஜேஸ்வரி, இவங்கள தெரியுமா உனக்கு?"

- தர்மராஜ் நடிப்பைப் பிடித்து நீவி விடத் தொடங்குகிறார்.

"தெரியுமாவா? என் தங்கச்சிங்க... கூடப் பொறந்த தங்கச்சிங்க."

"கூடப் பொறந்த தங்கச்சியா?"

"ஐயோ... இது என்ன, நிலைகால்கிட்டேயே நின்னு பேசிகிட்டு... உள்ற போய் பேசுவோம் வாங்க..."

- மாணிக்கம் தர்மராஜ்-க்கு துணை சேர்த்து, எல்லோரையும் உள்ளே அழைக்கிறார்.

விரிக்கப்பட்ட பவானி ஜமக்காளம் - வைக்கப் பட்டிருக்கும் வெற்றிலை பாக்கு, பழத்தட்டு பொறுக்கி எடுத்த மாதிரி சில மாணிக்கத்தின் நண்பர்கள், அவ்வளவாக தங்கள் குடும்பம பற்றித் தெரியாத சில அக்கம் பக்கத்துப் பெண்கள்.

- எல்லோருமே ராஜேஸ்வரி - வள்ளியின் உறவைக் கேட்டு முகம் முழுக்க ஒரு பெரிய கேள்வியோடு நிற்க, ஜோதி முகத்தில் நன்றாகவே விரிசல் தெரிகின்றது.

"அப்பா... என்னப்பா இது... இவங்க நம்ம அம்மா வோட தங்கச்சியா."

"அப்படிதானேப்பா சொல்றாங்க. எங்க கல்யாணத்துக்கு முந்தியே உங்கம்மா தங்கச்சி, அதாவது உன் சித்தி (சித்தியின்போது ஒரு அட்சர சுத்தமான உச்சரிப்பும், அழுத்தமும்) ஓடிப் போயிட்டாங்கன்னு தெரியும். உங்கம்மா சொல்லியிருக்கா... அதுக்குப் பிறகு அவங்கள பத்தி... பேச்சு மூச்சில்லை. உன் தாத்தாவும் அதாவது என் மாமனாரும் 'அவ செத்துப் போயிட்டா. தலை முழுகிட்டேன்'னு சொல்லிட்டார்... அதான்! ஆனா இப்போ இப்படி ஒரு சூழ்நிலை..." இது தர்மராஜ்.

"என்னத்தச் சொல்ல... சார்... நீங்க என் சகலையா? இவ்வளவு வருஷமா எனக்கே கூட தெரியலீங்களே... செத்துட்டதா எங்களை நினைச்சு தலைமுழுகிட்ட மாமனார் மாமியார் நான் கூட செத்துட்டதாவே நினைச்சுட்டேன். ஒட்டுல்ல... உறவுல்ல!"



- இது மாணிக்கம் - ஒரு சூப்பர் பெருமூச்சுடன்...

"அடடே... அக்கா தங்கச்சிங்க பிரிஞ்சிட்டாலும் அவங்க மக்க மூலமா ஒண்ணு சேர்ந்துட்டாங்க பாத் தீங்களா? என்ன... அண்ணன் தங்கச்சின்னு தெரியாம காதலிச்சிட்டாங்க... நல்லவேளை... இப்பவாச்சும் தெரிய வந்திச்சே...! யார் செஞ்ச புண்யமோ கல்யாணமாகலை... தப்பிச்சுச்சு உறவு முறை..." - மாணிக்கம் சொல்லிக் கொடுத்ததை கிளிப்பிள்ளை போல சொல்லிவிட்டு மாணிக்கத்தையும் கித்தாப்பாக பார்க்கிறார் ஒருவர்.

ஜோதி பொறி கலங்கினதுபோல் ஆகி, அறைக்குள் இருந்து கொண்டு கண் கலங்க தன்னைப் பார்க்கும் வசந்தாவைப் பார்க்க, அவள் ஜன்னல் கம்பியை வலிப்பு வந்தவர்களைப் போல இறுக்கப் பற்றியபடி துடிக்க...

"அப்பாடா..." மாணிக்கம் பெருமூச்சு விடுகிறார்.

முடிந்தது ஒரு காதல் கதை!



அடுத்த கதைக்கான ஆப்பு வைக்கும் வேலையும் அசுரவேகத்தில் நடந்து கொண்டிருந்தது.

ஒரு மெஷின் அருகே ஸ்பேனர் பாக்கும் கையுமாக உட்கார்ந்து கொண்டு ஒரு ஆயில் ஒழுக்கை சரி செய்யப் பார்த்தபடி இருக்கும் வேணு அருகில் ஒருவர் வந்து நிற்கிறார். நிமிர்ந்து பார்க்கிறான். யூனியன் தலைவர் ஞானசிகாமணி.

"வணக்கம் சார்..." - பெரிய கும்பிடோடு எழுந்து நிற்கிறான் வேணு.

"என்ன வேணு... எப்படி இருக்கே?"

"நல்லா இருக்கேன் சார். எங்க சார் இவ்வளவு தூரம்?"

"உன்னை பாக்கத்தான்... கொஞ்சம் யூனியன் ஆபீஸ் வரை வர்றியா?"

"என்ன விஷயம் சார்...?"

"வாயேன் சொல்றேன்..."

"ஒரு நிமிஷம் சார்..." அடுத்த நொடி கை துடைத்துக் கொண்டு முன் நடக்கத் தொடங்கிவிட்ட அவரை பின் தொடர்கிறான். எல்லோரும் பார்க்கிறார்கள். காதுக்குக் காது என்று தாவி கிசுகிசுக்கத் தொடங்குகிறார்கள்.

●●●

**யூ**னியன் ஆபிசின் சுவற்றில் லெனின், மார்க்ஸ் என்கிற சோவியத் முகங்கள். போகட்டும் என்று சின்ன சைசில் காந்தி, நேரு, இந்திராகாந்தி படங்களும்...!

லோக்கல் தலைவர்கள் படங்கள் ஒன்றுகூட இல்லை. செம்பழுப்பாய் மரமேஜைகள்... ஐம்பது மாடல் நாற்காலிகள். சுவர் கொள்ளாதபடி ஒட்டப்பட்டிருக்கும் அறிவிப்புக் காகிதங்கள்!

"உக்காரு வேணு..."

"இருக்கட்டும் சார்... என்ன விஷயம்?"

"உக்காருப்பா சொல்றேன்."

அவன் உட்கார, அவர் அவன் எதிரில் ஒரு மெடிக்கல் ரிப்போர்ட்டை தூக்கிப் போடுகிறார்.

"என்ன சார் இது?"

"எல்லாம் என் மெடிக்கல் ரிப்போர்ட்தான். 'அபிலோ பைலேரியா' கேள்விப்பட்டிருக்கியா?"

"என்ன பேர் சார் இது...?"



"அது பேர் இல்ல வேணு... எனக்கு வந்துருக்கற விசித்ரமான வியாதி பேர்."

"வியாதியா?"

"அதிராதே... இது அதுக்கான எவிடென்ஸ்."

"என்கிட்ட எதுக்கு இதை...?"

"காரணமாதான். என்னால இனி இந்த பொறுப்புல காலம் தள்ள முடியாது அடிக்கடி தலையை சுத்திக்கிட்டு வருது. பெரிசா மூச்சிறைக்குது... ஆபரேஷன் மருந்து ஊசின்னு நான் சீரழிய வேண்டியிருக்கு... ஆகையால் பொறுப்பான ஒரு நபர் கிட்ட இதை ஒப்படைச்சுட்டுப் போகலாம்னுதான் உன்னைத் தேர்ந்தெடுத்தேன்..."

"என்னையா... சார் நான்..."

"தெரியும்... வேலைய ரிசைன் பண்ணப்போறே... இங்க இருக்கவே போறதில்ல... அப்புறம் எப்படின்னு தானே?"

"ஆமாம் சார்..."

"அந்த முடிவுக்குக் காரணமும் தெரியும் வேணு. நீ நிஜமாலுமே பயங்கர சுயமரியாதை உணர்வுள்ளவன். உன்னை பாராட்றேன்... உன்னை நான் தேர்ந்தெடுக்க காரணமும் கூட இந்த உன் முடிவுதான்! உன்னை கெஞ்சி கேட்டுக்கறேன்... தயவு செய்து தலைவர் பதவிய ஒத்துக்க தொழிலாளர்களும் நீதான் வரணும்னு ஒட்டு மொத்தமா விரும்பறாங்க. இந்த ராஜினாமா ஆசையை ஒரு ஆறு மாசத்துக்கு தள்ளிப் போடு. நான் சிகிச்சை முடிஞ்சு வந்து திரும்ப ஏத்துக்கறேன். உன்னை ராஜினாமா செய்ய வேண்டாம்னு சொல்லலை... ஒரு ஆறு மாசம் கூடுதலாக வேலை பாருன்னுதான் சொல்றேன். நம்ம யூனியனுக்காக நீ இதைக் கூட செய்யமாட்டியா?"

- திணறலின் ஊற்றாகி ஞானசிகாமணியைப் பார்த்து வெறிக்கும் வேணுவை தொடர்ந்து பேசி வலியுறுத்து கிறார் அவர்.

"இந்த சீட்டுல நான் இல்லேன்னா விளையாடிடு வாங்கன்னு பயமா இருக்கு. நாணயமா நம்பிக்கையா ஒருத்தர் வேணும். அதுக்குதான் நீ... யோசிக்காதே! நீ ஒத்துக்கிட்டா முதலாளியும் ஒண்ணும் சொல்லமாட்டார்..."

"சார்... அவர் என்னை மேனேஜராவே ஆக்கத் தயாரா இருக்கார். அவர் பிரச்சனை இல்லை... ஆனா ஓர்க்கர்ஸ்தான் தப்பா..."

"என்ன தப்பா....? முதலாளி மருமகனா வரப் போறவன் யூனியன் தலைவரா வந்தா ஜால்ராசப்தத் துக்கு பஞ்சமே இருக்காதுன்னு சொல்வாங்க சிலர். அதானே."

"நிச்சயமா..."

"நீ இப்படி மாத்தி யோசிச்சுப் பாரேன். இந்த ஆறு மாசத்துல வேலையவிட்டுப் போறதுக்கு முந்தி முதலாளியோட உனக்கு ஏற்பட்டு இருக்கற புது நெருக் கத்தை பயன்படுத்தி நிறைய சலுகைகள் வாங்கித் தரலாம்னு..."

"சார்... இதெல்லாம் பேச நல்லா இருக்கும். நடை முறைக்கு சரியா வராது.. இப்ப என் நோக்கமே வேற. என்ன தர்மசங்கடப்படுத்தாதீங்க..."

"தர்மசங்கடமா... நானா? ஒரு கம்யூனிச சிந்தனை உள்ள ஒருத்தன் முதலாளிகளுக்கு நெருக்கமா வர்றதுங் கறது அத்தி பூக்கற மாதிரியான ஒரு அபூர்வம் வேணு! உனக்கே தெரியும்... நமக்கு எவ்வளவு குறைகள் இருக்குன்னு... அதைப் பட்டியல் போட்டு பாதி சாதிச்



சாலும் அது பெரிய விஷயம்கறது உனக்குத் தெரியும் தானே?

எத்தனை தொழிலாளிங்க வாழ்த்துவாங்க யோசிச்சுப் பார்த்தியா? இதை விடவா உன் காதலும் சுயமரியாதையும் பெரிசு?"

- ஞானசிகாமணி மிக நைச்சியமாக ஏற்ற இறக்கங் களோடு பேச வேணு பேச்சற்றுப் போகிறான்.

'இனி கவலைப்பட வேண்டாம் வெளியேற மாட்டான் நம்பலாம்'

- ஞானசிகாமணி உள் நடுக்கத்தோடு வெற்றிக்குள் குதிக்கிறார். டிராயரில் அவருக்கு காத்திருக்கிறது தொகையிடப்படாத பிளாங்க் செக் ஒன்று!

●●●

**ரெஸ்ட்டாரண்ட்!**

ஸ்டீரியோவில் மைக்கேல் ஜாக்சன், மோசமான மஞ்சள் வெளிச்சம்... டேபிளில் சற்றே சோகமாக வேணு அனு...

'உம்முன்னு உக்காந்திருக்கவா வந்துருக்கோம்...?"- கீறிவிடுகிறாள் அனு.

"சாரி அனு... இனி எப்படி அடுத்த ஸ்டெப் எடுக் கறதுன்னுதான் தெரியல..."

"குழப்பமா உங்களுக்கா?"

"நானும் மனுஷன்தானே... என்ன மகானா? எப்படியோ ஆறு மாசம் ஃபேக்டரில இருந்தாகணும்ன்னு ஆயிடிச்சு... இப்பவே சிலர் என்னைப் பார்க்கற பார்வை வித்தியாசமா இருக்கு... புளியம்கொம்பை பிடிச்சிட்

டவன் சுக்ரதசை உள்ளவன், யோகக்காரன்'னு பல பேச்சு!

இதுக்கு நடுவுல உங்கப்பா 'இனி நீங்க மேனேஜர்... இங்கிலீஷ் படியுங்க, கம்ப்யூட்டர் கத்துக்குங்க'ன்னு எனக்கு முலாம் பூசப் பார்க்கிறார். நான் எந்தப் பக்கம் சாயட்டும்?"

"என்ன கேள்வி வேணு...? உங்க மனசு எதை ரொம்ப விரும்புது."

"என்ன கேள்வி அனு இது...? நான் கோடீஸ்வரனாவே ஆனாலும் ஸ்பேனர் பிடிச்சு ஒரு நட் போல்ட்டையாவது கழட்டி மாட்டினாதான் எனக்கு சந்தோஷம்! என்னோட முதல் ஆதாரம் அது..."

"அப்ப... யூனியன் லீடரா ஆறுமாசம் ஓட்டிடுங்க. அப்பா சொன்னதை மறந்துடுங்க..."

'உனக்கு அதுல வருத்தமில்லையே..."

"இதுல எனக்கு வருத்தப்பட என்ன இருக்கு... தலையாட்டியா இல்லாம தலைவனா இருக்கறதுதானே நிஜமாலுமே பெரிசு?"

"இல்ல அது... அதுல நிறைய அபாயங்களும் இருக்கு."

"என்ன...?"

"உங்கப்பா, மாப்ளையா வரப்போறவன்தானேன்னு என்கிட்ட அட்வான்டேஜ் எடுத்துக்கப் பார்ப்பார். நானோ என் சாமர்த்யத்தைக் காட்டி கோரிக்கைகளை நிறைவேத்திக்கத்தான் பார்ப்பேன். அவருக்கு வளைஞ்சு கொடுக்க மாட்டேன். இதெல்லாம் எதுல வேணாலும் போய் முடியலாம்..."



"ஃப்பூ இவ்வளவுதானா? கவலையே படாதீங்க. அப்பா இன்னும் பத்து நாள்ல அமெரிக்கா போறார். நான்தான் அப்புறமா எல்லாம்...! அவர் வர்ற வரை என் ராஜ்யம்தான்."

"நிஜமாவா?"

"நாளைக்கு நோட்டிஸ் போர்டைப் பாருங்க, தெரியும்."

"அனு... என்ன இது... ஏன் இதை வந்த உடனேயே சொல்லலை... எனக்கு இப்ப எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?"

"அவசரப்படாதீங்க... நம்ம விஷயங்கள் ரொம்ப சுலபமா நிறைவேறுவதை பார்த்தா எனக்கு கொஞ்சம் சந்தேகமாவும் இருக்கு..."

"எப்படி?"

"அப்பா இங்க என்னை தனியா விட்டுட்டு இப்ப அமெரிக்கா போக வேண்டிய அவசியமே இல்லை. திடீர்னு கிளம்பறாரு... உங்களையும் என்னையும் உள்ள விட்டுட்டு அவர் ஒதுங்கறார்னா, அதுல நிச்சயமா என்னவோ இருக்கு..."

- அனு புத்திசாலித்தனமாக சூது நரம்பைப் பிடிக்க வேணு சரிந்த நிலையில் இருந்து நிமிர்ந்து அமர, நான்கு சீட் தள்ளி செல்போனில் ஒருவன் அவர்களின் அந்த பேச்சை, அப்படியே மயில்வாகனத்துக்குச் சொல் ஆரம்பிக்கிறான்!

# 9

***'ஒரு உரசலில் மின்சாரம் உருவானால் அது காதல்! ஒரு முத்தத்தில் உறுப்பெல்லாம் தடம் புரண்டால் அது காதல்!'***

செய்தி மயில்வாகனத்தைத் துவைத்துப் பிசைகிறது. ஒரு அடி முன் எடுத்தால் மூன்று அடி பின் எடுத்து வைக்கும்படியாகவே இதுவரையிலும் நிகழ்வுகள்!

நேற்று வரை யூனியன் லீடர் ஞானசிகாமணியை விழுந்த மயிர்த் துண்டுக்குச் சமமாக நினைத்துக் கொண்டிருந்தார். இந்தக் காதல் அவரையும் ஒரு பொருட்டாக கருதி, அந்த ஆள் காலில் போய் விழச் செய்தது...

நேற்று வரை மச்சான் தர்மராஜிடமும் கித்தாப்பு காட்ட முடிந்தது. 'உன் தர்மாஸ் குரூப்பை விட என் அனு இண்டஸ்ட்ரீஸ் எல்லா வகையிலும் ஒசத்தியானது. உனது மார்க்கெட் மதிப்பு வெறும் பதினெட்டு இருபது கோடி ரூபாய்தான். எனது இன்வெஸ்ட்மென்ட்டே நூறு கோடிக்கு மேல்' என்கிற மமதையுடன் கணக்கில் இருந்தது. இன்று அந்த மமதையை ஓரம் கட்டிவிட்டு தர்மராஜிடமே ஆலோசனை கேட்க வேண்டிய நிலை.

நேற்று வரை ஷிப்ட் சூப்ரவைசர் சுந்தரம்கூட, அவரது நிழலுக்கே விழுந்து கும்பிட்டு மரியாதை செய்தவன்தான்! இன்று மயில்வாகனம் எதிரில் மார்பு நிமிர்த்துப் பேசுகிறான். அவருக்கே ஆலோசனை சொல்கிறான். அவனிடமெல்லாம் 'சுந்தரம் வெளிய வெச்சுப்பேசாதே...' என்று பணிவாய் வேண்டிக் கொள்ள வேண்டிய நிலை!



நினைத்தாலே கசக்கிறது. எல்லாவற்றிற்கும் காரணம் அந்தக் காதல். கடங்காரக் காதல். பெத்தடின், அபின், கஞ்சாவை எல்லாம் நல்லதாக்கிவிடுகிறது இந்த காதல்!

இதில் தன் மகள் விழுந்ததால்தானே இத்தனை சிக்கல்... இத்தனை தாழ்ச்சிகள்... இத்தனை குழப்பங்கள்!

எதிரே முக்கிய முடிவு எடுக்கப்படவேண்டிய ஃபைல்களின் தேக்கம். எல்லாம் சின்னதாகிவிட்டது. வேணு பல்லிடுக்குத் தேங்காயாக நிரடுகிறான். கணுக்காலில் குத்திய முள்ளாக வலி ஊட்டுகிறான்.

மூளைக்கட்டி போல மூச்சுத்திணற விடுகிறான். ஒரு ஃபிட்டர் ஒரு தொழிலதிபரின் மொத்த ஃபிட்டிங்கையுமே கழட்டிப் போட்டுவிட்டான் காதல் என்னும் ஆயுதத்தால்...!

அடித்து தூக்கிப் போடலாம் என்று பார்த்தால் அதுவும் அவனுக்குத் தெரிந்து விடுகிறது.

இப்பொழுது என்னதான் செய்ய...?

குழப்பம்... குழப்பம்...

ஏ.சி. அறையே ஃபர்னஸ் போல வேகிறது மயில்வாகனத்துக்கு... நடுவில் இண்டர்காமின் சிணுங்கல்.

"யெஸ்..."

"சார்; தர்மராஜ் சார் வந்துருக்கார்..."

"முதல்ல உள்ள விடுங்க..."

- அடுத்த ஆறாவது நொடியில் கதவைத் திறந்து கொண்டு தர்மராஜ் கோட்டும் சூட்டுமாய், அதில் ஒரு வாடாத ரோஜாவுமாய் பிரசன்னமாகிறார்...

"வாங்க மாப்பிள்ளை..."

# 9

***'ஒரு உரசலில் மின்சாரம் உருவானால் அது காதல்! ஒரு முத்தத்தில் உறுப்பெல்லாம் தடம் புரண்டால் அது காதல்!'***

**செய்தி** மயில்வாகனத்தைத் துவைத்துப் பிசைகிறது. ஒரு அடி முன் எடுத்தால் மூன்று அடி பின் எடுத்து வைக்கும்படியாகவே இதுவரையிலும் நிகழ்வுகள்!

நேற்று வரை யூனியன் லீடர் ஞானசிகாமணியை விழுந்த மயிர்த் துண்டுக்குச் சமமாக நினைத்துக் கொண்டிருந்தார். இந்தக் காதல் அவரையும் ஒரு பொருட்டாக கருதி, அந்த ஆள் காலில் போய் விழச் செய்தது...

நேற்று வரை மச்சான் தர்மராஜிடமும் கித்தாப்பு காட்ட முடிந்தது. 'உன் தர்மாஸ் குருப்பை விட என் அனு இண்டஸ்ட்ரீஸ் எல்லா வகையிலும் ஒசத்தியானது. உனது மார்க்கெட் மதிப்பு வெறும் பதினெட்டு இருபது கோடி ரூபாய்தான். எனது இன்வெஸ்ட்மென்ட்டே நூறு கோடிக்கு மேல்' என்கிற மமதையுடன் கணக்கில் இருந்தது. இன்று அந்த மமதையை ஓரம் கட்டிவிட்டு தர்மராஜிடமே ஆலோசனை கேட்க வேண்டிய நிலை.

நேற்று வரை ஷிப்ட் சூப்ரவைசர் சுந்தரம்கூட, அவரது நிழலுக்கே விழுந்து கும்பிட்டு மரியாதை செய்தவன்தான்! இன்று மயில்வாகனம் எதிரில் மார்பு நிமிர்த்துப் பேசுகிறான். அவருக்கே ஆலோசனை சொல்கிறான். அவனிடமெல்லாம் 'சுந்தரம் வெளிய வெச்சுப்பேசாதே...' என்று பணிவாய் வேண்டிக்கொள்ள வேண்டிய நிலை!



நினைத்தாலே கசக்கிறது. எல்லாவற்றிற்கும் காரணம் அந்தக் காதல். கடங்காரக் காதல். பெத்தடின், அபின், கஞ்சாவை எல்லாம் நல்லதாக்கிவிடுகிறது இந்த காதல்!

இதில் தன் மகள் விழுந்ததால்தானே இத்தனை சிக்கல்... இத்தனை தாழ்ச்சிகள்... இத்தனை குழப்பங்கள்!

எதிரே முக்கிய முடிவு எடுக்கப்படவேண்டிய ஃபைல்களின் தேக்கம். எல்லாம் சின்னதாகிவிட்டது. வேணு பல்லிடுக்குத் தேங்காயாக நிரடுகிறான். கணுக்காலில் குத்திய முள்ளாக வலி ஊட்டுகிறான்.

மூளைக்கட்டி போல மூச்சுத்திணற விடுகிறான். ஒரு ஃபிட்டர் ஒரு தொழிலதிபரின் மொத்த ஃபிட்டிங்கையுமே கழட்டிப் போட்டுவிட்டான் காதல் என்னும் ஆயுதத்தால்...!

அடித்து தூக்கிப் போடலாம் என்று பார்த்தால் அதுவும் அவனுக்குத் தெரிந்து விடுகிறது.

இப்பொழுது என்னதான் செய்ய...?

குழப்பம்... குழப்பம்...

ஏ. சி. அறையே ஃபர்னஸ் போல வேகிறது மயில் வாகனத்துக்கு... நடுவில் இண்டர்காமின் சிணுங்கல்.

"யெஸ்..."

"சார்; தர்மராஜ் சார் வந்துருக்கார்..."

"முதல்ல உள்ள விடுங்க..."

- அடுத்த ஆறாவது நொடியில் கதவைத் திறந்து கொண்டு தர்மராஜ் கோட்டும் சூட்டுமாய், அதில் ஒரு வாடாத ரோஜாவுமாய் பிரசன்னமாகிறார்...

"வாங்க மாப்பிள்ளை..."

"ஆமா... என்ன ஒரே டல்லா இருக்கே மயில் வாகனம்?"

"என்னத்த சொல்ல... எல்லாம் அனு சம்பந்தமா தான்..."

"அந்த லவ்ஸ் விவகாரமா?"

"ஆமாம்.. போன மாசத்துக்கு இந்த மாசம் டர்ன் ஓவர் அஞ்சு கோடி பவுன். அது பெரிசா தெரியல. அடுத்த மாசம் சம்பாதிச்சுக்கலாம்னு தோணுது. ஆனா இவங்க விவகாரம் பெரிய தொல்லையா இருக்கு...!"

"அதான் அந்த பையனை ரிசைன் பண்ணிவிடாம பண்ணி உள்ளே உக்காத்தி வெச்சாச்சே..."

"வெச்சாச்சு... ஆனா இதுல ஏதோ சதி இருக்கு... ஜாக்கிரதையா இருக்கணும்'னு விவரமா சிந்திக்கறான் அவன். அதையும் அனுவே உருவாக்கி விட்றா.

நான் அனுவை உக்காத்தி வெச்சுட்டு அமெரிக்கா போக நினைச்சதெல்லாம் விவகாரத்த உருவாக்கத் தான்னு தெளிவா புரிஞ்சுகிட்டு இருக்காங்க ரெண்டு பேரும். அதான் எப்படி சமாளிக்கறதுன்னு தெரியல..."

- மயில்வாகனம் தாடையை வருடி விசாரப்படு வதை ரசிக்கிறார் தர்மராஜ்.

'நல்லவேளை... இப்படி ஒரு சிக்கல் ஜோதி - வசந்தா விவகாரத்தில் வரவில்லை. ஒரே ஸ்ட்ரோக்கில் இரண்டு பேரையும் நடைபிணம் ஆக்கி தப்பித்தாயிற்று.

- தனது வெற்றியை உத்தேசிக்க கர்வம் அவர் முகத்தில் உணரும்படியாக பரவுகிறது, கூடவே பயமும்... அவர்களும் இந்த ஜோடியை போல எல்லாம் சதி என்று தெரிந்துகொண்டு சுதாரித்துக் கொண்டு விட்டால்...!"



"என்ன மாப்ள... நான் கிடந்து தவிக்கிறேன்.. ரசிக்கி றீங்களே..."

- பேப்பர்வெயிட்டை உருட்டிக் கொண்டு மயில் வாகனம் பொரும, தர்மராஜ் சுதாரிக்கிறார்.

"அட இல்ல மயிலு... மேற்கொண்டு என்ன பண்ண லாம்னு யோசிச்சேன். இந்த காலத்து பசங்கதான் எல்லாத்தையும் தூக்கிச் சாப்பிடறவங்களாச்சே...?"

"பாராட்டு அப்புறம் பேசாம அடியாள் பட்டா ளத்து கிட்ட விவகாரத்தை விட்றவா. ஒரேயடியா போட்டுத் தள்ளி விடுவாங்க. இவளும் நாலு நாள் அழுவா. அப்புறம் எல்லாம் சரியாயிடாது?"

"கிழியும் பதிலுக்கு உன் பொண்ணும் தற்கொலை பண்ணிக்க மாட்டாங்கறது என்ன நிச்சயம். அப்படி சாக முடிவெடுத்தவ அந்த சாவுக்குக் காரணம் நீதான்னு எழுதி போலீசுக்கு அனுப்பிட்டா உன்நிலை இன்னும்ல மோசம்?"

...தர்மராஜ் கேள்விகள், இடிபோல மயில்வாகனத் துக்குள் இறங்குகின்றன.

"இப்படி கேட்டு மேலும் சிக்கல் உண்டாக்கு வதற்குத் தான் நீ வந்தாயா?"

என்பது போல பார்க்கிறார்.

"இப்ப உன் பிரச்சினை என்ன...? கொஞ்சம் தெளிவா சொல்..."

"ஒண்ணுமில்ல... நான் அமெரிக்கா போகப் போறது செட்டப். இவங்களை சிக்க வைக்கத்தான்னு தெளிவா புரிஞ்சுக்கிட்டாங்க. ஆகையால் அந்த பையனும் யூனியன் சார்பா பல கோரிக்கைகளை இவகிட்ட வெச்சு

சாதிக்கப் போறான். இவளும் எல்லாத்தையும் ஓ.கே. பண்ணி தொழிலாளிங்ககிட்ட நல்ல பேர் எடுத்துடுவா.

பொருளாதார ரீதியா எனக்குதான் உதை. கூடவே இமேஜும் காயப்போகுது. அவங்க காதல் உறுதியாகப் போகுது. நடுவுல என்னதான் நம்ம ஆள் ஒருத்தன் ட்ராமா போட்டாலும் பிரயோஜனம் இல்லை. இரண்டு பேரும் பயங்கர விழிப்போட இருக்கறதால அந்த ட்ராமால நாம நினைச்சமாதிரி இரண்டுபேரும் சண்டை போட்டுக்க வாய்ப்பே இல்லை."

"இவ்வளவுதானே?"

"இவ்வளவுதானேவா? இது போதாதா மாப்ளை..."

"அட சொல்றத கேளுய்யா. நீ திட்ட போட்டபடி அமெரிக்கா கிளம்பிப் போ. நீ அமெரிக்கா போறத அனு சந்தேகப்பட்றான்னு சொன்னேல்ல. அது அப்படியே இருக்கட்டும்.

அந்த சந்தேகத்தை எப்படி மாத்தி காய் நகத் துறங்கறது என் வேலை. நீ கவலைப்படாதே...!"

"எப்படி...?"

"இப்பவே சொன்னா சுவாரஸ்யம் குறைஞ்சிடும். ஆனா ஒண்ணு... இரு உறுதி வேணு - அனு ரெண்டு பேரும் இந்த ஜென்மத்துல நிச்சயமா புருஷன் பொண் டாட்டி ஆகிட முடியாது. நீதைரியமா கிளம்பிப் போ..."

- தர்மராஜ் தைரியத்தை டன் கணக்கில் தருகிறார். எந்தக் காய் எப்படி நகருமோ?



அந்தக் கீழ் மட்டத் தெருவில் நாய், பன்றி, கோழி களை மீறிக் கொண்டு திரும்பவும் பிரவேசித்தபடி இருக்கிறது தர்மராஜ் வீட்டு கார்... உள்ளே ராஜேஸ்வரி.



அவளது சீட்டை ஒட்டி, ஏகமாய் புதிய துணி மணிகள்... ஸ்வீட் பாக்கெட்டுகள்...!

- வசந்தா வீட்டு முன் கச்சிதமாக நிற்கிறது.

உள்ளிருந்து பார்த்து ஓடி வருகிறாள் வள்ளி...

"வாக்கா..."

"ஒரு தட்டு கொண்டுகிட்டு வா வள்ளி..."

"எதுக்குக்கா... போன தடவை வந்தப்ப உனக்குன்னு எதுவுமே வாங்கிட்டு வரலை. அதான்... நீ போய் தட்ட கொண்டு வா..."

"ஐய்யோ... எதுக்குக்கா..."

"அட கொண்டுவான்னா..."

- ராஜேஸ்வரி அதட்ட, வள்ளி தட்டு கொண்டுவர, புதிய துணிகள், ஸ்வீட்டுகள்... கூடவே பத்து பவுனுக்குக் குறையில்லாத நெக்லஸ்... என்று எல்லாம் கைமாற, அதைப் பார்க்கும் மாணிக்கம் சற்று திணறி,

"ஐய்யோ, என்ன இதெல்லாம்... எதுக்கு இதெல் லாம்?" என்று வழிய, தர்பாராக உள்ளே நுழைகிறாள் ராஜேஸ்வரி.

வீதியே வேடிக்கை பார்க்கிறது.

ஓவர் த நைட்டில் வள்ளி வீதியில் வி.ஐ.பி. ஆகி விட்டாள். வசந்தாவின் காதலும் முறிந்து அது சகோதர பந்தம் ஆகிவிட்ட கதைதான் இப்பொழுதுவீதியில் ஒலிக்கும் புதிய ஒலிச்சித்திரம்!

இதோ அதன் தொடர்ச்சி...

"உக்காருக்கா முதல்ல..."

"இருக்கட்டும், ஆமா எங்க வசந்தா..."

"உள்ள இருக்கா..."

"கூப்டு. அவருக்கு பொண்ணு வேணும் பொண்ணு வேணும்னு அவ்வளவு ஆசை. ஆனா பொறந்த ஒண்ணும் பையனா போயிடுச்சு. இப்ப வசந்தா இருக்கறது தெரியவும், அவருக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா... வசந்தா.. வசந்தா..."

- குரல் உள்ளோடுகிறது. திரேகம் எழுந்து சில அடி நடந்து எட்டிப்பார்த்து தேடுகிறது.

வள்ளி உள்ளே இருந்து வசந்தாவை வலுக்கட்டாயமாக இழுத்து வருகிறாள். அவளைப் பார்க்கவும் வயிற்றைப் பிசைகிறது. அப்படி ஒரு வாழ்வைத் தொலைத்த சோகம் அவள் விழிகளில்...

"அம்மாடி... என்ன இது? ஏன் இப்படி இருக்கே?"

"நாங்களும் எவ்வளவோ சொல்லிட்டோம். வசந்தாவால மனசால நிமிரவே முடியலை. அண்ணனைப் போய் காதலிச்சுட்டேனேன்னு நினைச்சு நினைச்சு உருகுறா..."

மாணிக்கம், அவள் அப்படி நினைக்கிறாளோ இல்லையோ, நினைப்பதாக ஊர்ஜிதப்படுத்தி பேசுகிறார்.

வசந்தாவின் பார்வை சடாரென்று அவர் பக்கம் திரும்புகிறது. கண்ணாலேயே ஒரு கடி!

"அங்க ஜோதியும் அப்படித்தான்... சாப்பிட மாட்டேங்கிறான், தூங்கமாட்டேங்கறான். ஒரே புலம்பல்... அப்புறம் நான்தான் சமாதானம் சொன்னேன். எவ்வளவோ காதல்ல, பிரிஞ்சு போறவங்க திரும்ப பாத்துக்கறதேயில்லை, ஆனா உங்க விஷயத்துல ஆண்டவன் அப்படிச் செய்யாம கருணை செய்திருக்கான்'னேன்.



காதல்ங்கறதும் அன்புங்கறதும் ஒண்ணுதானே? அதுக்கு புருஷன் பொண்டாட்டிகிட்ட ஒரு பேர் அண்ணன் தங்கச்சிக்கிட்ட வேற பேர்... மொத்தத்துல எல்லாம் அன்புதானே?"

- ராஜேஸ்வரி எதற்கு இத்தனை விளக்கம் தருகிறாள் என்பது தெரியாதபடி, வள்ளி அவளையே வெறித்துக் கொண்டிருக்க, ராஜேஸ்வரி கச்சிதமாக விஷயத்துக்கு வருகிறாள்.

எப்படியோ நடக்க இருந்த கல்யாணம் நின்னு போச்சு. அதை எப்படியாவது அந்தத் தேதியிலயே நடத்திக்கணும்னு அவர் விரும்பறார். ஜோதி கூட பரவால்ல... ஆம்பளப் பையன். தாங்கிக்க முடியும், வசந்தா அப்படி இல்லையே... ஆகையால..."

"ஆகையால...?"

"அந்த தேதியில அவளுக்கு வேற ஒரு நல்ல மாப்பிளையைப் பார்த்து முடிச்சாதான் நமக்கு நல்ல துன்னுட்டார் வள்ளி உன் அத்தான்..."

"வேற மாப்பிளையா...அவ்வளவு சீக்கிரமாவா?"

"ஏன் முடியாதா? எங்க ஆபீஸ்லையே எவ்வளவோ நல்ல வரனுங்க இருக்குங்க நீங்க சரின்னு சொன்னா போதும், முடிச்சிடலாம். கல்யாணச் செலவைப் பத்திக் கவலைப்படாதீங்க... எல்லாம் பெரியம்மா என்னோடது..."

- ராஜேஸ்வரி கிடுக்கிப்பிடி போட மாணிக்கம், அவளை நெருங்கி வந்து காதோடு காதாக,

"என்னங்க இது... எனக்கே தெரியாம புது ரூட்ல போறீங்களே!"

"ஆமாம். அறுத்துவிட்டா பத்தாது. அதை ஒரு முடிவுக்கும் கொண்டுகிட்டு வரணும்னு அவர்தான் துடிக்கறார்."

"அதுக்கு இப்ப என்ன அவசரம்?"

"நாளைக்கே நம்ம சதித் திட்டம் தெரிஞ்சு போயிட்டா... அதுக்குள்ள காரியத்த பண்ணிடறது தானே நல்லது..."

"இதுக்கு அந்த பொண்ணு சம்மதிக்கணுமே... அது ரெண்டு நாளா இருக்கறத பார்த்தா எனக்கே ஏண்டா இப்படி பொய்யச் சொல்லி பிரிச்சோம்னு ஒரே பாவமா இருக்குங்க..."

"கிழிஞ்சிச்சு. என் வீட்டுக்காரர் அவசரப்பட்றது வாஸ்தவம்தான். பேசாம சொல்றபடி கேளுங்க. நிஜமா லுமே நல்ல இடத்துல அவளை முடிச்சு வெப்போம்."

"இன்னொரு இடம் எதுக்கு பார்த்துகிட்டு...? என் அக்கா பையன் வேணு தயாரா இருக்கான். ஆனா இதுக்கு இப்ப வசந்தா சம்மதிப்பாளான்னுதான்..."

"போய் பத்திரிகை அடிக்க ஏற்பாடு செய்யுங்க... நான் ஜோதியை விட்டே சம்மதிக்க வைக்கறேன்.."

"முடியுமா?"

"முடிச்சுக் காட்றேன்."

ராஜேஸ்வரி சவால் விடுகிறாள்!

# 10

*"இனிப்பு கசப்பானது இறப்பு இனிப்பானது.*
*கடலுக்கு உப்பு நீர் கண்களில்*
*இருந்துபோனது.*
*ஓ... காதல் தோற்றுவிட்டதோ!'*



**ரா**ஜேஸ்வரி எந்த தைரியத்தில் அப்படிச் சொல்கிறாள் என்று தெரியவில்லை. அதைக் கேட்டுவிடுவது வள்ளிக்கு நல்லதாகப்படுகிறது.

"அக்கா... எப்படி ஜோதி வசந்தாவைப் பார்த்து சொல்வான். அவன் என்ன அவ்வளவு சீக்கிரம் மனசு மாறிட்டானா என்ன?' கேட்கிறாள்.

"மாறித்தானே ஆகணும் வள்ளி. இல்லேன்னா ஊர் சிரிக்காது...?"

- ராஜேஸ்வரியின் அழுத்தமான குரல், உள்ளே அழுதபடி படுத்திருக்கும் வசந்தா காது வரைக்கும் பாய்கிறது.

- வள்ளி கை பிசைகிறாள். தடுமாறுகிறாள்.

"என்ன வள்ளி... இப்படி அவளுக்கு மேல நீ திகையறே. நான் சொன்னதைச் செய். நல்ல காரியத்தை தள்ளிப் போடாம முடிச்சிடணும்."

"ஆமாம் வள்ளி.. உன் அக்கா சொல்றது வாஸ்தவம் தான். குறிச்சதேதியில கல்யாணம் நடந்தாதான் நமக்கும் நல்லது, நம்ம பெண்ணுக்கும் நல்லது..."

- அதை அழுத்திப் பிடித்து ஒத்து ஊதுகிறார் மாணிக்கம்.

வள்ளி கலக்கத்துடன் அவரைப் பார்க்கிறாள்.

திடீரென்று ஒரு பரபரப்பு.

படபடவென கதவைத் திறந்து கொண்டு சிலம்பைப் பிடித்துக் கொண்டு வரும் கண்ணகியாட்டம் எதிரில் வந்து நிற்கிறாள் வசந்தா. அழுது வீங்கியிருக்கும் முகம் கலைந்து கிடக்கும் தலைமுடி தணலான பார்வை!

"வசந்தா..."

"அப்பா எனக்கு இப்ப கல்யாணம் வேண்டாம்ப்பா. இவங்க சொல்றாங்கன்னு எதையாவது பண்ணி வைக்கா தீங்க. நான் ஏற்கனவே ரொம்ப நொறுங்கிப் போய் இருக்கேன் வேண்டாம்ப்பா... உங்களை கெஞ்சிக் கேட்டுக்கறேன். வேண்டாம்ப்பா..." மளமளவென வார்த்தைகளைக் கொட்டி வளமான மார்பை தூளி போல் பெரு மூச்சோடும் கண்ணீருடனும் அட்டுகிறாள் அவள்.

மாணிக்கம் ஒருவினாடி ஸ்தம்பித்து ராஜேஸ்வரியைப் பார்க்கிறார். அவள் வசந்தாவை சற்று குரூரப் பார்வை பார்க்கிறாள். பின் அதை மந்திரம் போட்டது போல மாற்றிக் கொண்டு, அவளை நெருங்கி தலையை வருடி விடுகிறாள்.

"அம்மாடி..." - குரலில் பல ஆயிரம் டன் கனவு வசந்தா வருடும் அந்த கரத்தைத் தட்டி விடுகிறாள்.

"புரியாமப் பேசறியேம்மா.. இந்த கல்யாணம் நின்னதுல உங்களை விட எங்களுக்குதான்மா அதிக வருத்தம்... எப்பவுமே எந்த ஒரு நல்ல காரியமும் ஒரு தடவை தட்டினா மூணு தடவை தட்டும்மா... அதனால தான் நான் இவ்வளவு கவலைப்படறேன்..."

"மூணு தடவை இல்ல.. முன்னூறு தடவை தட்டட்டும்... எனக்கு அது பத்தி கவலையில்லை எப்ப ஜோதி என் புருஷன் இல்லைன்னு ஆயிடிச்சோ அதுக்குப் பிறகு எவனும் எனக்குப் புருஷனா வரமுடியாது. இந்த ஜென்மத்துல நான் கல்யாணமே பண்ணிக்க விருமபலை... என்னை விட்டுடுங்க..."



- அருவிக்கொட்டாக வார்த்தைகளை உதிர்த்து விட்டு திரும்ப அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொள்கிறாள்.

கூடத்தில் மூவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்கின்றனர்.

"கொஞ்சம் விட்டுத்தான் பிடிப்போமே.. எதுக்கு இத்தனை அவசரம்?" - வள்ளி விழுங்கிக் கொண்டு கேட்கிறாள்.

"இல்ல... எப்படியாவது முடிச்சுட்டு வான்னு அவர் அனுப்பியிருக்காரு..." ரகசியக் குரலில், ஆனால் ரௌத்ர மாக முணுமுணுக்கிறாள் ராஜேஸ்வரி.

"முடிச்சிட்டுவான்னா... பார்த்தீங்கல்ல... எதை வெச்சு நான் முடிக்கட்டும்?" - மாணிக்கம் முதல் முறையாக கோபத்தை கணிசமாக குரலில் கலக்கு கிறார்.

"இன்னும் எவ்வளவு பணம் வேணும்னாலும் தரோம். காரியத்தை எப்படியாவது முடியுங்க... பத்திரிகை அடிச்சு ஏற்பாடு செய்யுங்க... மாட்டேன்னா தற்கொலை செய்துக்குவோம்னு மிரட்டுங்க. சம்மதிச்சு தானே தீரணும்?"

"அப்படிச் செய்ய இப்ப என்ன அப்படி தலை போற அவசரம்?"

"ஆமாம். தலைபோற அவசரம்தான். நாங்க கடவுள் மாதிரி நம்பற ஒரு ஜோசியர், ஜோதி ஜாதகத்தை பார்த்துட்டு எங்களை ரொம்பவே மிரட்டிட்டார். அவன் இஷ்டப்படிதான் அவன் வாழ்க்கை அமையுமாம். இன்னும் ஒரு மாசம் கழிசசு நடக்கப் போற குருப்

பெயர்ச்சிக்குப் பிறகு அவனோட கிரகங்களுக்கு பலம் கூடிடுதாம். ஆகையால அதுக்குள்ள இருக்கற தடை களைத் தாண்டி எங்க விருப்பப்படி கல்யாணத்த முடிக்கச் சொல்றார்.

இங்க உங்க பொண்ணுக்கு நீங்க ஏற்பாடு செய் துட்டா, அதையே காரணமாக காட்டி நீ காதலிச்ச பெண்ணே சர்வ சாதாரணமா மனசு மாறிட்டா... நீ என்னடா பெரிசா பிகு பண்றே'ன்னு நாங்க அவனை வளைக்க எங்களுக்கு வசதியாயிருக்கும்..."

- மெல்ல விஷயத்தைப் போட்டு உருட்டிப் பிரட்டு கிறாள் ராஜேஸ்வரி...

"எலி ஏன் கோமணத்தோடு அலையுதுன்னு இப்ப தான் தெரியுது..." பட்டென்று வார்த்தைகள் வந்து விழுகின்றன வள்ளியிடம்.

ராஜேஸ்வரி பார்வை அதன் எதிரொலியினைக் காட்டுகின்றன. பார்வையில் பழுத்த சிவப்பு.

"வாய மூடிக்கிட்டு சும்மா இருடி..."

- மாணிக்கம் வள்ளியை அதட்டுகிறார். அப்படியே அறை பக்கம் பார்வையை விடுகிறார். நல்லவேளை வசந்தா காதில் விழுந்திருக்க வாய்ப்பில்லை.

பார்வை அறைக்கதவு மேல் இருக்க, கைகள் ராஜேஸ்வரியம்மாளைப் பார்த்துக் கும்பிடுகின்றன.

"அம்மா... நீங்க கிளம்புங்க... நான் எப்பாடுபட் டாச்சும் அதே தேதியில என் மருமகப்பிள்ளை வேணு வுக்கு அவளைக் கட்டிக் கொடுத்துட்றேன். இது உறுதி. நீங்க கிளம்புங்க..."



அவரது கெஞ்சல் கலந்த கும்பிடை முறைத்தபடி ராஜேஸ்வரி கிளம்புகிறாள். புத்திசாலித்தனமாக தட்டையும் நகையையும் கூடத்திலே விட்டுவிட்டு...

'கீய்ங்... காரின் ஹாரன் சப்தம் அது கிளம்பி விட்டதை ஊர்ஜிதம் செய்கிறது.

சாதாரணமாக வீட்டுக்குள் சிகரெட் பிடிக்க மாட்டார் மாணிக்கம். இன்று மாறிவிட்டது அந்தப் பழக்கம். கவளம் கவளமாக புகையை உதடுகள் கக்கித் தீர்க்கின்றன.

"என்ன இது புதுப்பழக்கம்...?" - வள்ளி இடிக்கிறாள்.

"எதுடி?"

"இப்படி வீட்ல புகை பிடிச்சுகிட்டு..."

"இப்ப இதுதான் உனக்குப் பெரிசா போயிடிச்சு... இல்ல?"

"இது மட்டுமில்ல..."

"தெரியும் என்ன சொல்லப் போறேன்னு..."

"கொஞ்சம் கொல்லைப்பக்கம் வர்றீங்களா?"

"அதான் தெரியும்னு சொன்னேனே..."

"கொஞ்சம் கொல்லைப்பக்கம் வாங்களேன்..."

- அவள் அழுத்தம் திருத்தமாகச் சொல்லி, அவருக்கு முன் கொல்லைப்புறம் சென்று நிற்க - புகை மூட்டத்துடன் மாணிக்கமும் பின்தொடர...

"இது கொஞ்சம் கூட நல்லா இல்லைங்க..."

"..."

“உங்களத்தான். ஆனால் இப்படி விலை பேசக் கூடாது? வசந்தாவை நினைச்சா எனக்கு பயமா இருக்குதுங்க...”

“என்னடி பயம்?”

“ரொம்ப வளைச்சா ஒடிஞ்சு போயிடுவாங்க அவ...”

“போவட்டும். இந்த வயசுல காதல் கேக்குதோ...?”

“வேற எந்த வயசுல காதலிப்பாங்களாம். நீங்க பேசறது நல்லா இல்லை...”

“என்ன வள்ளி...? சைட் மாறிப் பேசறே. உன் பொண்ணு பண்ணது உனக்கு வெக்கமா இல்ல...”

“இல்ல-நாம பண்ணிகிட்டிருக்கறதுதான் வெக்கமா இருக்கு. அந்தப் பொம்பள காசக் கொடுத்துட்டோம்னு என்னமா விரட்றா பாத்தீங்களா...?”

“எல்லாம் நம்ம நல்லதுக்குத்தானே?”

“இப்படி ஒரு நம்பிக்கை வேற இருக்கா உங்களுக்கு.. ஆடு நனையுதேன்னு ஓநாய் கவலைப்பட்டிச்சாம். அப்படி இருக்கு அவங்க கரிசனம்.”

“முடிவா என்ன சொல்றே?”

“வசந்தா வேணு கல்யாணம் பத்தி பின்னால பேசிக்கலாம். முதல்ல இந்த ஓதம் அடங்கட்டும்.. இப்பவே அந்த பேச்ச எடுத்து அந்த இளமனசை வதைக்க வேணாங்க.”

“நான் என்ன பண்ணட்டும். அந்தப் பொம்பளை சொல்றதக் கேட்டீல்ல. எவனோ ஜோசியக்காரன் சொல்லிட்டானாம். இப்ப பண்ண எதுவுமில்லை.”



“பெரிய ஜோசியக்காரன். நாம பண்ண ஒரு தப்பு போதும். அடுத்தடுத்து வேண்டாம். விட்டுப் பிடிப்போம். அந்தப் பணக்காரப் பையன் என்னவோ ஆகட்டும். நாம ஏன் அவனைப் பத்திக் கவலைப்படணும்?”

“பட்டுத்தான் ஆகணும்... ஏன்னா இப்பதான் ஒண்ணரை லட்சரூபாய்க்கு ஒரு லேத் மெஷினும், கிரைண்டிங் மிஷினும் ஆர்டர் பண்ணிட்டு வந்துருக் கேன்.”

- மாணிக்கம் சிகரெட்டைத் தூக்கி எறிந்தபடி சொன்னவராய் வெளியேறுகிறார்.

“என்னங்க... நில்லுங்க...”

“எதுவும் பேசாதே - எல்லாம் எனக்குத் தெரியும்.”

- அந்த விலை போய்விட்ட ஆண்மகனின் வார்த்தைகள், அவளை சோர்வுப் பள்ளத்தில் பிடித்துத் தள்ளுகின்றன!



**க**ண்ணாடி முன் நின்று தலைவாரிக் கொண் டிருக்கிறான் வேணு. காபிபோட்டு எடுத்து வலது பக்கமாக வைத்திருக்கிறார் மாமா நரசிங்கம்.

பெண் இல்லாத வீடு. எல்லாமே மாமாதான். வீட்டுக்கு வெளியே வீட்டை ஒட்டினாற்போல மளிகைக் கடை.

கூட்டம் இல்லாத சமயமாகப் பார்த்து உள்ளே வந்து வீட்டு வேலையும் பார்த்துக் கொள்வார்மாமா.

மாமாவிற்கு எப்பொழுதும் காவிதான் உடுப்பு.

கார்த்திகையானால் சபரிமலை, தை வந்தால் பழனி, புரட்டாசிக்கு திருப்பதி என்று யாத்திரைப்

பிரியராக இருப்பார். சும்மா இருக்கக்கூடாதே என்று மளிகைக் கடையையும் கட்டிக்கொண்டு அழுபவர்.

சுமாரான வியாபாரம்... யாரோ கேட்ட கடலைப் பருப்பை கட்டி கொடுத்துவிட்டு திரும்புகிறார். காப்பி அப்படியே இருக்கிறது. வேணு இன்னமும் தலை முடியோடு போரிட்டுக் கொண்டிருக்கிறான். 'க்ளுக்' என்று மாமா உதட்டை, சிரிப்பு கிழிக்கிறது...

சப்தம் வேணுவையும் திருப்புகிறது...

"என்ன மாமா சிரிப்பு...?"

"சிரிக்காம... என்னவோ விழுந்து தலை சீவறே... அந்தக் காலத்துல பாகவதர்கூட இப்படி தலை சீவி பார்த்ததில்லை! இருக்கறது நாலு முடி... இதுக்கு இத்தனை போராட்டமா...! காப்பி ஆறுதுல்ல?"

"உங்கள காப்பி போடாதீங்கன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்..."

"நான் போடாட்டி... வேற யார் இருக்கா...? உன் பொண்டாட்டியா?"

"ஆரம்பிச்சுட்டீங்களா... இனி நான் இங்க நிக்கத் தயாரா இல்லே. இந்த பேச்சு எதுல போய் முடியும்னு தெரியும் மாமா..."

வேணு மளமளவென்று பவுடர் பூசியபடி வெளிக் கிளம்ப ஆயத்தமாகிறான்.

"டேய் நில்லுடா... நான் பேசறதுல என்னடா தப்பு. நீ உன் முதலாளி மகளையே லவ் பண்றே. உன் முதலாளியும் உங்க காதலுக்கு சம்மதிச்சுட்டாருனுல்லாம் கேள்விப் பட்டேன். அப்புறம் என்ன? தாலியக்கட்டி அந்த மகராசிய கூட்டிகிட்டு வரவேண்டியதுதானே...



இந்த் காப்பி கழுதையையெல்லாம் நானும் கட்டிக்கிட்டு அழுவ வேண்டாம்தானே?"

வேணு தீர்க்கமாக அவரைப் பார்க்கிறான்.

"என்னடா பாக்கறே... நான் உங்க காதலை எதிர்ப்பேன்னு பார்த்தியா?"

"....."

"பேசுடா... நான் கேக்கறதுல என்ன தப்பு?"

"ஒரு தப்புமில்ல மாமா. அதே சமயம் நீங்க நினைக்கற மாதிரி அந்த கல்யாணம் அவ்வளவு சுலபமும் இல்ல..."

"என்னடா தம்பி ஒரு மாதிரி சொல்றே? உனக்கு ராஜயோக ஜாதகம்டா. எனக்குத் தெரியும்..."

"உங்களுக்கு எதுவுமே தெரியாது மாமா. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன்... தயவு செய்து என் கல்யாணம் பத்தி மட்டும் எதுவும் பேசாதீங்க..."

"ஏம்பா...?"

"அது நடக்கும்போது பாத்துக்கலாம் மாமா. என் வரைல அது ஒரு கடல் நீச்சல்... இப்போதைக்கு அவ்வளவு தான் சொல்வேன்..."

"கடல் நீச்சலா... அப்ப அது வீண் பிரயாசை தம்பி... விட்டுடு...!"

"........."

"என்ன பதிலைக் காணோம்? உன் காதல்ல ஏதாச்சும் சிக்கலா?"

"வேண்டாம் விட்றுங்க. நீங்க கவலைப்படாதீங்க அதைப் பத்தி..."

"வேற யார் படுவா. என்னடா தம்பி பேசறே நீ?"

நரசிங்கம் வடாது பிடிபோடுகிறார். வேணு அவரை சலிப்போடு பார்க்கிறான். இவரிடம் பிரச்சினையை ஒரு முடிவுக்குக் கொண்டு வர, ஒரே வழிதான் இருக்கிறது என்று நினைக்கிறான்.

"நான் யாரையும் காதலிக்கலை மாமா... நீங்க கேள்விப்பட்டதெல்லாம் பொய்... எந்த கோடீஸ்வரன் பெண்ணாவது ஒரு கோவணாண்டியைக் காதலிப்பாளா. நல்லா யோசிச்சுப் பாருங்க..." - சொல்லிவிட்டு விறு விறுவென்று வெளியேறும்போது, வேட்டித் தலைப்பை ஒரு கையில் பிடித்தபடி உள் நுழைகிறார் மாணிக்கம்!

# 11

*'காதல் - மோசமான உயிர்ப்பசை இது...*
*சேதமின்றி பிரிக்க முடியாதே உள்ளங்*
*களை...!'*

உள்ளே நுழையும் போதே வேணுவைப் பார்த்து மதிப்பான ஒரு சிரிப்பு மாணிக்கத்திடம்...

"எங்க மாப்ள வெளிய கிளம்பிட்டியா?"

"ஆ... ஆமாம் மாமா..."

"உன்னைத்தான் பாக்கலாம்னு வந்தேன்"

"என்ன விஷயம் மாமா...?"

"நின்னு பேச விஷயமில்ல மாப்ள... ரொம்ப அவசர வேலையா?"

"ஆமாம் மாமா"



"அப்ப கிளம்பு நீ... நான் அண்ணன்கிட்ட பேசிக்கறேன்."

சொல்லியபடியே உள் நுழைகிறார். வேணுவும் வெளியே சைக்கிளை எடுக்கிறான்.

"வா மாணிக்கம்... நானே வரணும்னு இருந்தேன். ஆமா என்னடா விவகாரம் வசந்தா சம்பந்தமா ஏதேதோ காதுல விழுந்துச்சே?" - நரசிங்கம் கேள்வியோடு வரவேற்கிறார்.

"போச்சுடா... உன் காதுவரை வந்துடுச்சா?"

"ஏண்டா, அமெரிக்க ஜனாதிபதி பண்ண தப்பையே நேர்ல பார்த்த மாதிரி அலசற வீதிடா இது...? வசந்தா விஷயம்தானா வராது...!"

"வாஸ்தவம்தான்னே. நானே முடிஞ்ச மட்டும் சமாளிச்சுடலாம்னு நினைச்சேன். அதான் உன்கிட்ட கூட சொல்லலை..."

"விவகாரம் என்ன...? முதல்ல உக்காந்து சொல்லு..."

மாணிக்கம் அரிசி மூட்டைக் கூடத்தை ஒட்டி துண்டை விசிறியபடி உட்காருகிறார்.

"காப்பி குடிக்கிறியா?"

"வேண்டாம்... நீயும் உக்காரு. உன் கூட நிறைய பேசத்தான் வந்துருக்கேன்..."

"அப்ப இரு... கடை முன்னால திரையை விட்டுட்டு வரேன்."

நரசிங்கம் எழுந்து பலகைக் கதவு வழி கடைக்குள் நுழைந்து 'கமகம மணத்துக்கு ஜோசப் காபி' என்று எழுதப்பட்டிருக்கும் படுதா போன்ற திரையை முன்னால்

இறக்கி விட்டு கல்லாவையும் பூட்டி சாவியை உருவிக் கொண்டு வீட்டுக் கூடத்துக்கு வருகிறார்.

முகத்தில் பரபரப்பு,

"சொல்லுடா..."

"என்னத்தச் சொல்ல... மகாலட்சுமி மாதிரி லட்சணமான பொண்ணைப் பாத்துட்டதா ரொம்ப தான் செருமாந்து கிடந்தேன் நல்லா கரியைப் பூசிட்டா..."

"என்ன பண்ணுனா?"

"தர்மாஸ் கம்பெனின்னு கேள்விப்பட்டிருப்பியே."

"சொல்லு... தர்மராஜ் முதலாளியோடதுதானே?"

"ஆமாம். அவர் மகனுக்கும் வசந்தாவுக்கும் எப்படியோஸ்னேகம் உருவாயிடிச்சு. 'கட்டுனா வசந்தாவைத் தான் கட்டுவேன்'னு அவன் ஒரேயடியா அடம்பிடிக்க, இவளும் அவனைத் தூக்கி சாப்புடட்டா ஆசைல..."

"இப்ப என்ன முடிவாயிருக்கு...? அதச் சொல்லு..."

- மாணிக்கம், தர்மராஜ் தன்னைச் சந்தித்தது - விலை பேசியது - வீட்டுக்கு வந்தது அக்கா தங்கையாகியது... என்று எதையும் அண்ணனிடம் மறைக்கவில்லை.

நரசிங்கம் முகம், சகலத்தையும் கேட்டு வெளிறிப் போய்விட்டது.

"என்னண்ணே பேசமாட்டேங்கறே... நீயும் நான் காசைப் பாத்து உழுந்துட்டேன்னு நினைக்கறியா?"

"பின்னே?"

"இல்லண்ணே... வசந்தாவை என்னதான் சண்டை போட்டு அந்தப் பையன் கட்டிக்கிட்டாலும் ரெண்டு



பேரும் அந்த வீட்ல சந்தோஷமா இருக்கறது ரொம்பக் கஷ்டம்ணே.

ஒரு ஆறுமாசம் வெச்சு அனுபவிச்சிட்டு அப்பால அறுத்தும் கட்டலாம் - மண்ணெண்ணையை ஊத்தி தீயையும் வைக்கலாம்... அதனாலதான் நான் அந்த ஆள் பக்கம் சாஞ்சேன்... அவங்க பணக்காரங்க... கழுதைய குதிரையாக்குவாங்க. நம்மால முடியுமா?"

"சாஞ்சே சரி.. அந்த ஆள் காசை எதுக்கு வாங்குனே? அதுதான் இப்ப முழிக்கிறே... அந்தப் பொம்பளையும் வந்து அந்தப் பேச்சு பேசிட்டுப் போயிருக்கா..."

"இப்ப என்ன பண்ணலாம்... அதைச் சொல்லு..."

"போய் அந்த ஆள் கொடுத்த செக்கை அந்த ஆள் மூஞ்சியில எறி. 'நான் வேணா உனக்கு பணம் தரேன்... உன் மகனை என் மகளோட சேரவிடாம பாத்துக்க'ன்னு சொல்லிட்டு வா."

- மாணிக்கம் இடறி விழுகிறார்.

"என்னடா பதிலைக் காணோம்...?"

"முடியாதுண்ணே, அந்த ஆள் தந்த செக்கை வாங்கி லேத் மெஷின் வாங்கிட்டேன்..."

"போடா போடா போக்கத்த நாயி... பணக்காரன் ஜெயிக்கறதே இதுலதாண்டா...! எங்க தட்டுனா விழு வாங்கன்னு அவங்க கரைச்சுக் குடிச்சிருக்காங்க.

நமக்குதான் மானரோஷம், சூடு சொரணை ஒரு எழவும் கிடையாது."

"நீ எவ்வளவு வேணா திட்டு... வள்ளியும் இதையே தான் சொல்றா. ஆனா எப்படியாவது வர்ற முகூர்த்தத் துல வேணு, வசந்தா கழுத்துல தாலி கட்டற மாதிரி செய்துடு..."

- நரசிங்கம் குத்தப்பட்ட மாதிரி விடைக்கிறார்.

"அடப்பாவி... நீ வந்துருக்கறது இப்ப அதுக்குத் தானா?"

"என்னண்ணே 'வேணுவுக்கு வசந்தா - வசந்தா வுக்கு வேணு'ன்னு அக்கா உசுரோட இருந்த நாள்லையே பேசி முடிவு பண்ணதுதானே?"

"நாம முடிவு பண்ணலாம் இப்பப் போதாதுடா. தெரியும்ல...?'

"ஏன்... வேணு சம்மதிக்க மாட்டாங்கிறியா?"

"வசந்தா மாதிரியே அவனுக்கு ஒரு காதல் விவ காரத்துல இருக்கான். அது தெரியுமா உனக்கு?"

"என்னண்ணே சொல்றே?"

"அட ஆமாண்டா... உன் பொண்ணு ஒரு பணக் காரப் பையனா பார்த்து காதலிச்ச மாதிரி இவனும் ஒரு பணக்காரப் பெண்ணா பார்த்துதான் பிடிச்சிருக்கான்..!'

"நெஜமாவா?"

"நான் என்னத்தக் கண்டேன். காதுல விழுந்ததைச் சொல்றேன். அவனைக் கேட்டா எல்லாம் பொய்யுங் கறான்."

"என்னண்ணே குண்ட தூக்கிப் போடற. நாசமாப் போன காதலுக்கு நம்ம குடும்பம்தானா கிடைச்சுச்சு...?"

"அதை ஏண்டா செய்யற-எல்லாம் வயசுக் கோளாறு. அதுக்கு மேல அதப்பத்தி யோசிக்க என்ன இருக்கு?"

- நரசிங்கம் சாதாரணமாய் எடுத்துக் கொள்கிறார். ஆனால் மாணிக்கம் அபின் சாப்பிட்டவன்போல நடுங்கத் தொடங்குகிறார். வேர்த்து வடிகிறது. விடிந்து



விட்டது... இனி முதலாளி என்ற நினைப்பெல்லாம் தவிடு பொடியாகி விடுமோ...?

தலையைப்பிடித்துக் கொள்கிறார். அதைப் பார்க்க நரசிங்கத்துக்கே என்னவோ போல் இருக்கிறது,

"சரி சரி...! வேணு வரட்டும் பேசிப் பாக்கறேன்" என்கிறார்.

"பேசுண்ணே... விடாதே... உன்னைதான் நான் மலை பேல நம்பியிருக்கேன்..."

"என்னை நம்பாதே. இனியாவது அந்த ஆண்டவனை நம்பு."

"எனக்கு அந்த ஆண்டவன் இப்ப நீதான்னே."

"ரொம்ப தூக்காதே போய் ஜோலியப்பாரு. வேணு வரட்டும்."

"அண்ணே..." - மாணிக்கத்திடம் குரல் உடைகிறது.

"என்ன?"

"இந்த கல்யாணம் மட்டும் நடக்கலைன்னா நான் அவ்வளவுதான். அந்த பணக்காரன் என்னை எது வேணா செய்யலாம். அவன் செய்யறதுக்கு முந்தி நானே பாஷாணத்தை வாங்கி விழுங்கிடுவேன். சும்மா உணர்ச்சி வசப்பட்டு சொல்லலை நான். இது உன் மேல சத்தியம்."

- மாணிக்கம் நின்று பேசும்போதே வலக்கையை நீட்டி நரசிங்கத்தின் நரைத்த தலைமேல் கை வைத்து சத்தியமும் செய்துவிட, நரசிங்கத்துக்கு சப்த நாடியும் ஒடுங்குகிறது.

கடவுளே இது என்ன பரீட்சை?



**வே**ணுவின் கையைக் குலுக்கு முடித்துவிட்டு, ஒரு இருமலுடன் அப்பட்டமான நோயாளியாட்டம் காரில் ஏறுகிறார் யூனியன் தலைவர் ஞானசிகாமணி. மேனேஜர் அக்கௌண்டன்ட், யூனியன் மெம்பர்கள் டிபார்ட் மென்ட் ஹெட்ஸ் என்று ஒருவர் பாக்கியின்றி அவரை வழியனுப்பு, கார் கம்பெனியை விட்டு வெளியேறுகிறது.

மேனேஜர் வேணுவை நெருங்கி வந்து கைகுலுக்கு கிறார்.

"ஆல் த பெஸ்ட் வேணு. பெரிய பொறுப்பு... பொறுப்பா நடந்துக்குவீங்கன்னு நம்பறேன்' என்று சம்பிரதாயம் பேச, மற்றவர்களும் அதை ஒற்றி எடுக்க, தர்மசங்கடத்துடன் யூனியன் ஆபீஸில் உள்ள தலைவர் நாற்காலியில் போய் அமருகிறான் வேணு.

துளிகூட எதிர்பார்த்திராத இடம். உட்கார்ந்த மறுநொடி இன்டர்காம் சப்திக்கிறது - எடுக்கிறான்.

"பெஸ்ட் விஷஸ் வேணு..." - அனு தான் வாழ்த்து கிறாள்.

"தேங்க்யூ மேடம்."

"மேடமா... என்னய்யா மரியாதையெல்லாம் புதுசா இருக்கு...?"

"எங்க இருந்து பேசறீங்க..."

"நீங்க யூனியன் ஆபீஸ்ல சார்ஜ் எடுத்துகிட்டீங்க. நான் கார்ப்பரேட் ஆபீஸ்ல எடுத்துக்கிட்டேன். அப்பா U.S. கிளம்பியாச்சி - தெரியும்தானே?"

"சொன்னாரு... போகும்போது பேசிட்டுதான் போனார்."



"அப்புறம் என்ன... இனி நம்ம ராஜ்யம்தான். அப்பா என்னென்ன லொள்ளெல்லாம் பண்ணிவெச்சிருக் காருன்னு நோண்டிகிட்டிருக்கேன். ஏன்னா அதுல நீங்களும் நானும் மாட்டிக்கக் கூடாது இல்லியா?"

"என்ன சொல்றீங்க மேடம்?"

"போதும் வேணு... இதோட ரெண்டு தடவை மேடம்னுட்டீங்க - மரியாதையா அனுன்னு கூப்பிடுங்க. அப்புறம் இனி நாம வெளிய சந்திக்க ஹோட்டல், பார்க்னு போக வேண்டாம். ஆபீஸ் மேலேயே சந்திக்கலாம்."

- மறுவினாடி இன்டர்காமை முடக்குகிறான் வேணு. கசங்கியும் போகிறான்.

இன்டர்காம் திரும்ப சப்திக்கிறது... எடுக்க கை வரவில்லை. சற்று தள்ளி செகரட்ரி ஜோசப்பின் டேபிள். ஜோசப் நிமிர்ந்து பார்க்கிறான்.

"என்ன வேணு.. மேடம் தொந்தரவு பண்றாங்களா?" சரியாகக் கேட்கிறான்.

"அ... ஆமாம்..."

"பேசவேண்டியதுதானே.. ஏன் வெச்சுட்டே?"

"சும்மா பேச என்ன இருக்கு? அவர்களுக்குத்தான் வேலை இல்லை..."

- வேணுவின் பதில் ஜோசப்பை அதிர்ச்சியடைய வைக்கிறது. உற்றுப் பார்க்கிறான். இன்டர்காம் கத்திக் கொண்டே இருக்கிறது.

"ஜோசப், கொஞ்சம் நீ எடுத்து நான் இல்லைன்னு சொல்லிடேன்."

"ஏன் அப்படி சொல்றே?"

"நான் இப்ப தலைவர், அதுக்குத் தகுந்தமாதிரி நடந்துக்க விரும்பறேன். அவங்க என்னை அப்படி நினைக்கலை. அதனாலதான்..."

-ஜோசப்எழுந்துஇண்டர்காமைஎடுக்கச்செல்கிறான்.

அதற்குள் அதுவே நின்று போகிறது.

சில வினாடிகள் புழுக்கமான மௌனம். ஜோசப் தன் சீட்டுக்கு திரும்பிச் சென்று அமருகிறான். திரும்ப வேணுவை ஏறிட்டு...

"சொல்றேன்னு தப்பா எடுத்துக்காத வேணு. உன் இடத்துல நான் இருந்தா நிச்சயம் இப்படி எல்லாம் நடந்துக்க மாட்டேன்..."

"வேற எப்படி நடந்துப்பே?"

"அவங்க நம்ப முதலாளி. நமக்கு சம்பளம் தர்றவங்க..."

"அதுக்காக ஜால்ரா போடணுமா?"

"தப்பா புரிஞ்சுகிட்டே. அவங்களுக்கும் உனக்கும் கல்யாணம் வேற ஆகப்போகுது. அப்படி இருக்கைல அவங்க உரிமையோட பேசறத தப்பா எடுத்துக்க முடியும்?"

- ஜோசப்பின் வக்காலத்தையும் வேணுவின் பதிலையும் டைப் செய்தபடியே கேட்டுக் கொண்டிருந்த க்ளார்க் விஷமமாக சிரித்துக் கொண்டே ஜோசப்பைப் பார்க்கிறான்.

"ஜோசப்... என்னப்பா நீ புரியாத மாதிரி கேள்வி கேட்டுகிட்டு. வேணு ட்ராமா போட்றாரு... இன்னுமா புரியலை?"



"ட்ராமா?"

"ஆமாம்... சீட்ல வந்து உக்காந்த அன்னிக்கே ஜொள்ளு விட்டா நல்லாவா இருக்கும். இதெல்லாம் சும்மாப்பா - பூச்சி!"

- கிளார்க்கின் விஷமம் வேணுவை சிவக்க வைக்கிறது.

"வாயை மூடுய்யா... ட்ராமாவாம் ட்ராமா - நீ பார்த்தியா? நான் ஒண்ணும் உங்கள மாதிரி பணக்காரின்னா பல்லிளிக்கிற ஆள் கிடையாது... தெரிஞ்சுக்கோ. இந்த நிமிஷம் அவங்கதான் என்னை அதிகம் விரும்பறாங்க நான் இது ஒத்துவராதுன்னு சொல்லி ஒஞ்சு போயிட்டேன்.ீ. நாளைக்கு எங்களுக்கு கல்யாணமே நடந்தாலும் அவங்க மெக்கானிக் வேணுவை கல்யாணம் பண்ணிக்க மாட்டாங்க. அவங்க அந்தஸ்துக்கு சமமான முதலாளி வேணுவைத் தான் கல்யாணம் பண்ணிப்பாங்க. ஞாபகம் இருக்கட்டும்.

இங்க இப்ப நான் யூனியன் லீடர். அவ்வளவுதான். அதுக்குமேல எந்த நினைப்பும் யாருக்கும் வேண்டாம். ஞாபகம் இருக்கட்டும்."

- ஆவேசம் அலை மோத, அழுத்தம் திருத்தமாகப் பேசி நிற்பவனை, யூனியன் ஆபீசே வெறித்துப் போய் பார்க்கிறது. அதில் ஒருவன் மட்டும் 'இது எதிர்பார்த்தது தான்' என்கிற மாதிரி சிரிக்கிறான். இடுப்பில் பேஜர் போல் கட்டியிருக்கும் பேப்ரிக்கார்டரை ஆஃப் செய்கிறான்.

'இதுபோதும்... இது'வைத்தே கோடுபோட்டு அந்தக் கோட்டில் ரோடும் போட்டுவிடுவேன்'. என்று முணுமுணுக்கிறான் அவன்.

# 12

***'அன்பில் ஜாதி அன்பு காதல்!***

***ஆசையில் ராஜ ஆசை காதல்!'***

அந்த முணுமுணுப்போடு அங்கிருந்து நழுவத் தொடங்குகிறான். அந்த தொழிற்சாலையில் எவ்வளவோ தொலைபேசி இணைப்புகள். ஒன்றைப் பிடித்து ஓரம் கட்டி அமர்ந்து, யாரோடோ பரமபவ்யமாகப் பேசிவிட்டு அதை முடக்குகிறான்.

பின், கைளைக் கூப்பிக் கொண்டு தீவிரமாக யோசனை.

- பின், யோசனை கலையாதபடி எழுந்து நடக்கத் தொடங்க, எதிரில் அனு தெரிந்தாள்.

- ஃபேக்டரியில் ஃப்ளோர் விசிட்!

- இப்படி எல்லாம் மயில் வாகனம் வரமாட்டார்.

- அவருக்கு எஞ்சின் புகை, கசட்டு வாடை இதெல்லாம் அடியோடு பிடிக்காது. அதோடு அதை சகித்துக கொண்டு வந்தாலும் யாராவது ஒரு லேபர் பொத் தென்று காலில் விழுந்து ஏதாவது ஒரு கம்ப்ளைன்ட் மனுவை கையில் வைத்து விடுவான்.

'அந்த சூப்பர்வைசர் சரியில்லை... இந்த எஞ்ஜினியர் லஞ்சம் வாங்குகிறார். என் மாமன் மகன் படித்து விட்டு சும்மா இருக்கிறான்... வேலை வேண்டும் என்று ஏதாவது ஒரு குற்றச்சாட்டோ, யாசகமோ நிச்சயம் அதில் இருக்கும்.

'எதற்கிந்த எழவு' என்று தலைவைத்துக் கூட படுக்க மாட்டார்.



- அனு அதை மறுக்கிறாள்.

- அதோ ஒவ்வொரு லேபருடனும். மனம் விட்டு பேசிக் கொண்டு...

"வணக்கம்மா... இப்படி இதுவரை எங்ககிட்ட யாரும் குறை கேட்டதே இல்லைம்மா..."

"ஆமாங்கம்மா... இந்த மெஷின்ல மெயின் பார்ட் டேமேஜ் ஆகி வருஷம் மூணு ஆச்சு. ஒரிஜினல் பார்ட் ஜெர்மன்ல இருந்து வரணும். ஆனா அங்க இருந்து வாங்காம லோக்கல் பிராண்டை வாங்கிப் போட்டு ஒட்டச் சொல்றாங்க, அதனால மாசத்துல பாதி நாள் பிரேக் டவுனாகி நின்னு போகுது."

"உற்பத்தியும் பாதிகூட இல்லை..."

"எனக்கு இடுப்பெலும்புல தேயுமானம் இருக்கு தும்மா. பெல்ட் போட்டுருக்கேன். டாக்டர் 'ஒரு ஆறு மாசமாவது உட்காந்து வேலை பாக்கணும்'னு சொல்றார். ஆனா சூப்பர்வைசர் ஒருநாள் உக்காந்து வேல பாக்கவிட மாட்டேங்கறார்."

- ஆளாளுக்கு பட்டியல் போட்டுக் கொண்டிருக்க

- அனு கூர்மையாக கேட்டுக் கொண்டிருக்கிறாள்.

அருகில் நின்று குறிப்பெடுத்துக் கொண்டிருக் கிறான். பி.ஏ. கோவிந்தராஜ்.

இந்த காட்சிகள், டேப்ரிக்கார்டரில் வேணு பேசுவதைப் பதித்துக் கொண்டவனை கூர்மையாகப் பார்த்து தீவிரமாக யோசிக்க வைக்கின்றன.

அவனிடம் திரும்பவும் தொலைபேசிச் சுழற்சி, யாரோடோ பேச்சு - பின் முடக்கம்.

●●●

முடக்கிவிட்டு திரும்புகின்றவன் எதிரில் பிளான்ட் மேனேஜர்.

"என்ன வில்லியம்... அசைன்மென்ட்டெல்லாம் எந்த அளவுல இருக்கு?"

"இருக்கு சார்... முதலாளியம்மா போற வேகத்துப் பார்த்தா ஒருவாரம் எனக்கு அதிகம்..."

"சீக்கிரம் முடிங்க... என் ரூமுக்கு வந்து என்னை என்ன விரட்டு விரட்டிட்டா தெரியுமா?"

"விரட்டட்டும்... விரட்டட்டும்... அணையப் போற விளக்கு எப்பவும் பிரகாசமாதான் எரியும்..."

"என்ன வில்லியம்-என்னமோ சொல்றீங்க. முதலாளி கத்திரிக்கச் சொன்னாரா... இல்லை வேற எதாவது...?"

"என்ன பயந்துட்டீங்களா... கத்தரிக்கற வேலை தான் கூடவே சேத்து வைக்கற வேலையும் இருக்கு...!"

"சேத்து வைக்கறதா?"

"ஆமாம், இவங்களோட அந்த பையன் ஜோதி ஷங்கர் இல்ல..."

"ஆமாம்..."

"அவங்களோட இவங்கள சேர்த்தும் வைக்கணும். சரியான அசைன்மென்ட்தான்..."

"உங்களுக்கென்ன சார்... நீங்க கேக்கற ஃபீசைக் கொடுத்துட்டா வாஜ்பாயையும், நவாஸ் ஷெரீபையுமே நீங்க சேத்து வெச்சிடுவீங்க... நான் சொல்லியா தரணும்?"

மேனேஜர் பாராட்டைக் கேட்டு ரசித்துச் சிரிக்கிறான் வில்லியம் என்னும் அவன்.





மேகம் கிழித்துக் கொண்டிருக்கிறது விமானம்!

அந்த நாளின் 'கிருஷ்ண தேவராயா' - முந்நூற்றுக்கு கொஞ்சம் குறைவான எண்ணிக்கையில் பயணிகள். அதிக டீலக்ஸ் வகுப்பின் பத்தாவது சீட்டில் மயில் வாகனம் இயர்பெனில் 'உயிரே உயிரே' கசிந்து கொண்டிருக்கிறது. தலையை நிமிர்த்த 16 எம்.எம் திரைப்பட ஸ்க்ரீனில் பேஸ்கட் பால் விளையாட்டின் பதிவு எடுத்த பிரதியின் ஓட்டம்!

இரண்டுமே பிடிக்கவில்லை. இயர்போனைக் கழட்டி விட்டு டாய்லெட் பக்கமா நழுவுகிறார். அங்கு ஒரே புகை மண்டலம். தானும் எடுத்து பற்ற வைத்துக் கொள்கிறார். கூடவே அனு நினைவும் பற்றிக் கொள்கிறது. ஃபேக்டரி பற்றின கவலைகளும்...

வில்லியமிடம் சாதுர்யமாக பிரிக்கும் வேலையை ஒப்படைத்துவிட்டு வந்தாயிற்று... வில்லியம் பற்றி தர்மராஜ் சொன்னது ஞாபகத்தில் மின்னுகிறது.

"உலகத்திலேயே உன்னையும் என்னையும் விட, ஏன்... அணு விஞ்ஞானி அப்துல்கலாம், சிதம்பரம் இவங்களையும் விட மிக அதிக அளவுல மூளையைப் பயன்படுத்தத் தெரிஞ்ச நபர் இந்த வில்லியம்!

இவர்கிட்ட ஒரு அசைன்மென்ட்ட கொடுத்தா காரியம் முடிஞ்ச மாதிரிதான்!

நீ ஸ்டேட்ஸ் போய் ஊரைச் சுத்திட்டு திரும்பும் போது உன்னை ஏர்போர்ட்லையே வரவேற்பாங்க அனுவும் ஜோதிஷங்கரும் ஜோடியா...!

அந்த அளவுக்கு பண்ணிடுவார் மிஸ்டர் வில்லியம்! இல்ல வில்லியம்?"

- தர்மராஜின் அறிமுகமும் அந்தப் பாராட்டும் எந்த அளவிற்கு தனக்கு உதவி செய்யப் போகிறதோ?

"நீங்க லண்டன்ல இருந்து காண்டாக்ட் பண்ணுங்க சார். உங்களுக்கு நிச்சயமா ஒரு நல்ல செய்தி தரேன்..."

ஃப்ளைட் ஏறும்போது வில்லியம் சொன்னது ஞாபகத்தில் புகையோடு கசிகிறது.

அதற்கேற்ப, ஸ்டீரியோவில் இருக்கையில் போய் அமரச் சொல்லி வேண்டுகோள் விடுக்கப்படவே தன் சீட்டை நோக்கி நடக்கிறார்.

பொத்தென்று பிணமாட்டம் விழுகிறார்.

பேரபோலா வடிவக் கண்ணாடி வழியாக லண்டன் நகரம் தெரியத் தொடங்குகிறது. விமானமும் உயரத்தின் பிடியில் இருந்து தாழ்ந்து பறக்கத் தொடங்குவதை வயிற்றின் கூடுதலான அமிலச் சுரப்பால் உணர முடிகிறது. லண்டன் கண்களைப் பறிக்கிறது. வகிடெடுத்த சாலைகள்... பேன் கூட்டம் போல அதில் வாகனங்கள். அசந்தால் விமானத்தின் அடி வயிற்றைத் தட்டும் உயரத்தில் கட்டிடங்கள். நீலநிற நீர்த் தொட்டியாய் நீச்சல் குளங்கள்...!

அனைத்தையும் காட்டிக்கொண்டு ஹீத்ரு விமான நிலைய ஓடு பாதைத்தளம் இறங்குகிறது. 'கிருஷ்ண தேவராயா' என்னும் ஏர் இந்தியா விமானம்.

இங்கேதான் அமெரிக்க பயணிகளுக்கு நிறைய அவகாசம் கிடைக்கும். டொமஸ்டிக் பாஸ் வாங்கிக் கொண்டு ஒரு மணி கால அளவு அவகாசம் எடுத்து வெளியேறலாம். தொலைபேசி பிடித்து உலகின் எந்த ஒரு மூலைக்கும் தொடர்பு கொள்ளலாம்.



மயில்வாகனமும் தொடர்பு கொள்கிறார். லண்டனின் அந்த வெண்ணிற தொலைபேசிச் சாதனம் மதுரையின் ஒரு பங்களாவாசியான வில்லியமை கவ்விப் பிடிக்கிறது.

"என்ன வில்லியம்... எப்படி இருக்கு நிலைமை? அனு எதாவது பிடி கொடுத்தாளா... நாம நினைச்சபடி பிரச்சினை இல்லாதபடி ரெண்டு பேரையும் பிரிக்க முடியுமா?"

"ஏன் சார் உங்களுக்கு இவ்வளவு சந்தேகம்? ஒரு நிமிஷம் இந்த டேப் வாய்ஸை கேட்டுட்டு சொல்லுங்க."

"எந்த டேப்... யார் பேசினது?"

"கேளுங்க... புரியும். டைம் இருக்குல்ல?"

"இருக்கு இருக்கு... போடுங்க கேப்போம்..."

மயில்வாகனம் காதில் அடுத்த நொடி வேணு பாய்கிறான்.

"என்ன சார்? அப்படிப் பாக்கறீங்க... எப்பவும் வேணு ஒரு முடிவெடுத்தா எடுத்ததுதான். மனுஷனுக்கு மூளைதான் பெரிய சொத்து... இதனாலதான் ஒரு சாதாரண ஃபிட்டரா இருந்த நான் இப்போ யூனியன் லீடரா யிருக்கேன். கூடிய சீக்கிரம் இதே ஃபேக்டரிக்கு முதலாளியாவும் ஆகற நாள் தொலைதூரத்துல இல்ல.

ஒரு வேடிக்கை என்னன்னா, நான் எதையும் கேட்டு வாங்கமாட்டேன். தானாவே என்னைத் தேடி வரும்.

அனுகிட்ட கூட 'நான் தனியே போய் தொழில் ஆரம்பிச்சு முன்னுக்கு வந்து உன்னை கல்யாணம் பண்ணிக்கிறேன்'ன்னுதான் சொல்லியிருக்கேன்.

அதே சமயம் அப்படிப்போக முடியாதபடி சிச்சு வேஷனையும் இங்க நான் க்ரியேட் பண்ணிட்டேன். யூனியன் லீடர் ஞானசிகாமணியை கொஞ்சம் கவனிச்சேன். காசை வாங்கிட்டு மனுஷன் 'உடம்பு சரியில்லை... நீதான் யூனியனை தாங்கணும்'னு சொல்லி ஓடிட்டார், நானும் யூனியன் லீடராயிட்டேன்.

இது ஒரு சாம்பிள்தான்...

போகப் போகப் பாருங்க. இன்னும் நிறைய இருக்கும்...

-டேப்ரிக்கார்டரில் வேணுவின் வாய்ஸ் அடங்கு கிறது. வில்லியம் வாய்ஸ் தொலைபேசியில் இப்பொழுது மயில்வாகனத்தைப் பற்றுகிறது.

"எப்படி சார்?"

"பேசுனது வேணுவா?"

"வேணுவேதான்..."

"எப்படி... எப்படிப் பேசினான் இப்படி? ஆளை வெச்சு மிரட்டி பேச வெச்சீங்களா?"

"அதெல்லாம் தமிழ் சினிமால... ஆளை வெச்சு மிமிக்ரி பண்ணி டேப் செய்தது இது. பேசுனது வேணு இல்ல! வேணு குரல்ல காட்டுப்புத்தூர் கருணாகரத் தம்பிரான். ஒருத்தர் குரலை ஒரு தடவை கேட்டா போதும். அப்படியே பேசிக் காட்றதுல கில்லாடி! உதாரணத்துக்கு இப்ப உங்களை ஏமாத்தினதையே சொல்லலாம்!"

"அப்படின்னா இந்தக் கேசட்டை இப்ப அனுவுக்கு அனுப்பி போட்டு காட்டப் போறீங்களா?"



"இப்ப இல்ல... உரிய நேரத்துல..."

"அவ நம்புவாளா?"

"அவங்க நம்பற நேரம்னு ஒண்ணு உண்டு. அதை உருவாக்கிக்கிட்டிருக்கேன். அப்ப கேட்டா நிச்சயம் நம்புவாங்க. விஷயமும் முடிஞ்சிடும்..."

"தேங்க்யூ வில்லியம்... சொன்னமாதிரி லண்டன் வந்து சேரவும், முன்னேற்றமா ஒரு தகவல் தந்து எனக்கு நிம்மதியை உருவாக்கியிருக்கீங்க..."

"கவலையே படாதீங்க. திரும்பும்போது ஏர்போர்ட்ல உங்க மகளும் உங்க மருமகனும் ஐ மீன், ஜோதிஷங்கரும் கட்டாயம் உங்களை வரவேற்பாங்க..."

"உங்களத்தான் நம்பியிருக்கேன். வெச்சுடட்டுமா?"

"உம்!"

-மயில்வாகனம் ரிசீவரை முடக்குகிறார். டாலரில் பில் தொகை வருகிறது. கிட்டத்தட்ட 60 டாலர். ஓ மை காட்! டிராவலர்ஸ் செக்குகள் கிழிபட்டு கைமாறு கின்றன. லண்டன் குளிர் மூச்சுக்காற்றில் பனிக்கூட்டம் காட்டுகிறது. புஸ்..புஸ்...

திரும்பும்போது ஒட்டி உரசியபடி ஒரு காதல் ஜோடி! மயில்வாகனம் பயணிக்கும் அதே டீலக்ஸ் கேபினில் அவருக்கு முன் சீட்டில் அமர்ந்துவரும் ஜோடிகள். அவர் பார்க்க, படு பிரிஸ்க்காக இருந்த வர்கள் இப்பொழுது தள்ளாடியபடி அவரைக் கடந்து கிருஷ்ணதேவராயாரை நோக்கி நடக்கிறார்கள். என்ன வாயிற்று.

# 13

**'அந்த சதுரங்கத்தில் தோல்விகள் வெற்றி களாவதில்லை... ஆனால் காதல் சதுரங்கம் தோல்விகளையும் வெற்றியாக்கும்!'**

மயில் வாகனத்தின் பார்வை அந்த ஜோடிகள் மேல் பதியும்போது அவர்கள் இருவரும் பக்கமாய் உள்ள வயலட் நிற நாற்காலியில் போய் உட்காருகிறார்கள்.

கண் பார்வையில் செருகல்.

நடுவில் விமான காபினில் இருந்து அழைப்பு.

"பயணிகளை 'தேவராய்' திரும்ப உள் அழைக் கிறது. அடுத்த பதினைந்தாவது நிமிடத்தில் விமானம் மேலெழும்பும்"

அழைப்பைக் கேட்டுவிட்டு எழுந்திருக்கிறார் மயில் வாகனம். ஆனால் அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் சரித்து விழுகிறார்கள்.

- சற்று நெஞ்சைக் கடிக்கிறது அந்த சம்பவம்.

அதைப் பார்த்துக் கொண்டு தாண்டிச் செல்ல மனம் வர மறுக்கிறது.

"ஹலோ..." நெருங்கிச் சென்று குரலால் அவர் களைத் தொட்டும் பலனில்லை. கைளாலேயே தோளைத் தொட்டு உசுப்பிப் பார்க்கிறார்.

சரிந்து விழுகின்றனர்.

தூக்கியடிக்கிறது.

"மைகாட்... அடுத்த நொடி விமான நிலைய கன்ட்ரோலரில் இருந்து சீஃப் எக்ஸிக்யூடிவ்கள் வரை



ஸ்பாட்டுக்கு பறந்துவர, அவர்கள் இறந்து விட்டது உறுதிப்படுகிறது.

இறந்து கிடக்கும் அவர்களின் சட்டைப் பாக் கெட்டில் ஒரு கடிதம்.

"நாங்கள் காதலித்தோம். ஆனால் ஒன்று சேர முடியவில்லை. மரணத்திலாவது ஒன்று சேரலாம் என்று தீர்மானித்துத்தான் இந்த முடிவை எடுத்துள்ளோம். நியூயார்க்கில் எங்கள் பெற்றோர்க்ள காத்திருப்பார்கள். எங்கள் உடலை அவர்களிடம் ஒப்படைத்து விடவும். இந்த சிரமத்திற்கு எங்களை மன்னிக்கவும். உங்களுக்கு மனமிருந்தால் விமானப் பயணிகளிடமும் முடிந்தால் இந்த உலகத்திடமும், காதலை வாழ வைக்கச் சொல்லுங் கள்.

அன்புடன்

ஜான்சன், ஐஸ்வர்யா."

கடிதத்தைப் படிக்கும் ஏர்போர்ட் மெடிகல் ஆபீசர் அதை ரவுண்டில் விடுகிறார்.

மயில்வாகனம் பொட்டுப் பொட்டான வியர்வை யோடு பார்த்தபடியே நின்று கொண்டிருக்கிறார்.



கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேர தாமதத்திற்குப் பிறகு 'கிருஷ்ண தேவராயா' - ஹீத்ருவிமான ஓடு தளத்தில் ஓட ஆரம்பிக்கிறது. உள்ளே பயணிகளிடம், கிட்டத்தட்ட உறைந்தாற் போன்ற ஒரு நிலை.

மயில்வாகனம் கைகட்டியபடி இறுக்கமாக யோசனையில்...

"இப்படி ஒரு முடிவை வேணுவும் அனுவும் எடுத்து விட்டால்?" - முகத்தருகே மண்டும் புகையாட்டம் கேள்வி மண்டி அவரைக் குடைந்து கொண்டே இருக்கிறது.

"அப்படி ஆக வாய்ப்பில்லை' - என்று சமாதானத் தையும் சந்தனாட்டம் எடுத்து பூசிக் கொள்கிறது.

இந்தக் குழப்பங்களோடேயே தேவராயா வானம் எகிறுகிறது. 40,000 அடி சொச்சம் உயரப் போய் நீந்தத் தொடங்குகிறது. இறந்து போன அந்த இருவரின் சடலமும் ஏகப்பட்ட என்கொயரி மற்றும் தீர்மானங் களுக்குப்பிறகு பேக்கேஜ் செக்ஷனில் கிடத்தப்பட் டிருப்பதை, பக்கத்து சீட்காரரர் மெல்ல முணுமுணுக் கிறார்.

"முட்டாள்கள்..முட்டாள்கள்..அப்ரய்ட் ஸ்டுப்பிட்ஸ்..." என்று கை அசைக்கிறார்.

"இந்தியாவுலதான் காதலுக்கு எதிர்ப்புன்னா, நியூயார்க்கலையுமா... என்ன உலகம் இது?"

"அமெரிக்கான்னா அவுத்து விட்டுடுவாங்கன்னு நினைச்சீங்களா? எல்லா சனியனும் இங்கேயும் உண்டு!"

"எதிர்த்துப் போராட வேண்டாமா... இப்படியா கதையை முடிச்சிக்கறது?"

"அதுக்கும் ஒரு இடமில்லையா என்ன... நாமல் லாம் போற பிளேன் தானா கிடைச்சது? 'சாவிடா' ஒன்றரை மணி நேரம் காலி."

- மெல்ல அபிப்ராயங்கள் காதில் விழத்தொடங்கு கின்றன.

மயில்வாகனம் மனதின் மேல் விழுந்து அவரை பாரமாக்குகின்றன நியூயார்க் பே .ன நொடிப்போதில்



வில்லியமைப் பிடிக்கவேண்டும். 'பாத்துடா மகனே... ஜாக்ரதையாக ஸ்டெப் எடு. இல்லாவிட்டால் விட்டு விடு.' என்று சொல்லிவிட வேண்டும்."

●●●

சைக்கிளை ஓரம் கட்டிவிட்டு ஸ்லிப்பரையும் உதறித் தள்ளி விட்டு உள்ளே நுழைகிறான் வேணு. முகத்தில் அத்தனை சுரத்தில்லை.

எலிப்பொறிக்குள் வடைவைத்தபடி அவனைப் பார்க்கிறார் நரசிங்கம் மாமா.

கடை திறந்து கிடக்கிறது. முகப்பில் யாருமில்லை. படுதா தொங்கிக் கொண்டிருக்கிறது.

"என்ன வேணு... இவ்வளவு லேட்டு?" லகுவாக பேச்சை ஆரம்பிக்கிறார்.

"யூனியன் லீடராயிட்டேன்ல. இனி லேட்டாகத் தான் செய்யும் மாமா..."

"சந்தோஷமான விஷயம்... சாதாரணமா சொல்றியேப்பா..."

"நிரந்தர தலைவர் இல்ல மாமா... ஆறு மாச தலைவர். நினைச்சுக் கூட பார்க்கலை."

"அரை மணிநேரம் தலைவரா இருந்தாலும் தலைவர் தலைவர் தானே? ஆமா? அது என்ன ஆறு மாசக் கணக்கு?"

எல்லாம் தெரிந்தும் தெரியாத மாதிரி கேட்டுக் கொண்டே எலிப் பொறியை வெல்ல மூட்டையை ஒட்டி, எலி ஓடி வரும் பாதையில் வைக்கிறார்.

"சொல்றேன் மாமா... உங்களோட உட்கார்ந்து மனசு விட்டுப்பேசணும்னுதான் நினைக்கறேன். முடியவே மாட்டேங்குது."

அவர் உடனே அவனை கூர்மையாகப் பார்க்கிறார்.

"என்ன மாமா அப்படிப் பாக்கறீங்க?"

"இல்ல. நீயா இப்படிப் பேசறேன்னு பாக்கறேன்."

"நான்னா... நான் என்ன பெரிய இவனா!"

"என்ன வேணு... உன்னையே உனக்குத் தெரியலியா. உனக்கு என்ன குழப்பம்?'

"சொல்றேன் மாமா... சொல்றேன்...' - அவன் கொடியில் தொங்கும் துண்டை எடுத்துக் கொண்டு கொல்லைப் புறம் செல்கிறான்.

ஒரு பதினைந்து நிமிட இடைவெளிக்குப் பிறகு கழுவிக்கொண்ட முகமும், கழுத்துத் துண்டுமாய் கொல்லையில் இருந்து வருகிறான். நரசிங்கம், கடை முகப்பில் யாருக்கோ 'பயோரியா பற்பொடி' கொடுத்துவிட்டு சில்லறையை வாங்கிப் போட்டபடி திரும்புகிறார்.

"என்னப்பா பேசலாமா?" - அவன் ஆமோதிப்பாக கடைக்குள் நுழைந்து அஞ்சறைப் பெட்டி பலகைமேல் உட்கார்ந்து கொண்டு நரசிங்கத்தை ஏறிடுகிறான்.

"ரொம்பதான் குழம்பியிருக்கே..."

"ஆமாம் மாமா. என்ன பண்றதுன்னே தெரியல."

"விஷயத்தச் சொல்லு. உன் முதலாளி மக ஏதாவது எடுத்தெறிஞ்சு பேசிடுச்சா?"

"மாமா."



"பதறாமப் பேசு. நீ சொல்லாட்டியும் உன் சமாச்சாரங்க காதுல விழுந்துகிட்டுதான் இருக்கு."

"அனு ரொம்ப நல்லவ மாமா. என்னை ரொம்ப காதலிக்கறா, ரொம்பன்னா எப்படிச் சொல்றது, கடலளவு - ஆகாசமளவு - ஊஹூம் அதுக்கும் மேல..."

"சரி... மேல சொல்லு."

"அவ காதலிக்கற அளவு நான் தகுதியான நபரான்னு தான் ஒரே குழப்பமா இருக்கு."

"உனக்கா தாழ்வு மனப்பான்மை?"

"இது தாழ்வு மனப்பான்மையில்ல மாமா. கொஞ்சம் உண்மை. கொஞ்சம் பயம். கொஞ்சம் அதிர்ஷ்டம்னு எல்லாம் கலந்து குழப்பற சமாச்சாரம்."

"அவ காதலிக்கறா. நீயும் காதலிக்கறே இல்லையா?"

"ஆமா. ஆனா ஒத்து வருமான்னுதான் யோசிக்க றேன்."

"எது?"

"அவளால என் கூட வந்து இங்க குடித்தனம் பண்ண முடியுமா?"

"ஆகாசமளவு நேசிக்கறவளுக்கு இதெல்லாம் விஷயமாப்பா."

"சரி மாமா; அவளால முடியுதுன்னே வெச்சுப் போம். ஒரு ராணி மாதிரி உள்ள பொண்ணை வேலைக் காரி மாதிரி ஆக்கி, இங்க முடக்கிப் போட்றது சரியா மாமா."

"இப்ப இதுதான் உன் குழப்பமா?"

"இல்ல மாமா. நான் நிச்சயம் ஒருநாள் அவளைப் போலவே பெரிய பணக்காரன் ஆயிடுவேன். அதுல எனக்குச் சந்தேகமில்லை. அதுவரைக்கும் அவ என்கூட இங்க நமக்கு சரியாத்தானே இருந்தாகணும்...'

"நான் ஒண்ணு கேட்டா நீ ஒண்ணு சொல்றியேப்பா. ஆமா; நீ கம்யூனிஸ்ட்டா, சோஷலிஸ்டா, கேபிடலிஸ்ட்டா?"

"கம்யூனிஸ்ட்."

"கம்யூனிஸ்ட்டுங்கறே... கேபிலிஸ்டாவேன்கறே... நீ யார்? முதல்ல அதை முடிவு பண்ணு."

"மாமா..."

"சும்மா மாமா மாமாங்காதே. காலைல கேட்டப்போ காதலிக்கவே இல்லை, எல்லாம் பொய்யுன்னே ஞாபகம் இருக்குதா?"

"அது வந்து..."

"சரி சரி; நீ யார்... அதைத் தெளிவா சொல்லு..."

"நான்... நான்... கம்யூனிஸ்ட்."

"மண்ணாங்கட்டி. எந்த கம்யூனிஸ்டும் முதலாளிகளையோ அவங்க மக்களையோ நேசிக்கமாட்டான். ஞாபகம் வெச்சுக்கோ மீறி நேசித்தாலும் அவங்களும் தன்னைப் போல கம்யூனிஸ்ட்டாகணும்னு விரும்புவான். அவங்களுக்காக தன்னை முதலாளியாக்கிக்க விரும்பமாட்டான்."

"......"

"என்ன வேணு பேச்சக் காணோம்? காதல் உன்னை ரொம்பதான் குழப்பி இருக்கு. ரொம்ப தெளிவான பையன். நீ இப்படியா மாறிப் போவே...?"



"என்ன பண்ணட்டும் மாமா?'

"தப்பா எடுத்துக்காதேப்பா. உன்னைக் குழப்பற ஒரு விஷயம் உனக்கெதுக்கு?"

"புரியுது மாமா. அதனாலதான் நான் அனு இப்பல்லாம் காதலா பேசினாலும் கரையாம, திடமா இருக்கேன். அவளுக்கு பிடிக்காதமாதிரி நடந்துக்கறேன்."

"இது அதைவிட பெரிய தப்பு."

"தப்பா?"

"ஆமாம். உன் குழப்பத்துக்கு அந்த பெண் என்ன பண்ணுவா? அவ காதல் என்ன பண்ணணும்?"

"சரி மாமா; நான் என்ன பண்ணட்டும். உங்க ஆலோசனை என்ன?"

"கம்யூனிச சிந்தனைக்கு மூட்டை கட்டு. கடுமையா உழைச்சு முன்னுக்கு வரப்பார். அந்தப் பெண்ணையும் கை விட்டுடாதே. நல்ல வாழ்க்கைங்கறது பங்களா கார்ல இல்லை. புரிஞ்சுகிட்டு வாழற வாழ்க்கைலதான் இருக்கு."

- அவன் அடுத்தநொடி பிரகாசமாகிறான்.

"சரி மாமா; அப்படியே நடந்துக்கறேன். இப்பதான் மனசுக்குக் கொஞ்சம் இதமா இருக்கு..." என்று பலகையை விட்டு எழுந்திருக்கிறான்.

"அந்த பெண்ணை கொஞ்சம் கூட்டிகிட்டு வாயேன் பார்க்கறேன்." - நரசிங்கம் தன் ஆசையைத் தெரிவிக்கிறார்.

"நிச்சயம் மாமா... நிச்சயமா!"



தர்மாஸ் கம்ப்யூட்டர் பாய்ன்ட்!

கிட்டத்தட்ட பதினைந்து நாள் தாடியோடு ஜோதி ஷங்கர் ஏ.சி. அறை என்கிற லஜ்ஜைகூட இல்லாதபடி புகைவிட்டுக் கொண்டிருக்கிறான்.

இனிமேல் வாழ்க்கையில் தனக்கென்று எதுவுமே யில்லை என்கிற தீர்மானத்தை அடைந்தவன் போல் அவன் இருப்பதை ஆபீஸே புரிந்து கொண்டு விட்டிருக் கிறது. அவன் முன்பு அவர்களுக்கெல்லாம் பாஸ் இப் பொழுது தாஸ். தேவதாஸ்!

எல்லோரும் அப்படித்தான் சொல்லி அழைக்கி றார்கள். குசுகுசுவென்று கூடிக் கூடிப் பேசுகிறார்கள். முன்பு ஒரு இறுக்கம் இருக்கும். பயம் இருக்கும். எல்லாம் விட்டுப்போய் விட்டுது இப்போது

இதில் சிலருக்கு சந்தோஷம். சிலருக்கு வருத்தம். வருத்தப்படுபவர்களில் சுந்தரமும், ஒருவர். முப்பது வருட அனுபவசாலி. ஜோதி ஷங்கருக்கும் அவரிடம் மிகுந்த மரியாதை உண்டு. அதைப் பயன்படுத்திக் கொண்டு சுந்தரம் ஜோதிஷங்கரிடம் தன் வருத்தத்தைத் தெரிவித்து விடும் முடிவுக்கு வருகிறார்.

அவன் எதிரில் போய் நிற்கிறார்.

"நமஸ்காரம் தம்பி."

"வாங்க சார். என்ன விஷயம்?"

"இதென்ன கோலம்?"

"இதைப் பத்தி பேசத்தான் வந்தீங்களா?"

"ஆபீஸே ரொம்ப மாறிப்போச்சு. எல்லாத்துக்கும் உங்க மாற்றம்தான் காரணம்."



"என்ன பண்ணட்டும்... வராம இருந்துடட்டுமா?"

"தப்பு தம்பி... உலகத்துல எது மேலையும் அதிகப் பற்றுதல் வைக்கக்கூடாது. வெச்சாலே அது ஆபத்து தான். அதுலையும் காதல் இருக்கே, அது சரியான கரையான் தேக்கு மனசையும் அரிச்சிடும்."

"உண்மைதான். அந்த அரிப்புல இருந்துதான் என்னால விடுபட முடியல சார்."

"ரொம்ப சுலபம் தம்பி. இதுக்கா இத்தனை கவலை?"

"ரொம்ப சுலபமா?"

"ஆமா... ரொம்ப சுலபம்."

"உளறாதீங்க சார்."

"உளறலை. நான் சொல்றதக் கேட்டுட்டு அப்புறம் சொல்லுங்களேன்."

"என்ன?" - அவன் கேள்வியோடு அவருக்குள் ஊன்ற, அவர் வாயைத் திறக்கிறார்.

# 14

*'தாயம் உருட்டலானான். அங்கே சகுனி வென்றுவிட்டான்!'*

சுந்தரம் சொல்லப் போவதை கூர்மையாக கவ னிக்கத் தொடங்குகிறான் ஜோதி.

"பொதுவுல அன்பைத்தானே காதல்ங்கறாங்க?" - அவர் கேட்கிறார்.

“ஆமாம்.”

“அப்ப நாம யாருமேலல்லாம் அன்பு செலுத்தறமோ அவங்களை எல்லாம் காதலிக்கறோம்னு தானே அர்த்தம்?”

“இது...”

“என்ன இது... அப்படித்தானே தம்பி...?”

“இல்ல... அப்படிப் பார்த்தா அம்மா அப்பா அக்காவை எல்லாம் எப்படிக் காதலிக்க முடியும்...?”

“அப்ப காதல்ங்கறது அன்பானதில்லையா?”

“அன்பானதுதான். கூடவே அது தனிப்பட்ட ஒருத்தருக்கான அன்பு... எப்படிச் சொல்வேன் இதை...?”

- ஜோதி கைகளைப் பிசைந்து கொள்கிறான்.

“இப்படிச் சொல்லலாமா... மற்ற அன்புல காமம் கிடையாது. இதுல அது இருக்குன்னு...”

அவர் வளைக்கிறார்.

“கிட்டத்தட்ட....” அவனிடம் மெலிந்த குரலில் ஒப்புதல்.

“அப்ப உங்களுக்கு அந்தப் பெண் பேர்ல செக்ஸ் கண்ணோட்டமும் இருக்கு... அப்படித்தானே?”

அவனது மௌனம் ஆமாம் என்கிறது.

“தப்புல்ல... அதுல ஒண்ணும் தப்புல்ல. ஆமா. உங்களுக்கு அந்தப் பெண்கிட்ட பிடிச்சது செக்ஸா இல்ல அவ கேரக்டரா?”

அவர் அவனது காதலை உருட்டிப் பிசைந்து ஒரு வடிவப் படுத்தப் பார்ப்பதை அவனால் புரிந்து கொள்ள முடிகிறது. மௌனத்தைத் தொடர்கிறான்.



“என்ன தம்பி பதிலைக் காணோம்?”

“இதுக்கு எத சார் பதிலா சொல்ல... இரண்டும் தான்...”

“இருக்க முடியாது தம்பி.” அவர் அழுத்தம் திருத்தமாக மறுக்கிறார்.

“இருக்க முடியாதா?”

“ஆமாம்... ஒரு பொண்ணைப் பாக்கறோம் - பார்த்த உடனே ஆசைப்பட்றோம்னா அது அவகிட்ட பார்த்த சரீரத்துக்குத் தானே?”

“நான் மறுக்கலையே...”

“அது எப்படி மறுக்க முடியும்? அதானே உண்மை... ஆனா கேரக்டரைப் புரிஞ்சுகிட்டேன்னு சொன்னதைத் தான் மறுக்கறேன்.”

“புரிஞ்சுகிட்டவன் நான்...”

“இருக்கலாம்... எனக்கு கல்யாணம் ஆகி முப்பது வருஷமாச்சு. ஆனா நான் இன்னும் என் மனைவியையோ, என் மனைவி என்னையோ இன்னும் முழுசா புரிஞ்சுக்கவேயில்லை. முப்பது வருஷமா சேர்ந்து வாழ்ந்தே எங்களால முடியாதத ஒரு முப்பது நாப்பது சந்திப்புல உங்களுக்கு முடிஞ்சதுங்கறதை என்னால ஏத்துக்க முடியாது...”

“அப்படின்னா?”

“எல்லார் காதலும் இனக்கவர்ச்சிங்கற செக்ஸ்ல தான் உருவாகுது, செக்ஸ்ங்கறது ஒரு இளம்பிராயத்துப் பசி. ரொம்ப தற்காலிகமான ஒரு உணர்ச்சி. ஆனா வாழ்க்கை அப்படியில்லை அது பல்வேறு உணர்வுகளால் ஆனது. அதுல செக்ஸ் பசி ஒரு கட்டம்

வரைக்கும் தான், ஆனா கேரக்டர் பசி சாகற வரைக்கும் தொடரக் கூடிய ஒண்ணு. அந்த பசிக்கு இரை போட்ற பெண் வாய்ச்சாதான் குடும்பம் சிறப்பா இருக்கும்."

"என் வசந்தா அப்படிப்பட்டவதான்.,'

"இருக்கலாம் மறுக்கலை. ஆனா எப்ப, எந்த பெண்ணோட சேர, கால நேரங்கள் ஒத்துவல்லையோ அப்ப இயற்கையோட போராடாம மனசை மாத்திக்கறதுதான் புத்திசாலித்தனம்.

கவலைப்பட்றதால எந்த பிரச்சினையும் தீர்ந்துடாது. அறிவுதான் யோசிச்சு தீர்க்கும் நல்ல கேரக்டர் உள்ள அந்த பெண்கிட்ட உங்க காதலை அன்பா மாத்திக்குங்க... காமத்தை விலக்கிடுங்க இல்ல அதுதான் வேணும்னா இந்த நாட்டுல அதை மட்டும் தர ஆயிரம் பெண்கள் விபச்சாரிகள் உண்டு..."

சுந்தரம் சொல்வதைக் கேட்டு விருட்டென்று நிமிர்கிறான். கோபம் கண்களில் பரவிச் சுடுகிறது.

"என்னை விபசாரிகிட்ட போகச் சொல்றீங்களா... அப்படி ஒண்ணும் சதைப் பசி எடுத்து அலையல நான்..."

"அப்படின்னா வசந்தாகிட்ட இருக்கற காதலை அன்பா மாத்திக்க எந்த தடையும் இல்லை. இப்பப் புரியுதா நான் எந்த அர்த்தத்துல சுலபமம்னு சொன்னேன்னு...' - அவர் அவனை மடக்கிப் பிடிக்கிறார். தொடரவும் செய்கிறார்.

"பெரிய கம்பெனியோட பொறுப்புல இருக்கீங்க. சின்னதப்பு செஞ்சாலும் அது எங்க எல்லாரையும் பாதிக்கும், அப்ப உணர்ச்சிகளால தாடி வளர்க்கறவன் ரொம்ப சராசரி மனுஷன். பொறுப்பா நடந்துக்குங்க.



நான் வரேன்..." அவர் பேசித் திரும்ப எதிரில் தர்மராஜன். முகத்தில் சற்று சலனத்தோடு...

"சார் நீங்க எப்ப...?"

"நீங்க விளக்கமா எல்லாத்தையும் சொல்லும் போதே வந்துட்டேன். ரொம்ப தேங்க்ஸ் சுந்தரம். அருமையான விளக்கங்கள், இதைக் கேட்டும் இவன் மாறலைன்னா அப்புறம் இந்தக் கம்பெனியை ஆண்டவன்தான் காப்பாத்தணும்.."

- அவர் சுந்தரத்தைப் பாராட்டும் சாக்கில் ஜோதியையும் ஒரு இடி இடிக்கிறார்.

- சுந்தரம் கஷ்டப்பட்டு சிரித்துக் கொண்டு நகருகிறார். தர்மராஜன் ஜோதி எதிரில் உள்ள ஆசனத்தில் போய் அமருகிறார். பார்வை அவனைப் பிராண்டுகிறது. அவன் அதை தாளாதபடி தலையை தாழ்த்திக் கொள்கிறான்.

"இப்படி தலையை தாழ்த்திக்கிட்டா எப்படி?"

"என்ன பண்ணச் சொல்றீங்க?"

"அந்தப் பொண்ணு தேவலைடா. சட்டுன்னு மனசை மாத்திகிட்டா. இப்ப என்ன என் ஜோதி என்னை விட்டு பிரியவா செய்துட்டாரு.. அண்ணனாவே எனக்குக் கிடைச்சுட்டாரு. எங்க அன்புக்கு எந்தப் பங்கமும் வரலை... அந்த மட்டுமல சந்தோஷம்'னு சொல்லி அவ அத்தை பையனை கட்டிக்க சம்மதிச் சுட்டா. ஆனா நீ தான் போட்டு அலட்டிக்கிறே..."

- அதறாமல் பதறாமல் வசந்தா பற்றி ஒரு பொய்யைச் சொல்ல ஜோதி ஊசி ஏறியது போல பாதிக்கப்பட்டு நிமிர்ந்து பார்க்கிறான்.

"என்ன நம்ப முடியலையா? அந்தப் பொண்ணையே கூப்ட்டு சொல்லச் சொல்லட்டுமா?"

"வேண்டாம்... வேண்டாம்.." - ஜோதி பதறுகிறான்.

"ஏன் வேண்டாங்கறே?"

"எனக்கு அவளைப் பாக்கற தைரியமில்ல. அவ சொல்றத கேட்டுக்க சக்தியுமில்லை..."

"அப்ப என்னதான் பண்ணப் போறே?"

"உங்க இஷ்டம்..."

"என் இஷ்டம். அதே முகூர்த்தத்துல நீ உன் மாமன் மகன் அனுவை கல்யாணம் பண்ணிக்கறதுதான்...?'

"...."

"சரின்னு வாயத்திறந்து சொல்லுடா."

"சரி..." - சொல்லிவிட்டு மேஜை மேல் கை வைத்து தலை சரிகிறான். முதுகுப் பாகம் தூக்கித் தூக்கி அடிப்பதில் அவன் தாங்க மாட்டாது அழுகிறான் என்பது தெரிகிறது.

தர்மராஜன் கண்களில் அதைப் பார்க்க ஒரு குரூர சந்தோஷம்!



யூனியன் ஆபீஸ்...

ஒரு வேறுபட்ட மனிதனாட்டம் தலைவர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான் வேணு. நரசிங்கம் சொன்ன 'கம்யூனிசத்தை விடு' என்னும் வார்த்தைகள் நெருடிக் கொண்டே இருக்கின்றன. வேலை ஓடமாட்டேன் என்கிறது. செகரட்டரி ஜோசப்



பார்த்துக் கொண்டே இருக்கிறான். மெல்ல எழுந்து அருகில் வந்து அமர்கிறான்.

"என்ன வேணு... ஏன் ஒரு மாதிரியா இருக்கே?"

"ஒண்ணுமில்ல..."

"அப்ப நிறைய இருக்கு..." - அந்த பதில் வேணுவைக் குத்துகிறது.

"ரொம்ப மாறிட்டேப்பா... நிஜமாலுமே காதலுக்கு பயங்கர சக்திதான்..."

- வேணு ஒரு சிலிர்போடு நிமிர்கிறான். அப்படி நிமிர்ந்த பார்வையில் குடையும் கேள்விகள்.

"என்ன வேணு அப்படி பாக்கறே... நான் ஒண்ணும் தப்பா சொல்லிடலை. தலைவர் ஞானிசிகாமணி போய் நீ தலைவரா வரப்போறேன்னு சொன்னப்போ ரொம்ப சந்தோஷப்பட்டேன். பலர் என்னை ஏத்தி விட்டாங்க... 'ஏய் ஜோசப் நீ இருக்கும்போது அன்னபோஸ்ட்டா அவன் எப்படி வரலாம்'னுல்லாம் என்கிட்ட கேட்டாங்க. நான் அதுக்கெல்லாம் பிடி கொடுக்கல ஏன் தெரியுமா?"

- சற்று இடைவெளி விடுகிறான் ஜோசப். அந்த இடைவெளியும் மௌனமும் பெரிய பாரமாய் வேணுவை அழுத்துகிறது.

"ஏன்னும் நானே சொல்லிட்றேன். நாளைக்கு நீ முதலாளியம்மாவைக் கட்டிகிட்டு இந்த கம்பெனிக்கே முதலாளியாகப் போறே... அப்படிப்பட்ட நீ இந்த பொறுப்புக்கு வந்தா நிச்சயம் நம்முடைய பல நாள் கோரிக்கைகளை சொல்லாமலே புரிஞ்சு நிறைவேத்து வேன்னு நம்பினேன்.

நல்ல இணக்கம் மேனேஜ்மெண்ட்டோட வரும்னும் நம்பினேன். ஆனா உன் சிந்தனை வேறு மாதிரியா தெரியுது. வந்து உக்காந்த உடனேயே மேனேஜ்மென் டோட சண்டை போடற மாதிரி பேசறே. நடந்துக்கறே... அதெல்லாம் ரொம்ப செயற்கையா தெரியுது.

"நான் அடிக்கிற மாதிரி அடிக்கறேன். நீ அழுற மாதிரி அழுங்கற மாதிரி தோணுது. மொத்தத்துல கம்யூனிச வேணு காதலால விலை போயிட்ட மாதிரி தான் படுது."

- ஜோசப் நிறுத்தி நிதானமாக போட்ட சூடு வேணுவை குத்தீட்டியாகக் குத்துகிறது.

ஏற்கனவே குழப்பம். இதில் இவன் வேறு எண்ணெய் ஊற்றுகிறான். இவனுக்கு எதை பதிலாக சொல்வது... தப்புத் தப்பாக புரிந்து கொள்பவன்தான் செகரட்ரியா?

"சாரி ஜோசப்... நான் உனக்கு பதில் சொல்லப் பிரியப் படலை. வெரி சாரி. நீ போகலாம்..." - கசங்கிப் போய் பேசுகிறான். ஜோசப் அதைக் கேட்டு சிரிக்கிறான். ஆனால் போகவில்லை.

"போகலாம்னேன்ல..."

"எங்க?"

"எங்கையாவது?"

"அது எப்படி போக முடியும். நான் செகரட்டரி பொறுப்புல உள்ளவன்..."

"பெரிய பொறுப்பு. புரிஞ்சுக்காம பேசறதுக்குப் பேர்தான் பொறுப்பு?"

"நான் எதை புரிஞ்சுக்கலை - கொஞ்சம் விளக்கமா சொல்லேன்.



"என்னை நீ எங்கே புரிஞ்சுகிட்டிருக்கே... எல்லாமே தப்புதான், என் கோபதாபங்களை நடிப்புன்னுட்டியே...'

"அப்படித் தெரியறதால சொன்னேன். நேத்து எதுக்கு மேடம் போன் பண்ணப்போ அப்படி நடந்து கிட்டே என்ன அவசியம்?"

"அது என் பர்சனல் மேட்டர்..."

"உன் காதல்தான் பர்சனல். இங்க நீ தலைவர். இங்கதான் அவங்க போன் பண்ணாங்க. அதுவும் ஒரு சம்பிரதாய வாழ்த்துச் சொல்லத்தான். அதுலயே என்னமோ நீ பெரிய மிஸ்டர் க்ளீனாட்டம் வேஷம் போட்டே... புத்திசாலியா இருந்திருந்தா நேத்தே ரெண்டு கோரிக்கையை முன்னால் வெச்சு ஓ.கே. வாங்கியிருக்க லாம்...

உனக்கு அதெல்லாம் நோக்கமில்ல... எதையும் செய்துடக்கூடாது. காதல் வேற - கடமை வேறன்னு நீ நினைக்கறதா எல்லாரும் நினைக்கணும். ஆஹா என்ன ஒரு சுயமரியாதைன்னு உன்னைப் பார்த்து எல்லாரும் நினைக்கணும்னு பேசி வெச்சுகிட்டு வேஷம் போட்டே நீ... ஆனா லேபர்ஸ் ஒண்ணும் இளிச்சவாயங்க இல்ல.."

-ஜோசப் ஆழமாகவே உழுகிறான். அது வேணுவை அனலாக்குகிறது.

"ஜோசப் போதும் நிறுத்து... இனி நான் ஒரு நிமிஷம் நீ பேசறத அனுமதிக்கமாட்டேன். உன் பேச்சு அவ்வள வும் அபத்தம்."

"அப்படின்னா கோரிக்கைகளை நிறைவேற்றித் தந்து அது அபத்தம்னு நிரூபி..."

"இது பிளாக்மெயில்..."

"எது பிளாக்மெயில். நீ என்ன தெருவுல போறவனா? எங்க தலைவர்ப்பா... உன்கிட்ட கேட்காம யார்கிட்ட கேட்போம். நீ செய்யாம யார் செய்வா?"

"செய்யறேன்... அதுக்கு முறை இருக்குல்ல. நேரம் காலம் இருக்குல்ல..."

"இதான்... இதேதான்... இந்த சந்துபொந்துதான் நீ தப்பிக்கிற இடம்."

"அப்படின்னா அனுவைப் பார்த்து எல்லாத்தையும் நிறைவேத்துன்னு கால்ல விழச் சொல்றியா?"

"அவங்க முதலாளி, நீ தலைவர். நமக்கு காரியம் நடக்கணும். கால்ல விழுந்தா நடக்கும்னா விழறதுல தப்பு என்ன?'

"விழறேன்... நூறு தடவை விழறேன். ஆனா நடக்கலைன்னா...?"

"எப்படி நடக்காமப் போகும்?"

"இதுக்கு முந்தி தலைவர் ஞானசிகாமணியும்தான் கால்ல விழுந்தார்... நடந்துடிச்சா....?"

"அவருக்கெல்லாம் இல்லாத ஒரு விசேஷ பலம் உன்கிட்ட இருக்கே! அதை பயன்படுத்து..."

"என் காதலைச் சொல்றியா... நோ - மாட்டேன் யூனியன்... மேட்டர்ல காதலை நுழைக்க மாட்டேன்..."

"இங்கதான் எங்களுக்கு சந்தேகம்."

"என்ன?"

"கம்பெனி உன்னை திட்டம் போட்டு இந்த இடத்துக்கு வர வெச்சுதோன்னு..."

"நான்சென்ஸ்... என்ன உளர்றே?"



"உளறலைப்பா... உடம்பு சரியில்லை - ஆபரேஷன் அது இதுன்னு பொறுப்பை தட்டிக் கழிச்ச பழைய தலைவர் ஞானசிகாமணி மதுரை பாண்டியன் ஹோட்டல்ல உக்காந்துகிட்டு தண்ணி அடிச்சிகிட்டு இருக்கார். பேங்க்ல ரெண்டு லட்ச ரூபாய்க்கு கம்பெனி செக்கைப் போட்டு பணமும் வாங்கியிருக்கார். பேங்க்ல இருக்கற கேஷியர் என் நண்பன். என்னை பார்த்து விஷயத்த கக்கிட்டான்.

எல்லாத்தையும் கூட்டிக்கழிச்சா நீ இங்க நடந்துக்கறத பார்த்தா சந்தேகப்படாம எப்படி இருக்க முடியும்?'

- ஜோசப் பேச்சில் சாதுர்யமாக வலை விரிக்க, அதில் தடுமாறியபடி விழத் தொடங்குகிறான் வேணு.

அவனுக்கு தலை சுற்றத் தொடங்குகிறது!

# 15

*கல்பாக்கத்து மின்சாரம் கூட ஒரு நாள் தீர்ந்துபோகும். காதல்பாக்கத்து மின்சாரம் எந்த நாளும் தீராது!"*

**த**லை சுற்றலோடு தடுமாற்றமும் தவிப்பும் பெருகி வழிகிறது.

"ஜோசப், நீ சொல்றதெல்லாம் எனக்கு ஆச்சரியமா இருக்கு. நிஜமா சொல்றேன். இதெல்லாம் எனக்கு இப்ப நீ சொல்லித்தான் தெரியும்." என்று வேணு நிமிர முயல்கிறான்.

"நோ... நான் நம்பமாட்டேன். இதெல்லாம் மேனேஜ்மென்ட் சதி. இதுல உனக்கு நிச்சயமா பங்கு இருக்கு. தலைவரை விலைக்கு வாங்கி அவரை அனுப்பிட்டு உள்ள உன்ன சாமர்த்தியமா நுழைச்சிருக்காங்க.

"உன் வேலையே யூனியனை ஸ்பாயில் பண்றது தான். தொழிலாளிக்கு நல்லது பண்றது கிடையாது..."

- ஜோசப் விடாமல் ஸ்க்ரூ செய்கிறான்.

"இல்ல... இல்ல... உளறாதே ஜோசப். எந்த நாளும் நான் யூனியனுக்குத் துரோகம் செய்யமாட்டேன். என்னால அது முடியாது. நான் மூனு ஷிப்ட் பாக்கற ஒரு லேபர். அணு அணுவா கஷ்டத்த உணர்ந்திருக்கற லேபர்.

லட்ச லட்சமா கொட்டிக் கொடுத்தாலும் நான் அந்தத் தப்ப பண்ணமாட்டேன்."

"நீ எவ்வளவுதான் வார்த்தைல சொன்னாலும் நான் நம்பமாட்டேன். பதினைஞ்சு வருஷமா நிறைவேறாத ஒரு கோரிக்கை ஒண்ணு இருக்கு. அதை நிறைவேத்தித்தா. நம்பறேன்."

"என்ன கோரிக்கை அது?"

"ஏன் உனக்குத் தெரியாதா?"

"எவ்வளவோ இருக்கு. அதுல எது?"

"ஒண்ணே ஒண்ணு. VRS- னு வாலன்டியர் ரிடயர்மெண்ட் ஸ்கீம். ஒரு தொழிலாளி பதினைஞ்சு வருஷத்துக்கு மேல உள்ள சர்வீஸ்ல எப்ப தன் வேலையை ரிசைன் பண்ணினாலும் அவங்களுக்கு கம்பெனி காம்பன்சேஷனா இரண்டு லட்சம் தரணும்னு ஒரு கோரிக்கை வெச்சிருக்கோமே அது..."



"VRS காம்பன்சேஷன் கிடையாது. யாரும் ரிசைன் பண்ண வேண்டாம்கறதுதானே கம்பெனி பாலிசி..."

"அதை நீ மாத்து வேணு... எவ்வளவோ பேர் வேலை பாக்க முடியாம வியாதியாலயும், கடன் தொல்லையாலையும் நொடிச்சுப் போய்கிடக்கறாங்க.

காம்பன்சேஷன் கிடைச்சா அந்த வியாதிக்காரன் வெளிய போவான். அந்த இடத்துக்கு ஒரு இளைஞன் வேலைக்கு வருவான். இரட்டை லாபம் இல்லியா?"

"இதுக்கு நிர்வாகம் சம்மதிக்கணுமே?"

"நீ மனசு வெச்சா முடியும்..."

"முயற்சிக்கறேன்."

"இது வழக்கமான வார்த்தை. முடிச்சுக் காட்றேன்னு சொல்."

- ஜோசப் வேணுவின் முகத்துக்கு நேரே கண்களை இடுக்கிக் கொண்டு பேசுகிறான்.

வேணுவுக்கு அந்தக் கண்களைத் தோண்டி விடலாம் போல் தோன்றுகிறது. அடக்கிக் கொள்கிறான்.

"டேய் இதுவும் கூட ஒரு பிளாக்மெயில் தாண்டா." சொல்லிக் கத்த வேண்டும் போல் இருக்கிறது. முடியவில்லை. நடுவில் அட்டெண்டர் தலை நீட்டுகிறான்.

"சார்... அம்மா உங்களை ரூமுக்குக் கூப்பிட்டாங்க."

"போ... வருவார்னு சொல்," - ஜோசப் அவனுக்கு பதில் சொல்லி அனுப்புகிறான். இது வேணுவின் கோபத்தை மேலும் கூட்டுகிறது. கன்னக் கதுப்பில் சிகப்பு சேர்கிறது.

"கோபப்பட்றே வேணு... நல்லா தெரியுது. நான் சொன்ன எதுவும் என் கருத்து கிடையாது. உள்ள எல்லாரும் பேசிக்கறதத்தான் நான் சொன்னேன்."

எப்படியாவது VRS - ஐ கேட்டு வாங்கிடு. உன் மேல இருக்கற சந்தேகம் எல்லாருக்கும் தீர்ந்துடும். இல்லேன்னா..."

- ஜோசப் முடிக்கும் விதத்தில் பயங்கர கடுரம்!

●●●

சின்சியராக ஃபைல் பார்த்துக் கொண்டிருக்கிறாள் அனு. உள்ளே நுழைகிறான் வேணு.

"குட்மார்னிங் மேடம்..." - அவனிடம் சம்பிரதாய மான துவக்கம்.

"வெரிகுட்மார்னிங்... உட்காருங்க." அவளும் அதே பாவனையைத் தொடருகிறாள். அவனை அது என்னவோ செய்கிறது. தயங்கியபடி அமருகிறான்.

அவள் அவனை நிமிர்ந்துகூட பார்க்காதபடிக்கு ஃபைலில் மிகக் கவனமாய் இருக்கிறாள். நடுநடுவே ஓரக் கண்ணால் அவனைப் பார்த்துவிட்டு குனிந்தபடி சிரித்துக் கொள்கிறாள்.

நிமிடங்கள் கடக்கத் தொடங்க, அவன் மெல்ல பொறுமை இழக்க ஆரம்பிக்கிறான்.

"எதுக்கு வரச் சொன்னீங்க?" செருமலோடு கேட் கிறான்.

"உம்... கட்டிப்பிடிச்சு காதல் பண்ண...." அவள் மிக அலட்சியமாக பதில் சொல்கிறாள். அவனை அது குத்துகிறது.

"அனு... வார்த்தையை அளந்து பேசு..." -



வார்த்தைகள் கோபத்துடன் வெடிக்கின்றன.

அவள் நிமிர்கிறாள். சிரிக்கிறாள்.

"நான் ஜெயிச்சுட்டேன்..." என்கிறாள்.

"ஜெயிச்சுட்டியா?"

"ஆமாம். அது என்ன மேடம்... வார்த்தைக்கு வார்த்தை மேடம் மேடம்... அனுன்னு கூப்பிட வைக்கத்தான் அப்படிச் சொன்னேன்."

"இது ஆபீஸ். நீ எம்.டி.. நான் யூனியன் லீடர்."

"அதனால என்ன...?"

"நான் இப்படி இருக்கும் போதே வெளியே எப்படி பேசிக்கறாங்க தெரியுமா?"

"பின்னால பேசறவங்களப்பத்தி இவ்வளவு கவலைப்படறீங்களே... ரொம்ப ஆச்சரியமா இருக்கு..."

"கவலைப்பட வேண்டியதுக்கு பட்டுத்தான் தீரணும். உனக்கு லேபர் பத்தித் தெரியாது. எஸ்.எஸ்.எல்.சி, கூடத் தேறமுடியாதவன் லேபர் ஆறான். சிகரெட், பொடி சீட்டு இதெல்லாம் அவன் பழக்கவழக்கம். அறம் பேசறது வம்பு வளக்கறது இதெல்லாம் அவன் குணாதிசயங்கள்..."

"ஆமா... இப்ப என்ன ஆயிடிச்சுன்னு இத்தனை வியாக்யானம், ஏன் இத்தனை டென்ஷன்?"

"டென்ஷன்தான் அனு... உங்க அப்பா ரொம்ப தான் சதிவேலை செய்துருக்காரு..."

"சதி வேலையா?"

"ஆமாம். ரிசைன் பண்ணிட்டு வெளிய போக இருந்த என்னை உள்ளேயே மடக்கிப் போட யூனியன் தலைவரையே விலைக்கு வாங்கிட்டாரு..."

"நிஜமாவா... எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"நான் சொல்றது சத்யம். எப்படித் தெரியும்கறது இங்க விஷயமில்ல."

"சரி! அதுக்கென்ன வேணு... அப்பா அது வேணா லும் செய்வார்ங்கறதுதான் தெரிஞ்ச விஷயமாச்சே..."

"இருக்கலாம். ஆனா நான் இப்ப ரொம்ப குழப்பத்துல இருக்கேன். யூனியன் செகரட்டரி என்னை பிளாக்மெயில் பண்றான்."

"எதைக்கேட்டு?"

"VRS சேங்ஷன் ஆகணுமாம்."

"யூமீன் வாலன்டியர் ரிடயர்மென்ட்..."

"ஆமாம்... காம்பன்சேஷனோட...."

"கொடுத்துட்டாப் போச்சு..."

"சாதாரணமா சொல்றீயே... நாளைக்கே கொடுக்க றேன்னு சொல்லிப்பாரு: தொழிற்சாலைல பாதிப்பேர் எழுதிக் கொடுத்துட்டு வெளிய போயிடுவாங்க."

"ரொம்ப நல்லதாப் போச்சு... புது இளைஞர் களுக்கு வாய்ப்புத் தருவோம்."

"வாய்ப்புத் தரலாம். ஆனா அவன் வேலை பழகி நாம புரொடக்ஷனை இப்ப இருக்கற நிலைக்குக் கொண்டு வர்றதுக்குள்ள உயிர் போயிடும். அதுமட்டு மில்ல... இந்தத் தேக்க நிலைல போட்டிக் கம்பெனிங்க பயங்கரமா வளர்ந்துடுவாங்க."

வேணுவின் பேச்சை கேட்டு அதிசயிக்கிறாள் அனு.

"என்ன அனு அப்படிப் பாக்கறே?"



"இல்ல... நீங்க எப்ப இருந்து மேனேஜ்மெண்ட் வியூவுக்கு மாறினீங்க?"

"ஏன் தப்பா?"

"நிச்சயமா... உங்களை நான் காதலிச்சதே கம் யூனிஸ்டுங்கற காரணத்துக்காகத்தான்..."

"வேண்டாம் அனு... கம்யூனிஸ்ட். மார்க்ஸிஸ்ட் எல்லாம் சும்மா... கேபிடலிசம்தான் சரி. கம்பெனி நல்லபடி இருந்தாத்தான் எல்லார்க்கும் சம்பளம் தந்து காப்பாத்த முடியும். கேபிடலிசத்துல சில குறைகள் இருந்தாலும் அதுதான் பல பேருக்குச் சோறு போடுது. கம்யூனிசத்துல எல்லாம் இருக்கற மாதிரி இருக்கு. ஆனா அதால எதையும் பண்ண முடியல. சோவியத் ரஷ்யாவே துண்டு துண்டாயிடுச்சு. பாக்கலை நீ...?"

"வேணு என்ன இது பேத்தல்! யூனியன்ல பயங்கரமா சாதிக்கப் போறிங்கன்னு நினைச்சேன். இப்படியா மாறுவீங்க..."

"அனு நீ புரியாம பேசறே... தயவு செய்து நான் சொல்றதக் கேள் உங்கப்பா என்னை யூனியன்ல மாட்டி விட்டதே நீ நினைக்கற மாதிரி நான் நடந்துக்குவேன்னு தான். ஆனா நான் அவர் நினைக்கற மாதிரி நடந்துக்க மாட்டேன்..."

"அப்படின்னா...?"

"யார் என்ன சொன்னாலும் சரி... இனியும் இவங்க ளுக்காக எதையும் நான் செய்யப் போறதில்லை. அது மட்டுமில்ல. யூனியன்ல இருந்து இன்னும் என்னென்ன பிளாக்மெயில் பண்ணப் போறாங்கன்னு பார்க்கப் போறேன். எதுக்கும் அசைஞ்சு கொடுக்கப் போற தில்லை..."

"வேண்டாம் வேணு... அப்பாவை நான் பாத்துக்கறேன். நீங்க இதுதான் சந்தர்ப்பம்னு கோரிக்கைகளை நிறைவேற்றுங்க... நான் ஒத்துழைக்கறேன்."

"அது கோரிக்கை இல்ல. பிளாக் மெயில்"

"ஏதோ ஒண்ணு... பலன் அடையப் போறவன் தொழிலாளி. அவன் நம்மை வாழ்த்தட்டும்..."

"புரியாமப் பேசாதே. VRS ங்கிறது கம்பெனிக்கு வைக்கற வேட்டு, கூடாரமே காலியாயிடும்."

"அப்படி ஆகாதபடி பாத்துப்போம். சீனியர்களை நான் பேசி, போகவிடாதபடி பண்றேன்."

"அதுக்குக் கொடுக்க மாட்டேன்னு சொல்லிட்டு போயிடு..."

"உங்க பேர் கெட்டுப் போகுமே..."

"என் பேர் கெட்டா கவலையில்லை... கம்பெனி கெட்டுப் போகக்கூடாது. அதான் எனக்கு முக்கியம். நான் வரேன்."

- அழுத்தமாகப் பேசிவிட்டுக் கிளம்புகிறான்.

"நில்லுங்க..." அவள் தடுக்கப் பார்த்தும் பலனில்லை!



டி.வி.எஸ் 50ல் வந்து இறங்குகிறார் மாணிக்கம். புதிய வண்டி பளபளக்கிறது.

- கடை முகப்பில் கல்லா அருகே உட்கார்ந்தபடியே இறங்கி வரும் தம்பியைப் பார்க்கிறார் நரசிங்கம்,

"என்னப்பா வண்டி புதுசா இருக்கு?"



"ஆமாண்ணே... நாலு இடம் அலைய கொள்ள இப்பல்லாம் இதானே தோதா இருக்கு..."

"ஏன் சைக்கிளும் தோதான வாகனம் தானே?"

- நரசிங்கம் எதற்காக மடக்குகிறார் என்பது மாணிக்கத்துக்குப் புரிகிறது. தலைதாழ்ந்து போகிறது.

"அந்த ஆள் கொடுத்த பணத்துல இன்னும் என்னல்லாம் வாங்கியிருக்கே?"

- மாணிக்கம் மிடறு விழுங்கியபடி நிமிர்ந்து "அண்ணே..." என்று இழுக்கிறார்.

"என்ன அண்ணே... நான் ஒண்ணும் பண்றதுக்கில்ல... வேணு முடியாதுன்னுட்டான்..."

வார்த்தைகள் துபபாக்கிக் குண்டாய் வெளிவந்து விழுகின்றன.

"அண்ணே நிஜமாவா?" மாணிக்கம் பதறுகிறார்.

"உன்கிட்ட எதுக்கு நான் பொய் சொல்லணும். அவனை அவன் முதலாளி மகள் காதலிக்கறது நிஜம். உன் பொண்ணுதான் நல்லபடி வாழ முடியாதபடி செய்துட்டே. இவனாவது நல்லபடி வாழட்டும் விட்று..."

- நரசிங்கம் பேசப்பேச மாணிக்கத்துக்கு நெஞ்சைக் கரிக்கிறது. அப்படியே கைகளில் பிடித்துக் கொண்டு பக்கமாய் மரபெஞ்சில் சாய்கிறார்.

"என்னடா பண்ணுது. நடிக்கிறியா என்கிட்ட?"

"இல்லண்ணே... நெஞ்சை வ..." வார்த்தைகள் முழுவதுமாக வராமல் மயக்கம் வந்து கவ்வுகிறது.

# 16

"தப்பில்லை தாயம் போடு... வெற்றி பெற வேண்டுமென்றால் உன்னையே வைத்து ஆடு'

**மா**ணிக்கத்தின் அந்தத் திடீர் நெஞ்சுவலி நரசிங்கத்தை அலறவிடுகிறது.

"மாணிக்கம்... மாணிக்கம் என்னாச்சுடா!"

கேட்டுக்கொண்டு இருக்கும்போதே மாணிக்கம் மயக்கத்தை எட்டிப்பார்க்கிறார். சுருண்டு விழுகிறார்.

நல்லவேளை! கச்சிதமாக உள் நுழைகிறான் வேணு.

"என்ன மாமா ஆச்சு...?" - என்று ஓடிவந்து பக்கம் அமர்ந்து மடியைத் தருகிறான். நரசிங்கம் இதை கொஞ்சம் கூட எதிர்பார்த்திருக்கவில்லை. தடுமாறுகிறார்.

"மாமா என்ன நினைக்கிறீங்க... போய் ஒரு ஆட்டோ கூட்டிகிட்டு வாங்க." - அவன் அலற, தடுமாற்றமுடன் வெளியே தாவுகிறார்.

●●●

**ஆ**ஸ்பத்திரி. இன்டென்சிவ் கேரில் ஆக்சிஜன் குழாய் சுவாசமுடன் மாணிக்கம். வெளியே எல்லோரும் கூடிவிட்டார்கள். குறிப்பாக வசந்தா; வரவேண்டுமே என்று ஆஸ்பத்திரிக்கு வந்த மாதிரி இருக்கிறாள். அந்த இளமைத் துள்ளல், பவுடர்வாசம், முன்மார்பில் வந்து விழும் கூந்தல் ஓரப்பார்வை - எல்லாமே காணாது போய் விட்டது. காரிடார் மரபெஞ்சில் ஒரு சிலை போல



அமர்ந்திருக்கிறாள். நரசிங்கம் மெல்ல அவளை நெருங்கி அமர்கிறார்.

"அம்மாடி..."

அவனிடம் நிமிறல்.

"தெரியும்மா... எல்லாம் கேள்விப் பட்டேன் இப் படியே எத்தனை நாளைக்கு இருக்கப்போறே?"

"அப்பாக்கு எப்படி இருக்கு, மாமா?"

"நான் உன்னை ஒண்ணு கேட்டா. நீஎன்னை வேற ஒண்ணு கேக்கறியேம்மா... உன் அப்பாவுக்கு உன்னைப் பத்திதான் கவலையே..."

"வேண்டாம் மாமா... என் விஷயம் பத்திப் பேசா தீங்க. அதை நினைச்சாலே..." கண்ணீர் உருளுகிறது அவள் கன்னக்கதுப்பில்.

"இப்படி இருந்தல்லாம் நினைப்பை ஜெயிக்க முடியாதும்மா. ஆமா, உனக்கு வேணுவைப் பிடிச் சிருக்கா?"

"எதுக்கு கேக்கறீங்க?"

"பதிலச் சொல்லு..."

"வேணு அத்தான் தங்கம்; அவருக்கென்ன?"

"பேசாம கல்யாணம் பண்ணிக்கையேன்."

"மாமா..."

"கத்தாதே... உனக்குக் கல்யாணம்னு ண்ணு ஆனா தான் நீ மாற முடியும். உனக்கு வேணு... வேணுவுக்கு நீங்கறதுதான் பிறந்தப்பவே செய்த முடிவாச்சே?"

"எனக்குக் கல்யாணமே வேண்டாம் மாமா."

"உளறாதே... உன் அப்பன் பொழைக்கணும்னா இது நடக்கணும்..."

"நான் செத்துடுவேனே மாமா..."

"அதெல்லாம் ஒண்ணும் ஆகாது. சினிமா வசனம் பேசாதே. சரின்னு சொல்... மத்ததை நான் பாத்துக்கறேன்."

- வசந்தா மௌனமாய் கண்ணீர் சேர்க்கிறாள்.

அவர் எழுந்திருக்கிறார். சற்றுத் தள்ளி புடவை முந்தியை வாயில் புதைத்தபடி இருக்கும் வள்ளியை நெருங்குகிறார்.

"கவலைப்படாதேம்மா... அவனுக்கும் ஒண்ணுமில்லை. என்ன பண்ணினா மாணிக்கம், எழுந்திருப்பானோ அதைப் பண்ண ஆரம்பிச்சுட்டேன். வசந்தா வேணுவைக் கட்டிக்க சம்மதிச்சுட்டா, வேணுகிட்டதான் பேசணும்."

- வள்ளி அந்த நிலையிலும் அவரை, சற்று பிரகாசத்துடன் பார்த்து கை கூப்புகிறாள்.

"ஆமா வேணு எங்க?"

"மெடிகல்ஷாப்புக்கு மருந்து வாங்கப்போயிருக்கு..."

"நல்லது... இன்னிக்கு வேலைக்குப் போறேன்னு சொன்னா போகவிடாதே..."

அவள் தலையசைக்கிறாள். அப்பொழுது மாராப்புச் சேலை சற்று நெகிழ்கிறது. பொத்தென்று ஒரு பாட்டில் கீழே விழுகிறது. நரசிங்கம் குனிந்து அதை எடுக்க முனைகிறார். வள்ளி தடுக்கிறாள். அதிக படபடப்பு தடுமாற்றமுடன் அவள் அதை எடுக்க முயல, இறுதியில் நரசிங்கம் கைகள்தான் ஜெயிக்கின்றன.



பாட்டிலைப் பார்க்கிறார். பூச்சி மருந்து! பகீர் என்கிறது.

"என்ன இது?" - பார்வை அகண்டு போக, குரல் உடைபட நரசிங்கம் கேட்டதில் அவளிடமும் விடைப்பு.

பக்கமாய் ஒரு அறை. அதனுள் எழுந்து ஓடுகிறாள். நரசிங்கம் பின் தொடர்கிறார்.

"என்னம்மா இதெல்லாம்?" நெருங்கிச் சென்று பாட்டிலைக் காட்டிக் கேட்க, அவள் கண்களில் சரசர வென்று கண்ணீர்.

"அவர் பிழைக்கமாட்டார். ரொம்ப கஷ்டம் அப்படி இப்படின்னாங்க... அவர் போனப்பறம் நான் மட்டும் உயிரோட இருந்து என்ன பண்ணப் போறேன் அதான்." விம்முகிறாள் வள்ளி.

"அடிப்பாவி... யார் உனக்கு இப்படி எல்லாம் சொன்னது? அப்படியே கஷ்டம்னா, நீயும் போயிட்டா. உன் பொண்ணு யார் கிட்ட போவா? அவளும் உங்களை மாதிரி தற்கொலை பண்ணிக்க வேண்டியது தானா?"

"அவளை விட்டுட்டுப் போவேனா... அவளுக்கும் சேர்த்துத்தான்!"

நரசிங்கத்துக்கு தன் நெஞ்சை யானை மிதித்த மாதிரி இருக்கிறது. பேச்சை வரவில்லை.

"அவர் பொழச்சிடுவார்தானே...?" இடைவெட்டுகிறாள் வள்ளி.

இவளுக்கு என்ன பதிலைச் சொல்ல...? கோபமும் குழப்பமும் அவரைப் போட்டுப் புரட்டுகிறது.

"மாமா... அத்த... இங்கயா இருக்கீங்க. உங்கள எங்கல்லாம் தேடறது..." கையில் மாத்திரை மருந்துடன் அங்கே பிரவேசிக்கிறான் வேணு.

"ஏய்யா என்ன வேணும்?"

"வெளிய பாருங்க, யாரோ வந்துருக்காங்க. அத்த உங்க சிஸ்டராம்ல...?"

- அவன் சொல்லச் சொல்ல வள்ளிக்குத் தூக்கி வாரிப் போடுகிறது. முகத்தை அவசர அவசரமாகத் துடைத்த படி அங்கிருந்து கிளம்புகிறாள். நரசிங்கமும் வேணுவும் பின் தொடர்கின்றனர்.

ஆஸ்பத்திரி ரிசப்ஷனில் தர்மராஜும், ராஜேஸ்வரியும் கூடை நிறைய ஹார்லிக்ஸ், பழம் என்று நின்று கொண்டிருக்கின்றனர்.

வள்ளி வரவும் ராஜேஸ்வரி ஓடி வருகிறாள். அப்படியே மார்போடு கட்டிக் கொள்கிறாள்.

"வள்ளி என்னம்மா இதெல்லாம்?"

"நான் என்னத்தச் சொல்வேன்... எப்படிக்கா சொல்வேன்..." வள்ளியும் மார்பில் சாய்ந்து அழத் தொடங்குகிறாள்.

வேணுவிற்கு எல்லாமே புதிராக இருக்கிறது, நரசிங்கம் காதைக் கடிக்கிறான்.

"என்ன மாமா இதெல்லாம்...! இவங்கதான் நம்ம அத்தையோட ஓடிப்போன அக்காவா?"

"ஆமாம்..." நரசிங்கம் அந்த பொய்யைச் சொல்வதற்குள் உயிரைச் சுடுகிறது அவர் வாழ்ந்த வாழ்க்கையின் நெறிமுறைகள்.



"ஆமா; மாமா நல்ல திடமான ஆளாச்சே... அவருக்கு எப்படி ஹார்ட் அட்டாக்?"

வேணு தர்மசங்கடமான கேள்விகளையே அடுத்தடுத்து கேட்கிறான்.

"எல்லாம் தலை எழுத்துடா. தலை எழுத்து..."

"வசந்தாகூட என்னத்தையோ தொலைச்ச மாதிரி இருக்கா..."

"ஆ... ஆமாம். ஆமாம். நான்கூட கேட்டேன். ஒண்ணுமில்ல. அப்பாக்கு இப்படி ஆனதுதான் காரணம் கறா. நீ போய் மருந்தைக் கொடுத்துட்டு வா... நான் உனக்கு விலாவரியா சொல்றேன்.

"மாமா... நான் ஆபீசுக்குப் போகணும். நேரமாச்சு. நீங்கதான் எல்லாரும் இருக்கீங்களே...?"

"இன்னிக்கு லீவு போடு வேணு..."

"முடியாது மாமா. முக்கியமான வேலை இருக்கு..."

"டேய்... இங்கே உசுரே போக இருக்கு. உன் வேலை தானா பெரிசு. போடா, போய் வசந்தா கிட்ட பேசிக்கிட்டிரு. எனக்கு ஒரு முக்கிய வேலை இருக்கு. முடிச்சிகிட்டு வந்துட்றேன்..."

- நரசிங்கம் அவனைக் கட்டிப் போட்டுவிட்டு அங்கிருந்து கிளம்புபவர், கொஞ்ச தூரம் சென்ற பிறகு திரும்பி வருகிறார்.

"என்ன மாமா...?"

"உன் விவகாரம் எந்த மட்டுல இருக்கு...?"

"என் விவகாரம்... ஓ... நீங்க அனு விஷயத்தைக் கேக்கறீங்களா?"

"ஆமாம்."

"இங்க ஒரு விதத்துல குழப்பம்னா, அங்க வேற விதத்துல! அதை விடுங்க... அதை நான் சமாளிச்சிடுவேன்."

"அப்படியா?" - கேள்வியோடு தன் சின்னதாடியை நீவியபடி கிளம்புகிறார். போகும் வழியில் செருக்குடன் தர்மராஜ். வாயில் பைப்!

புகை பிடிக்கும் இடமா இது... பிடிக்க மனம்தான் வருமா? நெருங்கிச் சென்று கன்னத்தில் அறைய வேண்டும் போல் இருக்கிறது. வள்ளியும், ராஜேஸ்வரியும் இன்னும் அழுகையை நிறுத்தவில்லை. செயற்கை மனிதர்கள்.

நரசிங்கத்துக்கு நெஞ்சில் நரநரக்கிறது. விலை பேசின பணக்காரன்... விலை போய்விட்ட ஏழை.. குழம்பிக் கிடைக்கும் பெண்... இந்தக் கலாட்டாவில் உயிரையேவிட்டு விடத் துடிக்கும் ஒருவன்.

மூக்கின் வழியாக ஆக்சிஜன் பாயும் மாணிக்கத்தை இன்டென்சிவ் கேரில் போட்டு வைத்துக் கொண்டு ஆஸ்பத்திரியும் தன் பங்குக்கு மிரட்டுகிறது.

"இந்த அத்தனை சிக்கலுக்கும் ஒரே ஒரு விஷயம் தான் காரணம் அதுதான் காதல்!

பாழாய்ப் போன காதல்...

'நாசமாய்ப் போனகாதல்...'

- நரசிங்கம் சபித்தபடியே நடக்கிறார். சரி... இனியும் போகும் போக்கில் போகமுடியாது. போனால் எல்லாமே போய்விடும். எதையா வது செய்து இந்தக் குடும்பத்தை நிமிர்த்தி அமர்த்த வேண்டும்.



என்ன செய்யலாம்?

நினைவில் பளிச்சிடுகிறாள் அனு!

●●●

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழையும் நரசிங்கத்தைப் பார்த்து கைகூப்புகிறாள் அனு.

"வாங்க... உக்காருங்க..."

"என்னைத் தெரியுமாம்மா உனக்கு..."

"வேணு சொல்லியிருக்கார். சொல்லியிருந்தா நானே உங்களைப் பார்க்க வந்திருப்பேனே...?"

"தெரியும்மா... இருந்தாலும் யாசகம் கேட்கறவன் வந்து பாக்கறதுதானே முறை..."

"உக்காருங்க முதல்ல... என்ன யாசகம்?"

- நரசிங்கம் லேசாய் பொடி வைத்ததில் அனுவிடம் தடுமாற்றம் தெரிகிறது. நரசிங்கமும் அமர்ந்தபடியே அவளை ஆழமாக ஏறிடுகிறார். அந்தப் பார்வை அவளை என்னவோ செய்கிறது.

"ஏன் அப்படிப் பாக்கறீங்க?"

"ஏம்மா பாக்கக் கூடாதா...? லட்சணமா மகா லட்சுமியாட்டம் இருக்கே... அதான் பாத்தேன்.' - அவரிடம் அந்த பாராட்டு வெட்கத்தை உருவாக்குகிறது.

நரசிங்கம் அவளைப் பார்த்ததைப் போலவே அவள் அமர்ந்திருக்கும் அந்த அறை, சுவர், அலங்காரம் என்று சகலத்தையும் பார்க்கிறார்.

"என்ன சாப்பிடறீங்க?" - ஊடே அனுவின் குரல் நுழைகிறது.

"இருக்கட்டும்மா-ஆமா; நீதான் இப்ப நிர்வாகத்தைப் பாத்துக்கறியா?"

"ஆமாம்... அது சரி; ஏதோ யாசகம்னும் சொன் னீங்களே...' - அனு தன் பின்னாத கூந்தலை ஒதுக்கிக் கொண்டு சற்று நேர்வசாக அவரை ஊடுருவவும், அவர் தலை தாழ்ந்து போகிறது.

அதுவே அவளை மேலும் டென்ஷனாக்குகிறது.

"பரவால்ல... எதுவா இருந்தாலும் கேளுங்க. என்ன விஷயம்?" உங்களுக்கு என்னால ஒண்ணு கொடுக்க முடியும்னா என்னைப் போல சந்தோஷப்படறவங்க யாரும் இருக்க முடியாது. ஏன்னா நீங்க எனக்கு மாமா... சாரி; மாமனார் மாதிரி..."

- அவள் உரிமையோடு படபடக்கிறாள்.

"ஐயோ பெண்ணை... எப்படிக் கேட்பேன்?" அவ ரிடம் திரும்பவும் தயக்கத்தின் தோற்றுதல், தடுமாற்றம்.

"நீங்க இப்படித் தடுமாறவோ தயங்கவோ அவசியமே இல்லை. ஆமா; வேணு ஏன் இன்னிக்கி ஆபீசுக்கு வரலை. எனக்கு ஒரு போன்கூட பண்ணலியே..."

- அவள் பேச்சு அவரை நிமிர்ந்து கூர்ந்து பார்க்க வைத்து, பின் இதழைப் பிரிக்க வைக்கிறது.

"அம்மாடி... காதல்னா என்னம்மா...?"

- இவரிடமிருந்து இப்படி ஒரு கேள்வியா...? தடு மாறிப் போகிறாள்.

"என்ன இது, காதலைப்பத்தி இங்க என்கிட்ட கேட்கறீங்க? காதல்னா... என்ன சொல்ல - எனக்கு சொல்லத் தெரியல... எதுக்குக் கேட்கறீங்க...?"

"நான் சொல்லவா?"



"உம்... சொல்லுங்க. தாராளமா..." அவள் நாற் காலியின் நுனிக்கு வந்து அமர்ந்து, கைகளை எல்லாம் கட்டிக்கொள்கிறாள்.

"உலகத்திலேயே தாயன்புதான் சிறந்ததுன்னு சொல்வாங்க... ஆனா அந்த அன்பையும்விட சிறந்தது ஒண்ணு இருக்க முடியும்னா அதுதாம்மா காதல்."

- அனு உடனே கைதட்டி குதூகலிக்கிறாள்.

"சபாஷ்... எக்ஸ்ஸெலன்ட் உங்க விளக்கம்!

"கைதட்டினா போதுமா-கைகொடுக்கணும்மா நீ!"

"கை கொடுக்கணுமா?"

"ஆமாம்மா... எனக்கு நீ கைகொடுக்கணும். அது தான் நான் கேக்கப் போற யாசகம்."

"ஐயோ... கொஞ்சம் புரியம்படி பேசுங்களேன்."

"பேசறேன். எனக்கு வளவளன்னுல்லாம் பேசத் தெரியாது. சுருக்கமாவே சொல்லிடறேன். என் தம்பி, அவன் மனைவி, என் தம்பி மகள் மூணு பேர் வாழ்க்கை யுமே இப்ப உன் கைலதான் இருக்கு. சின்னதுல இருந்தே என் தம்பி மகள் வசந்தாவை வேணுக்குன்னே சொல்லி வளர்த்துட்டோம். ஆனா அவனோ உன்னைக் காதலிக் கறான். நீ விட்டுக்கொடுத்தா ஒரு உயிருக்கு மூணு உயிர் பிழைக்கும்.

இல்லேன்னா மூணுபேர் சாவுலதான் உங்கவாழ்க்கை அமையும். நான் காதலுக்கு எதிரி இல்லம்மா... நீங்க ஒண்ணு சேர்ந்து வாழணும்னுதான் ஆசைப்பட்டேன். ஆனா என் தம்பி குடும்ப நிலை எல்லாத்தையும் மாத் திட்டுது. அவன் இப்ப ஆஸ்பத்திரியில சாகக்கிடக்

கிறான். இன்டென்சிவ் கேர்ல இருக்கான். வேணுவும் கூடதான் இருக்கான்.

நீ விட்டுக் கொடுத்தா ஒரு குடும்பம் வாழும். இல்லேன்னா..." - நரசிங்கம் சீட்டை விட்டு எழுந்து கை கூப்புகிறார்.

அனு சிலையாக!

# 17

*'ஆட்டம் தொடங்கிவிட்டது. ஆட முடிந்தால் ஆடு... இல்லாவிட்டால் ஓடு!'*

**ந**ரசிங்கம் பதிலை எதிர்பார்க்காதபடி அந்த அறையை விட்டுக் கிளம்பப் பார்க்கிறார்.

"நில்லுங்க சார்..." - அனு தடுக்கிறாள்.

- திரும்புகிறார்.

"என் முடிவென்னன்னு தெரிஞ்சுக்காமலே போனா எப்படி?"

அவர் இலேசாகச் சிரிக்கிறார்.

இந்தச் சிரிப்புக்கு அர்த்தம்.

"எனக்கு உன்னைத் தெரியும்மா..."

"என்ன தெரியும்?"

"நீ அடுத்தவங்களுக்குப் பாதகமா நடந்துங்க மாட்டேன்னு..."

"அதுக்காக எனக்கு நீங்க பாதகம் பண்றது சரியா?"

- அவரிடம் சன்னமான தடுமாற்றம்.



"என்ன சார் பேச மாட்டேங்கறீங்க... பதில் சொல்லுங்க..."

"உனக்கு நான் பாதகம் பண்ணலைம்மா..."

"என் காதலை விட்டுக் கொடுக்கச் சொல்றது நியாயமா? அது பாதகமில்லையா?"

"ஒரு உயிருக்கு மூணு உயிர் போய். அது மேல உங்க வாழ்க்கை அமையறது மட்டும் நியாயமா? அது பாதகம் தானே?"

"நாங்க யாரையும் சாகச் சொல்லலை. அவங்க அந்த முடிவுக்கு வந்தா நாங்க எப்படிப் பொறுப்பாக முடியும்?"

"அவங்களுக்கு வேறு வழி இல்லம்மா..."

"அந்தப் பொண்ணுக்கு வேற மாப்ள நான் பாக்கவா? அவங்க அப்பா அம்மா வாழ்க்கைக்கு எவ்வளவு வசதி வேணும். நான் செய்து தரவா?"

"இவ்வளவையும் நீ யாருக்காகம்மா செய்யத் துடிக்கறே?"

"எங்க காதலுக்காக... என் வேணுவுக்காக..."

"இதையே தாம்மா அங்க அந்தப் பொண்ணும் சொல்றா... கேக்கறா..."

'அது எப்படி ஒரு நபரை இரண்டு பேர் சொந்தம் கொண்டாட முடியும்?"

"அதனாலதான் உன்னை விட்டுக் கொடுக்கச் சொல்றேன்..."

"ஏன் அந்தப் பொண்ணு விட்டுக்கொடுக்கக் கூடாதா?"

"அதுக்கு முந்தி ஒரு கேள்வி."

"என்ன?"

"எத்தனை வருஷமா நீ வேணுவை லவ் பண்றே?"

"கிட்டத்தட்ட ஒண்ணரை வருஷமா?"

"அவ பிறந்ததுல இருந்தே அவனுக்குன்னு தீர்மானிக்கப்பட்டவ யார் இதுல சீனியர்?"

"சீனியர் ஜூனியர்ங்கறதுக்கு காதல் என்ன பண்டமா பொருளா? அது உயிர்த்துடிப்பான. ரத்தமும் சதையுமான, ஆசையும் அன்புமான ஒரு விஷயம்."

"அதனாலதாம்மா அவளால விட்டுத் தரமுடியல..."

- நரசிங்கம் சளைக்காமல் பதில் வைக்கிறார். இருந்தாலும் உள்ளூர தடுமாற்றமும், இது தப்பு என்கிற உள்ளுணர்வும் நெருடி குத்துகிறது.

அனு மேற்கொண்டு எப்படிக்கேட்பது என்று புரியாமல் தட்டுத் தடுமாறி இறுதிக் கேள்விக்கு வருகிறாள்.

"அது சரி... வேணு இதுக்கு சம்மதிச்சாரா? அவர் என்னைத்தானே லவ் பண்றாரு?"

"நீ ஒதுங்கு... அவன் தானா சம்மதிப்பான், நீ விட்டுக்கொடு... அவங்க கல்யாணம் நிச்சயம் நடக்கும். நீ உன் மனசை மாத்திக்கோ... பெரிய பாவத்துல இருந்து தப்பிப்பே.

நீயும் கல்யாணம் பண்ணிக்கோ - உன் அந்தஸ்துக்குப் பொருத்தமான இன்னொருத்தனை...!

உன் வரைல, காதலை இழந்தா மன வேதனை மட்டும்தான்... ஆனா அவ வரைல காதலை இழந்தா அது மரணவேதனை. உன் பணம் எல்லா பள்ளம் மேடு



களையும் சரி செய்துடும் ஆனா அவங்க அந்தமாதிரி எல்லாம் கிடையாது. அதனாலதான் உன்கிட்ட உதவி கேட்டு வந்தேன். யாசகம்னு சொன்னேன்.

எல்லாத்துக்கும் மேல எல்லாராலையும் தியாகம் பண்ண முடியாதும்மா. அதுக்கு ஒரு திடம் வேணும்.

அது உன்கிட்ட இருக்கு... எனக்கு தெரியும் அது. வரட்டுமா?"

- நடு நெற்றியில் சுட்டதுபோல் பேசிவிட்டு கதவைத் திறந்து கொண்டு மறைகிறார் அவர்.

அவர் பயன்படுத்திய அந்த கடைசி வார்த்தை அவளைப் புரட்டி எடுக்க ஆரம்பிக்கிறது.

●●●

**க**ண் திறக்கிறார் மாணிக்கம். அருகிலேயே நரசிங்கம்.

"நல்ல சேதிடா மாணிக்கம்..." - முதல் வார்த்தையே நரசிங்கத்திடம் அதுவாகத்தான் இருக்கிறது.

மாணிக்கம் மலங்க மலங்கப் பார்க்கிறார்.

"வசந்தா, வேணுவைக் கட்டிக்கச் சம்மதிச்சுட்டா. வேணுகிட்டதான் சம்மதம் வாங்கணும். அத இன்னிக்கு வாங்கிடுவேன்."

"நிச்சயமா...?" - இரு பற்கள் இடையே எச்சில் கோடு விழக் கேட்கிறார் மாணிக்கம்.

"சத்யமா..." - நரசிங்கம் உறுதி கேட்கிறார். அந்த உறுதி, மாணிக்கம் உடம்பில் ஊசி மருந்தாட்டம் பாய்கிறது. பரவசம் ஏற்படுகிறது.

"ரொம்ப நன்றிண்ணே..."

- அவரது நன்றிக்குப் பதிலாக கைகளை வருடி விட்டு எழுந்திருக்கிறார்.

பக்கமாய் சற்று பிரகாசமாய் வள்ளியம்மை.

"ஆமா எங்க வேணு?"

"அரை நாளாச்சும் வேலைக்குப் போறேன்னு போயிடிச்சு..."

"வேலைக்குப் போய்ட்டானா?"

"ஆமாம். சொல்லச் சொல்ல கேட்கல..."

- நரசிங்கம் முகம் மாறுகிறது. மெல்லிய கலக்கம் பரவுகிறது.

"ஏண்ணே... ஏதாவது சிக்கலா?' - வள்ளி நறுக்குகிறாள்.

"இல்லம்மா... எதுவும் இல்லை. நான் பாத்துக்கறேன். எல்லாம் சரியாயிடும். நீ கவலைப்படாதே..."

- நரசிங்கம் வெவ்வேறு கேள்விகளுக்கான பதிலைத் தொகுத்து தருவதில் இருந்தே இது ஏதோ சிக்கலான காரியம் என்பது அவளுக்குள் உணர்வாகிறது.

இடுப்பு மடிப்பைத் தொட்டுப் பார்க்கிறாள். இருக்கிறது... தூக்க மாத்திரைக் குப்பி!

●●●

பேக்டரிக்குள் நுழையும்போதே ஒரு கலகலப்பாக இருந்தது. மெயின் கேட்டிலேயே வேணுவுடன் எல்லோரும் கைகுலுக்க ஆரம்பித்து விட்டார்கள்.

"வேணு ரியலி கிரேட்பா.. பத்து தினைஞ்சு வருஷமா நடக்காததை பத்து பதினைஞ்சு நாள்ல நிறைவேத்தி வெச்சுட்டே...."



"எதை?"

"தெரியாத மாதிரி ஆழம் பாக்காதே. வி.ஆர்.எஸ். ஐந்தான் சொல்றேன். மேனேஜ்மென்ட், காம்பென் சேஷன் தர ஒத்துக்கிட்டாங்க, நோட்டீஸ் போர்ட்ல கூட போட்டாச்சு."

"நிஜமாவா?"

"என்னப்பா திரும்பத் திரும்பத் தெரியாத மாதிரி கேக்கறே. ஆனாலும் ஓவர் தன்னடக்கம் வேணு உனக்கு?"

மற்றவர்கள் பேசப்பேச வேணுவுக்கு நெஞ்சைப் பிசைகிறது.

'என்ன இந்த அனு இப்படிச் செய்துவிட்டாள்?'

வேகமாய் உள் செல்கிறான்.

எதிர்ப்படுகிறான் ஜோசப்.

"வேணு."

"என்ன?"

"நீ யோக்யன்னு நிரூபிச்சுட்டேப்பா. ஐ ஆம் சாரி. நாம் உன்னை ரொம்ப தப்பா பேசிட்டேன். பை த பை. நான் கூட ரிசைன் பண்ணப் போறேன். காம்பென் சேஷன் அமௌண்டை வெச்சு ஒரு எலெக்ட்ரிக் மெடீரியல்ஸ் கடை போடப்போறேன். அக்கடான்னு உக்காரப் போறேன்..."

- ஜோசப் பொங்கி வழிகிறான். வேணுவோ இருண்டு மருகுகிறான்.

"நீ கடை போடு. இல்ல சுடுகாட்டுக்குப் போ... என்கிட்ட ஏண்டா சொல்றே?' என்று வார்த்தைகள் வெடிக்கின்றன.

கண்களில் ரத்தம் ஊறத் தொடங்க, கதுப்புகளில் ஊர்த்துவம்.

கால்கள் அனுவைப் பார்க்க நடக்கின்றன.

அறைவாசலில் பியூன் அதிசயமாகத் தடுக்கிறான்.

"அம்மா யாரையும் விட வேண்டாம்ன்னுட் டாங்க"

"என்னையுமா?"

"உங்களைத்தான் கட்டாயமா விட வேண்டாம்ன் னாங்க..."

"அவ என்ன விளையாட்றாளா? எல்லாத்தையும் ஏட்டிக்குப் போட்டியா பண்ணிட்டு என்ன பண்றா உள்ள...?"

"மிஸ்டர் வேணு... இதுக்கு மேல ஒரு வார்த்தை பேசினாலும் செக்யூரிட்டி வரும். உங்களை வெளிய தூக்கி எறிய வேண்டிய சூழ்நிலை உருவாகும்..." பியூன் நர நரக்கிறான்.

"ஏய்... யார் கூட பேசறே தெரியுமா நீ?"

"தெரியும். தெரிஞ்சுதான் பேசறேன். வெளியே போய்யா, ஒரு தடவை சொன்னா புரியாது..." அவனது அலட்சியம் வேணுவின் கைகளைப் பற்றி அசைக்கிறது. அது அவன் முகத்தில் அசுர வேகம் காட்டுகிறது.

அடுத்த சில நொடிகளில் சுற்றிலும் அலுவலக ஊழியர் கூட்டம்.

"என்னாச்சு... என்னாச்சு வேணு? என்னய்யா சத்தம்...?"

"ஏய் என்னையா அடிக்கறே... இரு உன்னை... மேடம்..." அவன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே



செல்கிறான். அடுத்த ஐந்தாவது நொடி அனு அவனோடு வெளிப்படுகிறாள்.

"மிஸ்டர் வேணு. என்ன இது... காட்டுமிராண்டி மாதிரி ஏன் இப்படி பிஹேவ் பண்றீங்க.?"

"என்னது... காட்டுமிராண்டியா நானா?"

"நீங்கதானே இவரை அறைஞ்சுது...?"

"அவன் என்ன பேசினான் தெரியுமா?"

'அது அப்புறம். பேச்சிருக்க கை நீளலாமா...? ஃபேக்டரி ரூல்ஸ் என்ன சொல்லுது தெரியுமா?"

"அனு... என்ன நீ இவனுக்கு எதிர்க்க என்னை விட்டுக் கொடுத்துப் பேசிகிட்டு..."

"யாரா இருந்தாலும் எனக்கு முதல்ல நியாயம்... அப்புறம்தான் மத்ததெல்லாம்..."

"நியாயமா... நான் வி ஆர்எஸ்ஸை அனுமதிக் காதேன்னு சொன்னேனே... கேட்காம. என் ஒப்புதல் சம்மதம் இல்லாம நோட்டிஸ் போர்ட்ல போட்டுருக்கியே... இது மட்டும் நியாயமா?"

"என்னது... வேணு நீ வேண்டாம்னியா?" உடனேயே சுற்றி இருப்பவர்கள் சடைக்கின்றனர்.

"வேணு... போங்க. போய் வேலையப் பாருங்க. பிறகு பேசிக்கலாம்..."

அனு, விஷயம் விபரீத வசப்படுவதைப் பார்த்து கத்தரிக்கப் பார்க்கிறாள்.

"எங்க நழுவறே. எனக்கு பதில் சொல்லு. ஏன் பர்மிட் பண்ணே? அதுக்கு முதல்ல பதில் சொல்லு...

வேணு மிகுந்த ஆவேசத்துடன் அவள் முன் கத்தியபடி செல்ல, பார்ப்பவர்களுக்கே ஆச்சரியமாகிறது.

"இவர்கள் காதலர்களா, இல்லை எதிரிகளா?' கேள்வி எழுகிறது.

"என்ன சப்தம்... என்ன கலாட்டா?"

- ஊடே நுழைகிறது ஜி.எம்.குரல். கூடவே வில்லியம் என்கிற அந்தத் தலையில் பாதியை கிரிமினல் மூளை யாகக் கொண்ட மனிதன்.

"சார். என்னன்னு தெரியல. வேணு பைத்தியம் மாதிரி நடந்துக்கறார். மேடத்துகிட்ட அடிக்கற மாதிரி போறார்." - ஒருவன் ஜி. எம்மிடம் போட்டுவிட, அனுவே அதைக் கேட்டு அதிர்கிறாள்.

"ஸ்டாப் நான்சென்ஸ். வேணு பாத்தீங்களா.... எதை எங்க பேசணும்னு இல்லியா. இப்படியா விவேக மில்லாம நடந்துப்பீங்க?" - வெடிக்கிறாள்.

"அனு உனக்கு என்னாச்சு. என்னைப் புரிஞ்சுக்கோ அனு..." - வேணு கேவுகிறான்.

"சரி சரி; எல்லாத்தையும் பிறகு புரிஞ்சுக்கலாம். மிஸ்டர் வில்லியம். இவரை யூனியன் ஆபீஸ் கூட்டி கிட்டுப் போங்க. மேடம் நீங்க உள்ள போங்க..."

- ஜி. எம். கதவைத் திறந்துகொண்டு அனுவை அறைக்குள் அழைக்கிறார். அவளும் தயங்கித் தயங்கி நுழைகிறாள்.

வில்லியமின் கரங்கள் அழுத்தமாய் வேணுவின் தோள்மேல் விழுந்து கவ்விப் பிடிக்கின்றன.

"கைய எடுங்க சார்..." - தட்டி விடுகிறான் வேணு.



"அடப் போங்க சார் பெருசா..." வில்லியம் திரும்பப் பற்றுகிறான்.

"ஏய் கை வெச்சே தெரியும் சேதி... என்ன நினைச்சு கிட்டிருக்கே மனசுல... நான் யூனியன் லீடர்."

"புடலங்கா! அதான் 'வி.ஆர்.எஸ். கொடுக்காதே... எனக்கு அதுக்கு பதிலா பத்து லட்சம் கொடுத்துடு... வாய மூடிக்கறேன்'னு கேட்டியாக்கும்?"

- வில்லியம் இடம் பொருள், காலம் பார்த்து, அனு உள்ளே சென்றுவிட்டது தெரிந்து போட்ட அந்தச் செய்தி வைக்கோற் படப்புத் தீயாக கொழுந்து விட ஆரம்பிக்கிறது.

"என்னது பத்து லட்சம் லஞ்சம் கேட்டானா?"

"அட ஆமாய்யா. அது கிடைக்கலங்கற ஆத்திரம்... அதான் இப்படி காட்டான் மாதிரி கத்தறான். மேடமே வெறுத்துப் போயிட்டாங்க. இனி இவன் முகத்துலயே முழிக்க மாட்டாங்க..."

"அடக்கடவுளே இந்தக் காலத்துல யாரை நம்பற துன்னே தெரியலியே ஏண்டா நாயி - இதுக்குத்தான் யூனியன் லீடர் ஆனியா?"

உள்ளே நுழையும்போது கண் மூடித்தனமாக வாழ்த்தியவர்கள்தான் சரியாக முப்பது நிமிடம்கூட முடியவில்லை. அப்படியே மாறிப் பேசுகிறார்கள்.

'பேய் வில்லியம், தப்புத் தப்பா போட்டாவிட்றே?" எகிறி சட்டையைப் பற்றுகிறான். அதை துல்லியமாகப் பார்த்தபடி ஒருவர் போலீசுக்குப் போன் போடுகிறார்.

# 18

**'நம் இருவரிடையே மலையாக மௌனம்**
**மலையைத் தகர்க்கலாம்... மௌனத்தை?'**

**வி**ஷயம் அநியாயத்திற்கு முற்றிவிட்டது. மேனேஜ் மெண்ட்டும் தங்களது அகடவிகடங்களைக் காட்டத் தொடங்க, சீறிக் கொண்டு பிரவேசிக்கிறது போலீஸ்ஜீப்.

யூனியன் ஆபீசில் தனது சீட்டில் நிலைகுலைந்து போய் அமர்ந்திருப்பவனைச் சுற்றி தொழிலாளர் வட்டம்.

"என்னாச்சு வேணு... நல்லதானேப்பா இருந்தே?"

"மலைமாதிரி நம்பி இருந்தோமேப்பா - இப்படி ஏமாத்திட்டியே..."

"எதுவா இருந்தாலும் பிறகு யோசிக்கலாம். இப்ப எல்லாரும் விலகுங்க... விலகுங்க..."

ஒருவன் தலையாரித்தனம் செய்ய, கச்சிதமாய் வேணு முன் பிரசன்னமாகிறார் இன்ஸ்பெக்டர். நிமிர்ந்து பார்ப்பவனை "ஸ்டேஷனுக்குப்போகலாமா?" - என்று இரண்டே இரண்டு வார்த்தைகளால் வளைக்கிறார்.

"ஸ்டேஷனுக்கா... எதுக்கு?"

"அங்க வா... சொல்றேன்..."

"விளையாடறீங்களா... இங்கேயே சொல்லுங்க..."

"அடிதடி கலாட்டா... லஞ்சம் வாங்க முயற்சி, பழையயூனியன் தலைவரை மிரட்டி தற்காலிகமாக விலகச் சொன்னதுன்னு ஒரு மூட்டை இருக்கு... எதைக் கேக்கறே நீ...?"



- அவர் சொன்ன மறுநொடி வாயடைத்துப் போகிறது வேணுவிற்கு. எல்லாமே புரிந்தும் விட்டது. மேனேஜ்மென்ட் நடந்த அத்தனையையும் சதுரங்க மாக்கிவிட்டது சாமர்த்தியமாக விளையாடி அவனுக்கு செக் வைத்து விட்டது. அப்படி இப்படி அசைய முடியாது.

- எல்லா தெரிந்தும் ஏமாந்து விட்டோம்.

ஊருக்கே புத்தி சொல்லும் அறிவிருந்தும் தற் காலிகமாக துப்பட்டியில் வடிகட்டிய முட்டாள்தான் நான்...

தன்னைப் பற்றிய புதிய புரிதலோடு இன்ஸ்பெக் டரைப் பார்க்கிறான்.

"என்ன பாக்கறே... கிளம்பலாமா?"

"தாராளமா?" அவனிடம் ஒத்துழைப்பு...



**அ**னு துடித்துக் கொண்டிருந்தாள். அடக்கிக் கொண்டிருக்கிறான் வில்லியம்.

"மேடம் சொன்னாக் கேளுங்க... ஜி.எம் ரைட்டா தான் ஸ்டெப் எடுத்துருக்காரு..."

"நோ... போலீஸ்வரை போனது பெரிய தப்பு, என்கிட்ட ஏன் சொல்லலை?"

"நீங்க மறுக்கமாட்டீங்கன்னு நம்பிட்டோம்."

"எதை வெச்சு... எதை வெச்சு? வேணு யார் தெரியுமா?"

"தெரியும் மேடம்... கூடவே உங்களுக்குத் தெரியாத நிறைய விஷயங்களும் தெரியும்."

"என்ன தெரியும்? நான் வேணும்னுதான் வேணுவுக்கு எதிரா நடந்துகிட்டேன். அது தெரியுமா உங்களுக்கு?"

"நல்லாவே தெரியும்? நானும் லவ் மேரேஜ் பண்ணினவன்தான் மேடம். எனக்கா தெரியாது. ஆனா உங்களுக்குத்தான் சில விஷயங்கள் தெரியல..."

"என்ன தெரியல எனக்கு?"

"வேணு நீங்க நினைக்கற மாதிரி நல்ல மனுஷன் கிடையாது..."

"ஸ்டாப் இட். கெட் அவுட் ஆஃப் திஸ் ரூம் ஃபர்ஸ்ட் இடியட்."

"நீங்க எவ்வளவு திட்டினாலும் சரி. நான் சொல்றதுதான் உண்மை. இந்த கேசட்டைப் போட்டுக் கேளுங்க, உண்மை தெரியும் உங்களுக்கு."

"எதுவும் தேவையில்லை.... வெளிய போ நீ முதல்ல. என் வேணு பத்தி என்கிட்டையே கம்ப்ளையண்ட் பண்றியா?"

"என் ட்யூட்டியப் பண்றேன். அவர் கம்யூனிஸ்ட் மாதிரி நடிச்ச ஒரு கேபிடலிஸ்ட். எப்படி நடிச்சா நீங்க லவ் பண்ணுவீங்கன்னு தெரிஞ்சுகிட்டு உங்க அன்பைச் சம்பாதிச்சவர்தான் அவர்.

அதனாலதான் VRS லாம் கொடுக்கக் கூடாதுன்னு மேனேஜ்மென்ட் திங்கிங்கோட பேசினாரு. இன்னும் என்னல்லாம் பேசினாருங்கறதை இந்தக் கேசட்டுல கேளுங்க. தெரியும் உங்களுக்கு..."

- வில்லியம் சற்று பொய் ரோஷத்தோடு பேசி விட்டு அறையை விட்டு வெளியேறுகிறான்.



டேபிள்மேல் அவன் வைத்த கேசட். அதை அவள் கண்கள் வெறிக்கின்றன.

அதே சமயம் ஜி.எம். அறையில்...

"சார் ஒரு கால் போடுங்க அமெரிக்காக்கு. நம்ப எம்.டிக்கு சந்தோஷமா விஷயங்களை சொல்லணும், என் அசைன்மென்ட் ஓவர்னு அவர் தெரிஞ்சா சந்தோஷப் படுவார்..."

"புடலங்கா... அந்த ஜோதிஷங்கரோட கல்யாணம் நடக்கணும் மிஸ்டர் வில்லியம். அதை மறந்துடாதீங்க."

"இதைப் பாருங்க, அப்புறம் சொல்லுங்க..."

-வில்லியம் பாக்கெட்டில் இருந்து ஒரு பத்திரிகையை எடுத்துப்போட, ஜி.எம்.மின். சுருக்கம் கொண்ட கண்கள் அது நீங்கிப் புடைக்கின்றன.

"பத்திரிகை... கல்யாணப் பத்திரிகை. மாப்பிளை ஜோதிஷங்கர்! மணப்பெண் அனு! வர்ற திங்கட்கிழமை காலைல முகூர்த்தம்! மைகாட்.... என்னய்யா இது, ராக்கெட் வேகம்! அந்தப் பக்கமும் வேலை பாத்தாச்சா?"

"பாத்தாச்சாவா... எல்லாம் ஓவர் சார். இன்னிக்கு திங்கள்கிழமை. வர்ற திங்கள் முகூர்த்தம். இடைல ஏழு நாள். அதாவது 168 மணி நேரம் இருக்கு. இதுல எவ்வளவோ வேலைகள் முடிய வேண்டியிருக்கு.

என் அசைன்மென்ட்லையே சவாலான அசைன்மெண்ட் இது. நல்ல வேளை, எனக்கு மாப்ளையோட அப்பா தர்மராஜ் சார் நல்ல ஒத்துழைப்பு தர்றார்."

"எல்லாம் சரி... அனுமேடம் சம்மதிப்பாங்களா?"

"கேசட்டைக்கேட்டா போதும் சார்... அந்தப் பிரச்சினையும் தீர்ந்துடும்."

"பாவம் வில்லியம் அனுமேடம்."

"அவங்க காதலுக்கு இப்படியா ஐந்தாண்டுத் திட்டம் மாதிரி பிளான் பண்ணி குழி தோண்டுவீங்க...?"

"பரிதாபப்படறீங்களா... ஜி எம்மா நீடிக்கறதுல இஷ்டமில்லையா என்ன? நாமல்லாம் கூலிக்கு மாரடிக் கறவங்க சார். மறந்துடாதீங்க..."

"ஆமாமா... ஆமாமா ... நமக்கெதுக்கு பணக்கார பொல்லாப்பு...?"

"சரி சரி; முதல்ல போன போட்டு எம்.டி.ஐ கிளம்பி வரச் சொல்லுங்க. கல்யாண வேலை தலைக்கு மேல இருக்குல்ல..."

ஜி.எம். தொலைபேசி பட்டன்களைத் தட்ட ஆரம் பித்தார்!



நரசிங்கம்தான் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். ஜாமீன் சம்பிரதாயங்கள் முடிந்து வெளியே வரவும் எதிரில் உள்ள மரத்தடியில் வசந்தாவும் வள்ளியும் நின்று கொண் டிருந்தனர்.

அவர்களைப் பாக்கவும் அவனுக்குள் கசிவு.

"அத்த... வசந்த்... நீங்க எதுக்கு இங்க?"

"நான் சொன்னேன் கேக்கல வேணு. ஜாமீன் பணம் கூட வசந்தா நகையை வித்துக் கட்டினதுதான்!"

- நரசிங்கம் சொல்லவும் வேணுவுக்கு சிலிர்க் கிறது.

"மாமா என்ன இது... எதுக்கு நகையை எல்லாம் வித்து ஜாமீன் எடுத்தீங்க?" சற்று உதறுகிறான் அவன்.



"பின்ன என்ன லாக் அப்லேயே இருப்பியா நீ? போலீஸ்காரங்க அடிச்சே கொன்னுடுவாங்கடா..."

"கொல்லட்டுமே... செத்துட்டுப் போறேன் இனி நான் யாருக்காக வாழணும்?" - குமுறுகிறான்.

"என்ன தம்பி இப்படிப் பேசறே... வசந்தா உன்னைத் தான் நம்பி இருக்காப்பா..." வள்ளி பிணைப்பூட்டு கிறாள்.

வேணு பார்வை உடனே அவளைக் கவ்வுகிறது. அவள் தலை தாழ்கிறது. அப்பொழுது கார் ஒன்றின் ஹாரன் சப்தம். வேகமாக திரும்பி காரைப் பார்க்கிறான் ஒரு வழுக்கை மனிதர் காரில் தெரிகின்றார்.

அனுவை எதிர்பார்த்த கண்களில் அவரைப் பார்க்கவும் எரிச்சல் நரசிங்கம் புரிந்தது போல ஒரு ஆட்டோவை அழைத்து அதில் அவனை ஏற்றுகிறார். கூடவே அவர்களும்.

வசந்தா அவன் அருகில் உரசியபடி அமரும்படி யாகிறது. அந்த ஸ்பரிசம் அவனை என்னவோ செய் கிறது. ஜோதியோடு அவன் காரில் ஒட்டிக் கொண்டு போன சம்பவம் நிமிர்ந்து எழுகிறது. அவனுக்கும் அனுவோடு உரசிய நிஜம் உள்ளம் கவ்வுகிறது.

ஆட்டோ குண்டும் குழியுமான சாலையில் வீரம் காட்டுகிறது. டிரைவரை ஒட்டி அமர்ந்திருக்கும் நரசிங்கம் பின் பக்கமாகத் திரும்புகிறார்.

ஜோடிகளாக அவர்களைப் பார்க்கவும் நன்றாகத் தான் இருக்கிறது. அவரைப் போலத்தான் வள்ளி யம்மை.. ஆனாலும் கண்ணில் கலக்கம்.

"புருஷன் ஒருபக்கம் ஆஸ்பத்திரியில்.

மாப்பிள்ளையாக வரப்போகிறவனோ ஸ்டேஷனில். மகளோ குழப்பத்தில் பாதி செத்தும் மீதி சாகாமலும்...

ச்சீ... என்ன வாழ்க்கை இது!

அவளுக்குள் ஆட்டோவின் ஓட்டத்தைப் போலவே கசப்பான அனுபவங்களின் ஓட்டம்.

"என்னம்மா, மாப்ளையா வரப்போறவன் இப்படி போலீஸ் கேஸ்னு ஆயிட்டானேன்னு யோசிக்கிறியா?" - கச்சிதமாகக் கேட்கிறார் நரசிங்கம்.

"சேச்சே... அதெல்லாம் ஒண்ணுமில்ல. என் மாப்ள தங்கம்னு எனக்குத் தெரியாதா என்ன? கம்பெனிக் காரங்களுக்கு புத்தி இல்ல... கூட வேலை பாத்தவங்களுக்கும் நன்றி இல்ல. ஒரு பய வரலையே அண்ணா. அதை நினைச்சேன் அதான் மனசு பாரமாயிட்டுது."

- வள்ளி சமாளித்தாலும் நன்றாகத்தான் சமாளிக்கிறாள். நரசிங்கம் வேணுவைப் பார்க்கிறார். அவனை அவள் பேச்சு நன்றாகவே புடம் போட்டிருக்கிறது.

"இப்ப என்ன? உன் புருஷன் பட்றைல வேணுவும் களத்துல இறங்குனா முடிஞ்சிச்சு. மாணிக்கத்துக்கும் உடம்பு சரியில்ல. மாப்ளை பட்றையைப் பாத்துக்க வந்துட்டா நல்லாதானே இருக்கும்?

வேணு இனியும் அந்தக் கம்பெனி வேலைல நீடிக்காதே. ராஜினாமாவக்கூட நேரில் போய் தராதே. ரிஜிஸ்தர் தபால்ல அனுப்பு. கேஸ் பாட்டுக்கு நடக்கட்டும்.... அதை எப்படிச் சமாளிக்கணும்னு நான் சொல்லித் தர்றேன்.



இதோட நீ சரின்னு நினைச்சவங்க மூஞ்சியில நீ கரி பூசணும். புது மனுஷனா எழுந்து நிக்கணும். வர்ற திங்கக்கிழமை உனக்கும் அனுக்கும் கல்யாணம் நீ புதுசா பொறக்கப் போறநாள் அது..."

அழுத்தம் திருத்தமாக பேசிவிட்டு தலையை முன் பக்கம் திரும்பிக் கொள்கிறார் நரசிங்கம். ஆட்டோவிடம் ஒரு அசுரக் குலுக்கல்.

வசந்தா பொட்டலமாய் அவன் மடிமேல் சாய்கிறாள். பூங்கொத்துபோல இருக்கிறாள்.

வெந்து காய்ந்து சாம்பலாகி விட்ட மனதுக்கு மிக இதமாக இருக்கிறது அவளது சாய்மானம்.

ஆரம்பத்தில் மிகத் தயங்கிவிட்டு பின் சாய்ந்தவளை நிமிரவிடாதபடி அழுத்திப் பிடிக்கிறான். உள் மனத்தில் வக்கரிக்கிறான்.

'அனு... உன் பணக்கார புத்தியைக் காட்டிட்டே இல்ல. நான் செத்துட மாட்டேன். உன் எதிர்க்க உன்னைப்போலவே ஒரு முதலாளியா வடிவம் எடுத்து நான் வரலேன்னா என் பேர் வேணு இல்ல..."

வசந்தாவும் கூச்சங்களைக் கடக்கிறாள்.

'விதி இப்படி எழுதியிருக்கிறது. வேறு வழியும் தெரியவில்லை. இவனிடமாவது ஐக்கியப்படுவோம்!"

அப்பாடா!

இருவரின் புதிய இணக்கத்தைப் பார்த்து நிம்மதிப் பெருமூச்செறிகிறார் நரசிங்கம்.



அந்த ஏர்பஸ் மதுரை விமான நிலையத்தில் நீந்தி, பின் நிற்கிறது. உள்ளிருந்து இறங்குகிறார் மயில் வாகனம், வெளியில் வாடிய முகத்தோடு அனு கூடவே ஜி. எம். வில்லியம் என்கிற ஆபீஸ் படை.

வெளியில் வருபவர் மகளை ஆழமாக ஒரு பார்வை பார்த்து விட்டு, தனியாக அவளது காரில் ஏறுகிறார். அவர்கள் பின் தொடர்கின்றனர். காரும் கிளம்புகிறது. பேச்சும் ஆரம்பமாகிறது.

"என்னம்மா... அந்தப் பய பெரிய ஃப்ராடா இருந்துட்டத நினைச்சு அதிர்ந்து போய்ட்டியா?"

அவர் எடுத்த எடுப்பிலேயே விஷயத்துக்குத்தான் வருகிறார். அனுவிடம் பதிலில்லை.

"நானே இதை எதிர்பார்க்கலை. என்னாலயே நம்ப முடியலை. நல்ல வேளை கடவுள் அருள் நமக்கு இருக்கு. தப்பிச்சுட்டேன்.

இனியாவது என் பேச்சக் கேளு. பைதபை அவனோட நெஞ்சழுத்ததைப் பார்த்தியா?" - அவர் கோட் பாக்கெட்டில் இருந்து ஒரு பத்திரிகையை எடுத்து அவள் எதிரில் நீட்டுகிறார்.

"பாரும்மா.. கல்யாணப் பத்திரிகைதான். பொண்ணு அவன் மாமா பொண்ணுதான் போல...

இங்க விட்ருந்தா உன் கழுத்துலையும் தாலி கட்டியிருப்பான். ஸ்கௌன்ட்ரல்."

- கோபமாக முணுமுணுக்கிறார் அவர். குழப்பத்துடன் 'பத்திரிகையை வாங்கிப் பக்கமாய்த் தூக்கிப் போடுறாள் அதைக் கவனித்தும் கவனிக்காதவர் போல பேச்சு வளர்கிறது அவரிடம்...



"அவன் கல்யாணத்துக்கு முன்ன உன் கல்யாணம் நடக்கணும் அனு. அப்பதான் என் ஆத்திரம் அடங்கும்..."

- அவர் பேச்சு அவளுக்கு சின்ன ஒரு சிரிப்பைத் தருகிறது.

"என்னம்மா சிரிக்கிறே?"

அவள் அவரை ஊன்றிப் பார்க்கிறாள்.

"அப்படிப் பாக்காதே... நான் ஆசைப்பட்றதுல என்ன தப்பு?"

திரும்பவும் அவளிடம் ஆழமான ஊடுருவல்.

"ஏன்... ஏண்டா அப்படிப் பாக்கறே?" - அவர் தடுமாற ஆரம்பிக்கிறார்.

"டாட் எனக்கு எல்லாம் தெரியும். வேண்டாம் நடிக்காதீங்க"

"நான்... நான் நடிக்கறேனா?"

"ஆமாம். நல்லாவே நடிக்கிறீங்க. நீங்க மட்டுமில்ல... உங்களால உங்ககிட்ட வாங்கற சம்பளத்துக்காக ஆபீஸ் வேலை பாக்கவேண்டிய ஜி.எம். அப்புறமா அந்த வில்லியம் எல்லாருமே நடிக்கறாங்க.

நான் வேணுவை மறந்துட்டேன் டாட். அத்தான் ஜோதியையும் கல்யாணம் பண்ணிக்கறேன். போதும் இனியாவது இவங்களை ஆபீஸ்வேலையப் பாக்கச் சொல்லுங்க. நம்ப லைஃப்ல இழுத்து விடாதீங்க... நிஜமாதான் சொல்றேன். ஆனா ஒண்ணு..." - மயில் வாகனத்தை வார்த்தைகளால் உலுக்கிவிட்டு சஸ்பென்சில் நிறுத்துபவளை மயில் வாகனம் மிரண்டு போய்த் தான் பார்க்கிறார்.

# 19

'சதுரங்கமும் பரமபதமும் வெற்றி
களோடு வீழ்ச்சிகளையும் தருபவை.
அதோ
ஒரு பாம்பு விழுங்க வந்துவிட்டதே...'

மதுரை சாலையில் காரின் ஓட்டத்துக்கு நடுவே அனு சஸ்பென்சில் பேச்சை முடித்ததை மயில் வாகனம் தாளாமல் துடிக்கிறார்.

"என்ன அனு ஆனா... சீக்கிரம் சொல்."

"சொல்றேன்பா... வேணு மேல வெறுப்பேற்பட்டு நான் இந்த முடிவுக்கு வரலை. ஒரு சிலரோட நல்ல வாழ்க்கைக்காகத்தான் இந்த முடிவுக்கே வந்தேன். இந்த நிமிஷம் வேணு என்மேல சொல்லமுடியாத அளவு கோபத்தோடு இருக்காரு. அது எந்த நாளும் மாறக் கூடாது. அப்பதான் அவர் கல்யாணம் பண்ணிக்கப் போற பொண்ணோட அவர் சந்தோஷமா வாழ முடியும்.

ஆகையால, அவர் மேல கம்பெனி போட்ருக்கற எந்த கேஸையும் வாபஸ் வாங்காம - அதே சமயம் - அதனால வேணு துளியும் பாதிப்படையாமலும் நீங்க நடந்துக்கணும். முடியுமா?"

"அது எப்படிம்மா... வாபஸ் வாங்கினாத்தானே அவன் நல்லவிதமா நடக்க முடியும்...?"

"இல்லப்பா... வாபஸ் வாங்கினா நான் எதிர்பார்க்கற விளைவுகளை உருவாக்காது. தெரிஞ்சோ தெரியாமலோ நா விரோதியாயிட்டேன். இது தொடரட்டும். அதே சமயம், அவர் கஷ்டப்படாம இருக்க ஒரு உதவி செய்யணும்"

"என்னம்மா?"

"வேணு அவரோட மாமா பொண்ணையே கல்யாணம் பண்ணிக்கப் போறாரு. ஆகையால அவரோட மாமாவைப் பார்த்து ஒரு பத்து லட்ச ரூபாயத் தந்துட்டு வர் றீங்களா?"

"பத்து லட்சமா?"

"சரி எட்டு லட்சம்."

"பத்து லட்சமே தரேன், ஆமா! அதை அவர் மாமா வாங்கிப்பாரா?"

"நான் வாங்கிக்க வைக்கறேன்."

"இதுக்குக் காரணம் உன் காதலா... இல்ல கருணையா?"

"ரெண்டும் தான்"

"அப்ப மனச வேணுவுக்கும் உடம்பைத்தான் ஜோதிக்கும் தரப்போறியா?"

"அப்பா..."

"பதட்டப்படாதே... நான் கேட்டதுல என்ன தப்பிருக்கு."

- அவளிடம் மௌனம்.

"இதோ பாரும்மா... வாழ்க்கைங்கறது ஒரு அற்புத மான விஷயம், அனுபவிச்சு வாழத் தெரிஞ்சவங்களுக்கு அது ரொம்ப ரொம்ப அற்புதமானது! அதுல சங்கடங் களும் கவலைகளும் தவிர்க்க முடியாத காரணத்தால வரலாம். நாமே அதை விலைக்கு வாங்கக்கூடாது."

"நீங்க என்ன சொல்றீங்கப்பா...?"

"வேணுவைப் பிரியறதுன்னு முடிவு எடுத்துட்டே. இனி வேணு பற்றி நினைக்கவே கூடாது. அதுதான் உனக்கும் நல்லது வேணுவுக்கும் நல்லது. மனசுல வேணு இருக்கும்போது ஜோதி பெரிசா தெரிய மாட்டான். ஞாபகத்துல வெச்சுக்கோ..."

- கார் மதுரை டிராஃபிக் சந்தடியில் சிக்கிக் கொண்டு விட்டது. கண்ணாடிக் கதவை இறக்கிவிட்டு ஒரு சிகரெட்டைப் பற்ற வைக்கிறார் மயில்வாகனம்.

கார் தேங்கி நிற்கிறது. முன்னும் பின்னுமாய் அதே போல தேங்கிய நிலை. நடுவில் தன் சைக்கிளில், கிடைத்த இடைவெளியில் முன்னேறியவனாக வேணு. சரியாக அனுவும் மயில்வாகனமும் இருக்கும் கார் அருகே வந்து சேர்ந்து, அதற்கு மேல் போக முடியாதபடி மாட்டுகிறான்.

ஒரு காலை தரையிலும் மறு காலை பெடல் மேலும் வைத்துக் கொண்டிருக்கிறான். நகம் கடிக்கிறான். மயில் வாகனம் விடும் புகை அவன் மூக்கில் ஏறவும் திரும்பிப் பார்க்கிறான். மயில்வாகனம் முறைப்போடு பார்க்கிறார்.

அவன் பார்வையிலும் நெருப்பின் ஜ்வாலை. அனுவும் அதைக் கவனிக்கிறாள். பழைய வேணு போலவே இல்லை அவன். கண்களில் சோர்வும், முகத்தில் சுருக்கமும் தலையில் கலையும் கொண்டு பளபளப் பின்றி நிற்கிறான்.

லாக்கப் வரை போனதால் வந்த பாதிப்புகள்!



அனு நொடித்துப் போய் கண் கலங்குகிறாள். பின் அவசர அவசரமாக சேலை முந்தானையால் கண்களைத் துடைத்து விட்டுக் கொள்கிறாள்.

டிராஃபிக்கும் சற்று சரியாகிறது.

கார் கிளம்ப எத்தனிக்கிறது.

முறைப்பு கலையாதபடி பிரிகின்றனர் இருவரும்.

'ஒரு ஓட்டை சைக்கிள் வெச்சிருக்கற உனக்கே இவ்வளவு ரோஷமும் மூர்க்கமும் இருந்தா எனக்கெல்லாம் எவ்வளவு இருக்கும்?' மகளைப் பார்த்துக் கொண்டே முணுமுணுக்கிறார் மயில் வாகனம்.

அனு எதையோ சொல்ல வந்து பின் அடக்கிக் கொள்கிறாள்.



**க**டை வாயிலில் கார் தேங்கி நிற்கிறது. இறங்குகிறான். ஒருவன். கல்லாவில் அமர்ந்திருக்கும் நரசிங்கத்தைப் பார்த்து கை கூப்புகிறான்.

"என்ன விஷயம்... யார் நீங்க?"

"அனு முதலாளிம்மா அனுப்பினாங்க. இந்த சூட்கேஸையும் லெட்டரையும் கொடுத்துட்டு வரச் சொன்னாங்க..."

"எதுக்கு?"

"தெரியாது... வாங்கிப் பாருங்க."

- அவர் வாங்கிக் கொள்கிறார். அவன் திரும்பக் கும்பிட்டு விட்டுக் கிளம்புகிறான். அவர் பெட்டியைத் திறந்து பாக்கிறார். உள்ளே பச்சை நோட்டுக்களின் கட்டுக்கட்டான அணி வகுப்பு நெஞ்சை அடைக்கிறது நரசிங்கத்துக்கு.

கடிதத்தைப் பிரிக்கிறார்.

அன்புடையீர்,

வணக்கம்.

கடிதமுடன் 10 லட்ச ரூபாயை அனுப்பியியுள்ளேன். வேணுவின் திருமணத்திற்கும், அவர் எதிர்காலத்திற்கும் நான் தர விரும்பும் பரிசு அது. தயவுசெய்து அவரிடம் சேர்த்துவிடுங்கள். உங்கள் பேச்சை நான் கேட்டமாதிரி என் பேச்சை நீங்கள் கேட்க வேண்டும். நானும் என் அத்தை மகனைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன். அவர் பெரிய பணக்காரர். எனவே எங்கள் குடும்ப வாழ்க்கைபற்றி எனக்கு கவலை இல்லை. ஆனால் வேணு அப்படி இல்லை. அவருக்கு சில அடிப்படை வசதிகளாவது இருக்க வேண்டும். இல்லாவிட்டால் தொழிலாளர் தலைவராக அவர் நீடிக்க முடியாது. அவர்களுக்கும் சேவை செய்ய முடியாது.

அதற்குத்தான் இந்தப்பணம். இது எந்த நிலையிலும் அவருக்குத் தெரிய வேண்டாம். அவர் நலமாக - நீங்கள் சொன்ன மாதிரி அவரை நம்பியுள்ள பெண்ணோடு வாழ்ந்தால் அதுவே போதும் எனக்கு. நானும் எந்த நிலையிலும் குறுக்கில் வரமாட்டேன்.

என்னை - தொழிற்சாலையை அவர் வெறுக்க வேண்டும் என்பதற்காகவே கோர்ட்டில் அவர்மேல் நிறைய பொய் கேஸ்களை என் கம்பெனி நிர்வாகம் போட்டுள்ளது. ஒரு சில ஆண்டுகள் அது இழுபட்டு, வாய்தா பெறப்பட்டு, பின் இழுபட்டு ஒரு முடிவுக்கு வரும். நிச்சயம் நல்ல முடிவாகத்தான் அது இருக்கும். அதற்குள் வேணு ஒருகுழந்தைக்குத் தகப்பனாகிவிடுவார்.



எங்கள் காதல் சாதாரண சம்பவமாக - வெறும் நினைவாக மாறிவிடும். மாறவும் வேண்டும்.

வேணுவை மணந்து கொள்ளப்போகும் பெண் நல்ல அதிர்ஷ்டசாலி. அவளுக்கு என் வாழ்த்துக்கள்! உங்கள் ஒத்துழைப்பும் தொடரட்டும். நன்றி!

துரதிர்ஷ்டசாலி.

அனு.

- படித்து முடிக்கும்போது கண்கள் கலங்கிவிட்டிருக்கின்றன. கடிதத்தை மூடுகிறார். வள்ளியும் வசந்தாவும் உள்ளே நுழைகின்றனர்.

"வாம்மா..."

"அண்ணே. அவர் பேசுனாரு. வர்ற முகூர்த்தத்துலேயே வசந்தா - வேணு கல்யாணம் நடந்துடணுமாம்."

"அவன் எழுந்திரிச்சு வந்துமகனைப் பார்க்க வேணடாமாமா?"

"எல்லாம் பார்ப்பேன். ஏற்பாடு செய்யுங்கன்னு கத்தறார்."

"என்ன இவன் விளையாட்றானா? மண்டபம் பிடிக்கணும் ஐய்யரைப் பார்க்கணும். புடவை துணி எடுக்கணும்."

"அதை எல்லாம்தான் என் அக்கா செய்துடிச்சே...?"

"அக்காவா...?"

"அட என்னண்ணே? நான் ராஜேஸ்வரியக்காவைச் சொன்னேன். மதுரைல ஒரு மண்டபம் இருக்குதாமே...

அதுல லட்சத்திச் சில்ரை கட்டுனா எல்லாம் அவுங்களே பாத்துப்பாங்களாமே... நாம கை வீசிகிட்டுப் போனா போதுமாம்..."

-வள்ளி விவரிக்கிறாள். ஆனால் வசந்தாவிடம் உயிர்த்துடிப்பே இல்லை. அவள் கைகள் அரிசி மூட்டை அரிசியில் அளைந்து கொண்டிருக்கின்றன.

"எதுக்கும்மா இத்தனை அவசரம்... கொஞ்சம் தள்ளி பண்ணுனா என்ன?"

"நானும் எவ்வளவோ சொன்னேன். நல்ல காரியத்தத் தள்ளிப்போடக் கூடாதுங்கறாங்க. ஒரு தடவை தள்ளிப் போனா மூணு தடவை தள்ளிப் போகுமாமே... ஆமா; என்ன இது பொட்டி புதுசா இருக்கு?"

-வள்ளி பேசிக்கொண்டே பெட்டியைப் பார்க்கிறாள் "அது-அதுபுதுசு ஒண்ணு வாங்குனேன். தெருவுல வந்துச்சு..." - சமாளிக்கிறார் நரசிங்கம்.

"ச்சுக்..."

-வள்ளி கைகள் சட்டென்று அதை திறந்து விடுகின்றன உள்ளே வைத்த கண்ணை எடுக்க முடியாதபடி செய்கின்றன நோட்டுக் கட்டுக்கள்.

"அதை ஏன் திறந்தே...?" - கையில் உள்ள கடிதத்தை நழுவவிட்டபடி பாய்ந்து மூடுகிறார் நரசிங்கம். அந்தக் கடிதம் வசந்தா காலடியில் சென்று விழுகிறது. குனிந்து எடுக்கிறாள். உறைமேல் அனு அண்டஸ்ட்ரீஸ் எம்ப்ளம்.

நரசிங்கம் வேறு தடுமாறியபடி கடிதத்தையும் பிடுங்குகிறார்.

"போங்க ரெண்டு பேரும் முதல்ல... உங்கள யார் கூப்டது...?" - கோபத்தில் வார்த்தைகள் அவரிடம் தீப்பிடிக்கின்றன.

"அண்ணே... என்னாச்சு உங்களுக்கு?" - வள்ளி மிரண்டு போகிறாள். வசந்தா அதற்கும் மேல்...



நரசிங்கம் மிடறுவிழுங்கி ஆசுவாசக்கிறார். அப்படியே சமாளிக்க முனைகிறார்.

"அது வந்தும்மா... வந்து..."

"ஏதண்ணே இவ்வளவு பணம்?"

"இது... இது... வேணுவோடதும்மா அவன் கம்பெனியோட மோதாம இருக்க அவங்க தந்துருக்காங்க..."

"இம்புட்டா?"

"ஆமா. அவன்கிட்ட தந்தா வாங்க மாட்டான்னு என்கிட்ட தந்துருக்காங்க."

- மென்று விழுங்கியபடியே கடிதத்தை கல்லா ட்ராயரில் போடுகிறார். வசந்தா பார்த்துக் கொண்டே நிற்கிறாள்.

"எனக்கு என்ன பண்றதுன்னு தெரியல..."

"இதுல யோசிக்க என்ன இருக்கு... கல்யாணமும் அதுவுமா லட்சுமியா பாத்து தேடி வந்துருக்கா எடுத்துக்க வேண்டியதுதானே?"

"அப்படித்தானே நினைக்கறேன். வேலை போய் நிக்கறவள், சொந்தமா தொழில்பண்ண ரொம்ப உதவியா இருக்கும்தான்..."

"இருக்கும்தான் இல்லண்ணே... இருந்தே தீரும். ஏ புள்ள வசந்தா பாத்தியா உன் அதிர்ஷ்டத்தை... அண்ணே எல்லாம் என் மகளோட ராசி...!"

- வள்ளியம்மாள் மத்தாப்பாகிறாள். வசந்தா முகத்திலும் கொஞ்சம் போல வெளிச்சம்.

"இதைக் கெடுப்பதா?'

நீண்ட நேரம் யோசித்துவிட்டு பெட்டியை உள் எடுத்து வைக்கிறார் நரசிங்கம். வெளியே வந்து,

"அம்மாடி... இது அவனுக்குத் தெரிய வேண்டாம். நான் தந்ததாக இருக்கட்டும்..என்ன?" என்கிறார்.

-வள்ளி படுவேகமாய் தலையை ஆட்டுகிறாள்.

"எப்படியோ அது வந்து என் பொண்ணு நல்லா இருந்தா சரி... யார் கொடுத்தாங்கறதா முக்கியம்!"

-சற்று முன் வரை தூக்கமாத்திரையோடு வாழ்க்கை முடியப் போகிறது என்று கருதிக் கொண்டிருந்தவள், அப்படியே மாறிப்போய் பேசுகிறாள்.

எல்லாம் சலவை நோட்டு செய்யும் மாயம்!



தர்மராஜின் டேபிள் மேல் இரண்டு கல்யாணப் பத்திரிகை. ஒன்று அனு -ஜோதிஷங்கருடையது. அடுத்தது வேணு -வசந்தாவுடையது!

பார்க்கப் பார்க்க பரவசமாகவும் பிரமிப்பாகவும் இருக்கிறது அவருக்கு...

வியாபாரத்திற்காக மண்டையைக் கசக்கிக் கொண்டதை விடவும் கூடுதலாகக் கசக்கிக் கொண்டுவிட்ட ஒரு விஷயம் எப்படியோ எதிர்பார்த்த மாதிரியே வெற்றிகரமாக முடிந்துவிட்டது.

கத்தியும் ரத்தமுமின்றி புத்தியின் துணையோடு நிகழ்த்திய யுத்தத்திற்கு வெற்றி கிடைத்து விட்டது.

தர்மராஜ் சந்தோஷத்தோடு விஸ்கி பாட்டிலைத் திறக்கிறார். கோப்பையில் கொட்டி உதட்டால் பற்றி உள்ளே தள்ளுகிறார்.



அப்பொழுது பி.ஏ. இண்டர்காமில் கூப்பிடுகிறாள்.

"எக்ஸ்யூஸ் மீ சார்... இங்க முத்துச்சாமின்னு ஒருத்தர் உங்களைப் பார்க்க வந்துருக்கார். ரொம்ப அவசரங்கறார்..."

"முத்துச்சாமியா... யாரது?"

"வள்ளியம்மாவோட நிஜமான அக்கா புருஷனாம்!"

"வாட்?"

"அப்படித்தான் சொல்லச் சொன்னாரு..."

- அடுத்த நொடி தர்மராஜிடம் ஏறிய போதை ஜிவ்வென்று இறங்க ஆரம்பிக்கிறது!

# 20

**'அது ஆயிரங் காலத்துப் பயிர்தான்...**
**யார் இல்லை என்கிறது? ஆனால் அதன்**
**விவசாயிகள்...?'**

கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைகிறான் அவன். வரும் விதத்திலும் வேகத்திலும் துளிகூட நாகரீகமில்லை.

"ஹல்லோ சார்..." என்கிறான்.

"யாருய்யா நீ..."

"உங்க பி.ஏ. சொல்லியிருப்பாரே..."

"பி.ஏ." - அலறுகிறார் தர்மராஜ்.

பி.ஏ. பாய்ச்சலெடுத்து உடல் நடுங்க முன் வந்து நிற்கிறார்.

"யாரைக் கேட்டுய்யா இந்த ஆளை உள்ற விட்டே? உன்கிட்ட என்ன சொன்னேன் நான்..."

"சார், நான் சொல்லச் சொல்லக் கேக்காம தள்ளி விட்டுட்டு வந்துட்டான் சார் இந்த ஆள்..."

"வந்தா வேடிக்கை பாப்பியா... செக்யூரிட்டிக்குச் சொல்றதுக்கென்ன?"

"சொல்லிட்டேன் சார்... வந்துகிட்டிருக்காங்க." - பி.ஏ. சொன்னபடி இரண்டு செக்யூரிட்டி கார்டுகள் சல்யூட்டுடன் உள்ளே பிரவேசிக்கின்றனர்.

"இந்த ஆளைப் பிடிச்சு வெளிய எறிங்க."

- தர்மராஜின் கட்டளையை நிறைவேற்ற அந்த நபரின் தோள் மேல் கை வைக்கின்றனர்.

"எடுய்யா கையை.. மிஸ்டர் தர்மராஜ், என்னை வெளியே அனுப்பினே போகப் போறது நானா மட்டும் இருக்கமாட்டேன் உன் மானமும்தான்."

- மிரட்டலாய்க் கமறுகிறான் அவன். தர்மராஜ் அதிக பட்ச வியர்வையோடு அவனைப் பார்க்க,

"இவங்களைப் போகச் சொல்" - என்கிறான் அவன். அவர் சைகை காட்ட, அவர்களும் தயங்கித் தயங்கி வெளியேறுகின்றனர்.

"சொல்லு. உனக்கு என்ன வேணும்?"

"அப்படி வா வழிக்கு... ஆமா எதுக்காக என் வேஷத்தை நீ போட்ருக்கே?"

"உன் வேஷமா?"

"இல்லியா பின்னே.. வள்ளியோட ஒரிஜினல் கொழுந்தன் நான். ஆனா நீன்னு அவ நம்பிகிட்டிருக்கா. அதச் சொன்னேன்..."



"அது... அது... உனக்கு எப்படித் தெரியும்?"

"உன்னோட பொல்லாத நேரம். எனக்குத் தெரிய வந்துடிச்சி. பெரிய தொழிலதிபரா இருக்கே. எதுக்காக இப்படி சீப்பா என் வேஷம்லாம் போட்றே?"

"அது உனக்குத் தெரிய வேண்டாம். உனக்கு என்ன வேணும் அதக் கேள்."

"ஓஹோ... எனக்கே விலையா?"

"வேற எதுக்கு வந்திருக்கே...?"

"என் வேஷத்தப் போடாதேன்னு சொல்ல வந்துருக்கேன். எனக்கு இப்ப தேவையே அதுதான்..."

"என்னய்யா கழுத்தறுக்கறே? அஞ்சாயிரம் பத்தலைன்னா பத்தாயிரம். இருபதாயிரம்... எவ்வளவு வேணும்?"

"சல்லிக்காசு கூட வேண்டாம். போட்ட வேஷத்தக் கலைச்சுட்டு செஞ்ச தப்புக்கு மன்னிப்பும் கேட்கணும்."

அவன் அழுத்தமாகச் சொல்கிறான். அவர் குத்தீட்டி போல பார்க்கிறார்.

"இப்படி பாத்தால்லாம் பயப்பட மாட்டேன்."

"நான் நீ பயப்படறதுக்காக பாக்கலை."

"தெரியும். விலை படியலையேங்கற கோபம்."

"எப்படி வேணா எடுத்துக்கோ உன்கிட்ட கெஞ்சிக் கேட்டுக்கறேன். ஒரு பத்து நாள் டயம் தா. நீ சொல்ற படி எல்லாம் நான் கேட்கறேன்."

"அந்த பத்து நாள்தான் எனக்கும் வேணும். அப்புறமா நீ இந்த வேஷத்தை எப்படி வேணா போட்டுக்கோ எனக்குக் கவலை இல்லை."

"புரியும்படி சொல்லு."

"வள்ளியோட அக்கா வடிவுதான் என் மனைவி நாங்க ஓடிப்போய் கல்யாணம் செய்துகிட்ட காதல் ஜோடிங்க. எங்களுக்கு இரட்டைப் பெண் குழந்தைங்க.

இன்னிக்கு என் மனைவி கேன்சருங்கற கொடிய நோயால பாதிக்கப்பட்டு ஜே.ஜே ஆஸ்பத்திரில சாகக் கிடக்கிறதா! ஒரு வாரமோ பத்து நாளோதான் அவளோட வாழ்க்கைன்னு டாக்டர்களும் சொல்லிட்டாங்க.

அது கடைசி ஆசை. தன் குடும்பத்தைச் சேர்ந்த எல்லாரையும் ஒரு தடவையாவது பாக்கணும்கறதுதான். அதற்காக நான் வள்ளி வீட்டுக்குப் போனேன். அங்க நரசிங்கத்தைப் பார்த்தேன். விஷயத்தச் சொன்னேன். அவர்தான் உங்களைக் கை காட்டி அட்ரஸைக் கொடுத்தாரு. அங்கையும் யார் கூடயும் பேசவிடலை. திரும்பத் திரும்ப உங்களையே பார்க்கச் சொன்னாரு..."

"மை காட்... தேங்க்ஸ் நரசிங்கம்."

"என்ன பெரிய தேங்க்ஸ். அவர் பார்க்கச் சொன்னதால மட்டும் உன்னை வந்து பாக்கல மிஸ்டர் தர்மராஜ். பெரிய மனுஷனா இருந்துகிட்டு இப்படி எல்லாம் நடிக்காதேன்னு எச்சரிக்கத்தான் வந்திருக்கேன்."

"இதோ பார்... என் இடத்துல நீ இருந்திருந்தா இப்படி எல்லாம் பேசமாட்டே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். படாதபாடுபட்டு என் மகனுக்கு நான் விரும்பற மாதிரி கல்யாணத்தப் பண்ணப் போறேன். அதக் கெடுத்துடாதே! கல்யாணம் முடியட்டும் அப்புறம் நீ சொல்றபடி எல்லாம் கேக்கறேன்.

'அதுக்குள்ற என் பொண்டாட்டி உயிர்போயிட்டா?'



"போகாது! ராஜ வைத்யத்துக்கு நான் ஏற்பாடு செய்யட்டுமா?"

"இப்ப நான் செய்துகிட்டிருக்கறது அதுக்கும்மேல மிஸ்டர் தர்மராஜ். உங்க பணப்பவிசை தயவு செய்து காட்ட வேண்டாம்."

"பத்திரிகை அடிச்சு விநியோகம் பண்ணி மண்டபம் பார்த்து எல்லாம் முடிஞ்சாச்சு. ஒரு கல்யாணத்துக்கு இரண்டு கல்யாணம் நடக்கப் போகுது. அதைக் கெடுக்கறதுன்னு கங்கணம் கட்டிக்கிட்டு வந்திருக்கியா நீ?"

"வளவளன்னு எதுக்குப் பேசிகிட்டு. எனக்கு என் பெண்டாட்டியோட கடைசி ஆசைதான் முக்கியம்."

"அவ்ளோதானே... அதை ஈடேற்றி வைக்கறேன் போதுமா?"

"வள்ளி திருட்டுத்தனமா என் பொண்டாட்டிய வந்து பாக்கறத நான் ஒத்துக்க மாட்டேன். வள்ளி, அவ மக வசந்தா எல்லாரும் உரிமையோட வரணும். பார்க்கணும்."

- துளிகூட மசியாமல் - ஆவேசம் குறையாமல் பேசும் முத்துச்சாமி என்னும் அந்த மனிதரை தர்மராஜ் திரும்ப முறைக்கிறார்.

மேஜை மடிப்பில் அவரது ஆசனத்துக்கு முன் உள்ள ஸ்விட்ச் ஒன்றை அமுக்குகிறார்.

மின்னல் வேகத்தில் செக்யூரிட்டி கார்டுகள் உள் நுழைகின்றனர். முத்துசாமியின் பிடறியில் ஒரே அடிதான். தள்ளாடியபடி விழுகிறான் அவன்.

"இந்த ஆளை ஆபீஸ் குடோன்ல பூட்டி வைங்க. உயிருக்கு எந்த ஆபத்தும் வரக்கூடாது. அதே சமயம் ஒரு

வாரத்துக்கு குடோனை விட்டு வெளியே வரவும் கூடாது."

அவரது கட்டளை அடுத்த நொடியே செயல் பாட்டுக்கு வருகிறது.

தரதரவென்று இழுத்துச் செல்கின்றனர்.

அறைக் கதவைக் கடக்கும்போது ஜோதிஷங்கர் உள் நுழைகிறான்.

இழுத்துச் செல்லப்படும் முத்துச்சாமியைப் பார்த்த படியே...

"யார்ப்பா அது...? என்ன பிராப்ளம்?" சற்று உணர்ச்சி வசப்படுகிறான்.

"அது... அது..." தர்மராஜ் தடுமாறிப் போகிறார்.

"என்ன அது?..."

"அதுவந்து-அந்த ஆள் நம்ப எம்ப்ளாயி ஒருத்தரோட ரிலேஷனாம். கொஞ்சம் குடிகாரன் போல... அதான் வந்து கலாட்டா பண்ணினானாம். நம்ப செக்யூரிட்டிங்க பிடிச்சு இழுத்துட்டுப் போறாங்க. அதவிடு! ஜோதி எல்லார்க்கும் பத்திரிகை கொடுத்துட்டியா?"

விஷயத்தை கல்யாணப் பேச்சுக்கு மாற்றப் பார்க் கிறார். அவன் பார்வையோ அறைக்கதவின் பக்கமாகவே இருக்கிறது.

"ஜோதி உன்னைத்தான்... அத விடு... இட் ஈஸ் எ சில்லி மேட்டர். நான் பாத்துக்கறேன். தலைக்கு மேல கல்யாண வேலை இருக்குல்ல...?"

ஜோதி மெல்ல திரும்புகிறான்.

"அப்பா நான் யாரையும் கூப்பிட விரும்பலப்பா. நீங்க கூப்பிடறவங்க வந்தா போதாதா?" - என்றபடியே



அறையின் வலது மூலை ஃப்பிரிஜ்ஜைத் திறந்து பச்சைத் தண்ணீரை எடுத்து கவிழ்த்துக் கொள்கிறான்.

தர்மராஜ் அவனைப் பார்த்தபடியே தலையில் கை வைத்துக் கொள்பவர், எழுந்திருந்து வேகமாக அறையை விட்டு வெளியேறுகிறார்.

ஜோதி வறட்டுச் சிரிப்பு சிரிக்கிறான்.

●●●

ஜே ஜே. ஆஸ்பத்திரி. வடிவு உயிர்ப்போர் நிகழ்த்திக் கொண்டிருக்கும் படுக்கை முன் போய் நிற்கிறார் தர்மராஜ்.

கிழிந்த துணி வெய்யிலில் உலர்த்தப் பட்டிருக் கிறாற் போல கிடக்கிறாள் முத்துச்சாமியின் மனைவி வடிவு.

அவன் சொன்னது உண்மைதான்.

கால்மாட்டிலேயே இரண்டு பெண் குழந்தைகளும் பரிதாபமாக உட்கார்ந்திருக்கின்றனர். பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது.

"நீங்க..." - நர்ஸ் ஒருத்தி கேட்கிறாள்.

"நான் இவங்க உறவுக்காரன்."

"இவ்வளவு நேரமா கேட்டுகிட்டிருந்தாங்க. யாரும் வரலையா? யாரும் வரலையான்னு..."

"ஐசீ..."

"என்ன உறவு நீங்க?"

"அண்ணன் மாதிரி"

"முத்துச்சாமி சொல்லித்தான் உங்களுக்குத் தெரியுமா?"

"ஆமாம்மா."

"இப்ப அவர் எங்கே?"

"அவர்... அவர். இவங்க தங்கச்சி வீட்டுக்குப் போயிருக்காரு..."

"வள்ளிங்கறவங்க வீட்டுக்குத்தானே?"

"ஆமாம். ஆமாம்."

●●●

"காலைல இருந்து நூறு தடவைக்கு மேல கேட்டுருப்பாங்க. ஆமா மிஸ்டர் முத்துச்சாமி எப்ப வருவாரு. சில முக்கியமான மருந்துங்க வாங்கணும்."

"என்ன மருந்தும்மா வாங்கணும். நான் வாங்கித் தரேன்..."

"மருந்துங்க மட்டுமில்ல... நிறைய ஹாஸ்பிடல் ஃபீசும் பாக்கி இருக்கு!"

"நான் பாத்துக்கறேன். ஒரே பிளாங்க் செக். நீங்க ஃபில் அப் பண்ணிக்கலாம்."

- தர்மராஜ் பேசப் பேச அந்த நர்ஸ் வியப்பில் விழுந்து எழுந்திருக்கிறாள். அந்தக் குழந்தைகள் இரண்டும் அவரையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

"ட்ரீட்மென்ட் நல்லா இருக்கணும். டாக்டரை நான் பார்க்கலாமா?"

"தாராளமா..." அவள் அவரை அழைத்துச்செல்லத் தயாராகிறாள். அவர் உடனே செல்ஃபோனை ஆன் செய்துபி.ஏ.வைப் பிடிக்கிறார்.

"மிஸ்டர் மகாலிங்கம்... நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். வள்ளியம்மாவைப் பார்த்து ஆஸ்பத்திரிக்கு அழைச்சுகிட்டு வந்து காட்டுங்க. பாக்கவே ரொம்ப பாவமா இருக்கு. அந்த ஆளை விட்ற வேண்டாம்."



"சரி சார்..."

-செல்ஃபோனை முடக்கி பாக்கெட்டில் அடைத்துக் கொண்டு, ஆச்சரியம் கலையாமல் பார்க்கும் அந்த நர்ஸைப் பார்க்கிறார்.

"கிளம்பலாமா?"

அவளிடம் தலையசைப்பு!

●●●

**க**ல்யாண நாள்!

சீரியல் செட் ஜோடனையில் கல்யாண மண்டபமே கலகலத்துப் போய்க்கிடக்கிறது.

- அனு வெட்ஸ் ஜோதிஷங்கர் என்கிற விளக்கு எழுத்துக்கள் எரிந்து எரிந்து அணைந்து கொண்டிருக்கின்றன. கூட்டமான கூட்டம் குவிந்து கிடக்கிறது.

அதிக உற்சாகமுமின்றி அதிக சோர்வுமின்றி நிதானமான ஒரு மாப்பிள்ளையாக மணவறையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான் ஜோதிஷங்கர்.

அனு அழைத்து வந்து அமர்த்தப்படுகிறாள்.

தங்கத்தால் அவளது மொத்த தேகத்தை வேய்ந்திருக்கிறார்கள். அலங்காரத்தை மீறிய ஒரு சோகம் அவள் கண்களில் அலையாதபடி...

அங்கே வசந்தாவும் கிட்டதட்ட அதே போலத்தான்.

முகூர்த்தத்தை இரண்டு ஜோடிகளும் எட்டிப் பிடிக்கப்போகும் வேளை...

# 21

**காதல் சதுரங்கத்தில் ஜோடிகள் இடம் மாறின! இனி மோதல் சதுரங்கம்தான். என்னாகும்?**

இரண்டு ஜோடிகளும் முகூர்த்தத்தை எட்டிப் பிடிக்கப் போகும் சமயம்... நல்லவேளை... எந்தவிதமான தப்புத் தண்டாவும் நடந்துவிடவில்லை! சினிமா பாணி யில் யாரும் சரியாகப் பிரவேசம் செய்து 'நிறுத்துங்க' என்று சொல்லி, தடைகளையோ, குழப்பத்தையோ உருவாக்கவில்லை.

ஒரே ஒரு தடை- முத்துச்சாமி ரூபத்தில் வந்தது.

அதை தர்மராஜ் சாமர்த்தியமாகச் சமாளித்து விட்டார். மயில்வாகனமும் நிம்மதிப் பெருமூச்சு விடு கிறார். இரண்டு இளம் ஜோடிகளின் காதல் கோட்டை யையும் எத்தனை சாமர்த்தியம் காட்டி இருக்க முடியுமோ அத்தனை சாமர்த்தியம் காட்டி இடித்துவிட்டு, மதர்ப்பாக மார் தூக்கி நிற்கின்றனர் இருவரும்.

பணத்தை பணத்தோடு சேர்ந்தாயிற்று.

ஏழையை இன்னொரு ஏழையோடு சேர்த்தாயிற்று.

அவசரக் கல்யாணமாக இருந்தாலும், ஆடம்பரக் குறைவின்றி அமர்க்களமாக நடந்து முடிந்துவிட்டது.

முகூர்த்த நேரம்வரை ஒரு டென்ஷன் இரண்டு தரப்பிலும் இருந்தது.

அனு கழுத்தில் ஜோதிஷங்கரும், வசந்தா கழுத்தில் வேணுவும் தாலியைக் கட்டி முடிக்கவும் எல்லாம் பஞ்சாய் பறந்துவிட்டது.



"அப்பாடா..." - மாறி மாறி நான்குபேர் பெருமூச்சு விட்டே ஓய்ந்து போகின்றனர்.

ஆபட்ஸ்பரியில் தர்மராஜ், மயில்வாகனத்தை இழுத்துக் கட்டிக் கொள்கிறார்.

"மச்சான் ஜெயிச்சிட்டோம்...!"

"உண்மைதான்... அவங்க ஆசைப்பட்ட மாதிரி கல்யாணம் நடந்திருந்தா இந்த மாதிரி கூட்டத்தைக் கூட்டி இத்தனை கித்தாப்பா நடத்தியிருக்க முடியுமா?"

"சாணக்யன் மச்சான் நீங்க...!"

"நீ மட்டும் என்ன மயில்வாகனம், பிரிக்கற வேலைக்கு ஒரு ஆளையே அப்பாய்ன்ட் பண்ணினியே...!"

"விடுங்க. இனி பழசை நினைக்கக்கூடாது, ஆமா; ஜோதியும் அனுவும் இன்னிக்கேவா சிம்லா போறாங்க?"

"ஆமாம் மயில்வாகனம் இன்னிக்கே அவங்க போயாகணும்."

"அப்படி என்ன அவசரம்?"

"அவசரம்தான், வெண்ணெய் திரண்டு வரும் போது தாழி உடையறமாதிரி ஒரு சம்பவம் நடக்க தெரிஞ்சிச்சி. அதை சினிமா வில்லனாட்டம் நடித்து சமாளிச்சிருக்கேன்."

"அந்த முத்துச்சாமி சமாசாரம்தானே?"

"போச்சுடா... உன் காது வரைக்கும் வந்துடிச்சா? ராஜேஸ்வரிகிட்ட சொல்ல வேண்டாம்னு சொல்லி யிருந்தேனே...?"

"மனசு தாங்கல... சொல்லிட்டா. அதான் கல்யாணம் முடிஞ்சிடுச்சே... இனி என்ன கவலை?"

"என்ன கவலையா... அவன் இப்ப வெளிய வந்தா சமாதானமாப் போவங்கறதுக்கு எந்த உத்திரவாதமும் இல்லை. குடோன்ல பூட்டி வெச்சிருக்கேன். அந்த ஆத்திரத்தோடே நம்ம பசங்களைப் பாத்து உங்க பேரண்ட்ஸ் உங்களை ஏமாத்திட்டாங்கன்னு சொன்னா வில்லங்கமல்ல ஆயிடும்."

"இனி என்ன ஆயிடும் மச்சான்....? அதான் தாலியக் கட்டிட்டாங்கல்ல..."

"தாலியக் கட்டிட்டா... சந்தோஷமா மனசு ஒப்பி வாழ வேண்டாமா? எதுக்கு ரிஸ்க் மயில்வாகனம்?"

"அப்ப அங்க அந்த ஜோடிங்களும் சிம்லாவா?"

"கிழிஞ்சது - அவங்க கொடைக்கானல் போவாங்க. பதினைஞ்சு நாளைக்கு ரெண்டு ஜோடியும் திரும்பமாட்டாங்க, நம்ப ஜோடி பதினைஞ்சு நாள் கழிச்சு வந்த பிறகுதான் ரிசப்ஷனே...! சீஃப் மினிஸ்டர்ல இருந்து சென்டரல் மினிஸ்டர் வரை அப்பதான் வரப்போறாங்க, இப்ப வந்துருக்கறது சராசரி கூட்டம்தானே?"

"எப்படியோ எல்லாம் நல்லா நடந்தா சரி..." இரண்டு பெரிய மனிதர்கள் (?) பேசுவதையும் அறியாதபடி. மணமேடையில் ஐயர் சொல்வதைச் சொல்லியபடி, தன் எதிரில் எரியும் அக்னி குண்டத்தில் நெய் வார்த்துக் கொண்டிருக்கிறான் ஜோதிஷங்கர்.

பக்கத்திலேயே அம்மிக்கல்... அட்சதைப் பாத்திரம்... அதை மிதித்து அனுஇன்னும் சில நிமிடங்களில் வானத்து அருந்ததியைப் பார்த்து விடுவாள். ஜோதிதான் காட்ட வேண்டும். ஆண்டாள்போல் அலங்காரம் செய்து கொண்டை போட்டிருக்கின்றார்கள்.



அசல் ஆண்டாள் கூட இத்தனை லட்சண சொரூபமாக இருப்பாளா என்பது சந்தேகமே ஆனால் அந்தக் கண்ணில் இல்லாத துக்கம் இவள் கண்ணில் உறைந்து போய்க் கிடக்கிறது.

மனதைப் படிக்கத் தெரிந்தவர்களால் அதைப் படிக்க முடியும் பார்க்கவும் முடியும்.

ஜோதியிடமும் எந்திரத்தனம் நன்றாகவே தெரிகிறது, கல்யாண மாப்பிள்ளைகள் சாதாரணமாக மின்சாரம் பாய்ந்தமாதிரி ஜிவுஜிவு என்றுதான் இருப்பார்கள். பக்கத்து ஸ்பரிசம் பலவித இன்ப நினைவுகளை உருவாக்கி கொண்டிருக்கும்.

கூடி இருக்கும் கூட்டமும் தார்மீகமாக மிக தெம்பைத்தரும்.

எனக்காக, என் புது வாழ்வைக் காண, அது சிறக்க வேண்டும் என்று வாழ்த்தத்தான் எத்தனை பேர்... எத்தனை பேர்?

பார்க்கப் பார்க்க பரவசமாக இருக்கும்.

ஆயிரம் பிரச்சினைகள் இருந்தாலும் அதெல்லாம் கோமாவில் போடப்பட்டிருக்கும்.

'சந்தோஷம் - வாழ்த்து - உறவுக்கலப்பு - பரஸ்பர விசாரிப்புகள் - விருந்து - உபசாரம் - போட்டோ க்ளிக்குகள் - வீடியோ வெளிச்சக்காடு புதுத்துணி அலங்காரம்.

ஒரு கல்யாண வீடு தரும் விஷயங்களில்தான் எத்தனை விதமான இன்பங்கள்?

அந்த இன்பங்கள் வசந்தா வேணுதிருமண நிகழ்ச்சியிலும் இறைந்துதான் கிடக்கிறது. வசந்தாவுக்காக

அலைந்த இளைஞர்கள் விடலைகள் நெஞ்சில் நெருப் போடு வேணுவைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

ஓடியாடிக் கொண்டிருக்கிறாள் வள்ளி.

ஒத்தாசைக்கு நரசிங்கம்.

ஓரிடத்தில் நாற்காலியில் மாணிக்கம். கல்யாணத் திற்கு வந்திருப்பவர்கள் மாணிக்கத்தை நெருங்கி கை குலுக்குகின்றனர்.

"படுத்துக்கிட்டு ஜெயிச்சிட்டேய்யா...!" என்று சிலரிடம் பாராட்டு வேறு!

வேணு தன் கம்பெனிக் கூட்டத்தில் யாரையுமே கூப்பிட்டிருக்கவில்லை. எனவே வசந்தா வீட்டுக்கூட்டம் தான். வசந்தாவின் பள்ளித் தோழிகள், டைப்ரைட்டிங் இன்ஸ்ட்டியூட் சகாக்கள் வந்திருக்கின்றனர்.

நடக்கவே நடக்காது என்று நினைத்த நிகழ்ச்சி நடந்து கொண்டிருக்கிறது. வசந்தா ஈர மஞ்சள் காயாத வடம் போன்ற தாலிக் கயிற்றோடு அமர்ந்திருக்கின்றாள். ஜோதியோடு அமர்ந்திருப்பதாக பலமுறை கற்பனை செய்து பார்த்துக் கொள்கிறாள்.

அவன் அத்தனை பேர் மத்தியில் ஐய்யர் எதிரில், எவரும் அறியாதபடி அவள் இடுப்பைக் கிள்ளிவிட்டு, கையை சற்று மேலேற்றி அந்த மேடான பாகத்தை உரசுகிறான்!

'உஸ்ஸ்... என்னங்க இது... கையை எடுங்க...?"

"என் பொண்டாட்டி நீ! எங்க வேணா கைபோடு வேன்."

"போடுவீங்க... போடுவீங்க விரலை ஒடிப்பேன்."



"சேத்து வெச்சி இடுப்பை ஒடிச்சிடுவேன்."

"உங்களால முடியாதே...?"

"முடிச்சுக் காட்றேன். அதுக்கு பயந்துகிட்டே நீ பெட்ரூம் பக்கம் வராம ஓடப் போறே பார்..."

"பார்ப்போமா?"

"பார்ப்போமா?"

- கற்பனையில் கேட்டுப் பார்த்துக்கொண்ட தெல்லாம் விவஸ்தை இல்லாமல் இப்பொழுது குறுக்கிடுகிறது.

வேணு அந்த மாதிரி குறும்பெல்லாம் கண்ணிய மற்றது என்று நினைத்துவிட்ட மாதிரி விறைப்பாக அமர்ந்து ஹோம குண்டத்துப் புகைக்காக கண்ணீர் கசிகிறான்.

அவனுக்குள்ளும் கற்பனைக் கோட்டைகள் இல்லாமலா இருந்திருக்கும்?

"ஆமா, சாஸ்திரப்படி கல்யாணம் பண்ணிக்கிறது நல்லதா... இல்ல ரிஜிஸ்டர் மேரேஜ் பெட்டரா?"

"சாஸ்திரப்படிதாங்க சரி... நல்ல நாகவல்லிப் பட்டு உடுத்தி, தாழம்பூ ஜடை போட்டு நான் மணைல உக்கார ணும். எதுக்கு ஹோமகுண்டப்புகை கிளம்பி வந்து என் கண்ணு மையை, உங்க கண்ணு மையக் கரைக்கணும்."

"என் கண்ணுல எதுக்கு மை?"

"மாப்ளைக்கு மை உண்டு சாமி!"

"அப்படியா... எதுக்கு?"

"பெரியவங்களைத்தான் கேக்கணும். அப்புறமா மொய்ப்பணத்த நம்ப கைல தந்துட்டு கை குலுக்குவாங்க போட்டோ எடுத்துக்குவாங்க!

மத்யானம் விருந்தப்ப நீங்க எனக்கும் நான் உங்களுக்கும் ஊட்டிவிடுவேனாம்.

ஜாலியா இருக்கும்..."

"ஜாலி எல்லாம் ராத்திரியிலதான். நீ சொல்றதெல்லாம் இம்சை அனு!"

"இம்சையா... அனுபவிச்சுப்பாரு சாமி... அப்புறமா சொல்வே?"

"எப்ப? எப்ப?"

"பறக்காதீங்க... அந்த நாள் வரத்தான் போகுது... நாம அந்த இன்ப அவஸ்தைகளை எல்லாம் அடையத்தான் போறோம்."

- சொன்னாளே...

இப்படி வாய்கிழிய வார்த்தை மணக்க நெஞ்சம் விம்முதல் கொள்ள நிறைய நிறையச் சொன்னாளே..."

எல்லாமே தலைகீழாகி விட்டதே?

- கண்ணோரம் துளிர்த்த நீரைச் சுண்டிவிட்டுக் கொண்டு ஹோம குண்டத்தில் நெய் சேர்க்கிறான் வேணு. ஐய்யர் சொல்வதையும் திரும்பச் சொல்கிறான்.

எரியும் குண்டத்தில் மன நினைப்புகளைக் கூடப் போட்டு எரித்தால்தான், இனி வரும் நாளிலாவது சந்தோஷத்தோடு வாழ முடியும்.

அதற்காக முயற்சிப்பதுதான் சரி...

தனக்குதானே சமாதானம் சொல்லிக்கொண்டு அவ்வப்போது வசந்தா பக்கம் திரும்புகின்றான். ஒரு ஒட்ட வைத்த மாதிரியான அளவான சிரிப்பு. அவளும் பதிலுக்குச் சிரிக்கிறாள்.



மாணிக்கம் முகத்திலும் சிரிப்பு. ஆனால் அதன் தொனியும் அர்த்தமும் வேறு மாதிரியாக இருக்கிறது.

நெடுநேரம் வரை நோயாளியாட்டம் அமர்ந்திருந்தவர், நெஞ்சு வலிக்காரனாய் ஓய்வில் இருந்தவர் எழுந்திருக்கிறார்.

மண்டபத்தில் நிறைய தனி அறைகள். அதில் ஒன்றில் நுழைகிறார். ஸ்லாப் ஒன்றில் தனது சூட்கேஸ் எடுத்துத் திறக்கின்றன கைகள்.

உள்ளே விஸ்கி பாட்டில். கூடவே கண்ணாடிக் கிண்ணமும், மிருதுவான ப்ளாட்டிங் சருகுப் பேப்பரால் சுற்றப்பட்டிருக்கிறது. புத்தம் புதிது!

எடுத்து அதில் விஸ்கியை ஊற்றி உற்சாகமாகச் சப்பிக் குடிக்கும்போது அங்கே நரசிங்கத்தின் பிரவேசம்.

"டேய் மாணிக்கம் என்னடா இது கல்யாண வீட்ல... அதுலயும் ஒரு இதயநோயாளி நீ...!" பதறிப் போகிறார் நரசிங்கம்.

- சிரிக்கிறார் மாணிக்கம்.

"என்னடா சிரிக்கறே? வைடா அதக் கீழ..."

"இல்லண்ணா... எனக்கு எதுவும் ஆகல. எல்லாம் நான் போட்ட நாடகம்ணே. இப்படி நான் நடிக்காமப் போயிருந்தா இங்க இன்னிக்கு என் மருமகன் வேணு, என் மக கழுத்துல தாலியக் கட்டியிருப்பானா?" பதிலோடு திரும்பவும் ஒரு மடக்கு!

நரசிங்கம் முகத்தில அதிர்ச்சி ரேகைகள்!

# 22

'புதிரானது விதியின் பாதை! அதில் விழப்
போகிறாள் ஒரு பேதை!'

அதிர்ச்சி பரவிய முகத்தோடு அப்படியே ஒரு ஓரமாக ஒடுங்கி அமர்கிறார் நரசிங்கம்.

"என்னண்ணே பசங்களோட உன்னையும் சேர்த்து ஏமாத்திட்டேன்னு வருத்தமா?"

- விஸ்கி போதைகொஞ்சமாய் நாக்கைக் குழறவிட மாணிக்கம் கேட்பது நரசிங்கத்தைக் கனலாக்குகிறது.

"ஏமாத்திட்டு கேள்வியா கேக்கறே?"

"தப்பா எடுத்துக்காதேண்ணே... உன்கிட்ட மட்டு மாவது உண்மையை சொல்லிட்றேன்னுதான் சொன் னேன். அந்த தர்மராஜ்தான் வேண்டாம்னு தடுத்துட் டார்..."

- மாணிக்கத்தின் அடுத்த நிஜம் நரசிங்கத்தை நடு நெஞ்சில் குத்தித் தூக்குகிறது. கோபம் இப்பொழுது தன்னை இரண்டால் பெருக்கிக் கொள்கிறது.

"ஏண்டா... அந்த ஆள் உன் பொண்ணு காதலோட உன்னையுமா விலைக்கு வாங்கிட்டான்?"

"இந்த வயசான காலத்துல எனக்கும் ஒரு விலை இருக்குங்கறதே பெரிய விஷயம் தானேண்ணே..."

"இல்ல மாணிக்கம்... நீ ரொம்ப மோசம். துரோகத்தை இப்படி தத்ரூபமா செய்வேன்னு நான் நினைக்கவேயில்லை. நிஜமா சொல்றேன். நீ நல்லா இருக்கணும். உன் குடும்பம் நல்லா இருக்கணும்னுதான்



நான் அந்தப் பணக்காரப் பெண்கிட்ட போய் பிச்சை எடுத்தேன், ஒரு காதல் பல பேர் உசுரை வாங்கிடக் கூடாதுன்னு மனசார நம்பினேன், ஆனா அவ்வளவும் நடிப்புன்னு சொல்லி, நீ எனக்கு மட்டுமில்ல... அந்த பசங்க காதலுக்கும் சேர்த்து துரோகம் பண்ணிட்டே.

இந்த துரோகத்துக்கு என்னையும் ஒடந்தையாக் கிட்டே உன்னை..."

- நரசிங்கம் அடிக்க கை ஓங்கியபடி வருகிறார்.

"நல்லா அடிண்ணே... இனி என்ன நடந்தா என்னா? எது நடக்கணும்னு நாடகம் போட்டோமோ அது நடந்து முடிஞ்சிடுச்சு. நீ அடிக்கறதால எனக்கு எதுவும் ஆயிடாது. அடிண்ணே... நல்லா அடி..."

நரசிங்கம் கை ஓங்கவும் மாணிக்கம் பேசிய பேச்சு, அந்தக் கையை கீழே இறக்கி அவரை சவட்டிப் போடுகிறது.

வாழ்க்கையில் அழுவதை கேவலமாகவும் அது ஒரு ஆண் மகன் செயலே அல்ல என்றும் நினைப்பவர் எல்லாம் தளர்ந்து எழுகிறார்.

தப்பான சிலரின் சூழ்ச்சிக்கு இப்படி ஒரு கருவி யாகப் பயன்பட்டு விட்டோமே என்கிற குற்ற உணர்வு குத்திப் பிடுங்க அழுகிறார்.

சற்றும் எதிர்பார்த்திராத நிலையில் எதற்கோ அந்தப் பக்கம் வந்த வேணு அதைப் பார்த்துவிட்டுப் பதறிப் போகிறான்.

"மாமா... என்ன மாமா.... எதுக்கு அழறீங்க? அதான் கல்யாணம் நல்லபடியா நடந்து முடிஞ்சிடிச்சே..."

மாப்பிள்ளை எதிரில் விஸ்கியை வேக வேகமாகப்

பதுக்கும் மாணிக்கம், "அது வந்து மாப்ளை... அண்ண னுக்கு ஒரே சந்தோஷம் இது ஆனந்தக் கண்ணீர்!" என்று குழறிக் கொப்பளிக்கிறார்.

"ஆமா; நீங்க ஏன் ஒரு மாதிரி பேசறீங்க?"

வேணு அந்தக் குழறலை எட்டிப் பிடிக்க, மாணிக்கம் தடுமாற்றத்துடன் வாயைப் பொத்திக் கொள்ள கசிந்து அவன் மூக்கை நிரடுகிறது விஸ்கி வாடை.

"குடிச்சிருக்கீங்களா?" அவனிடம் ஏராளமான அதிர்ச்சி.

"அது வந்து வந்து... தூக்கம் வரலைன்னா ஒரு பெக் சாப்டுங்கன்னு டாக்டருங்கதான்..." மாணிக்கம் முடிக்க முடியாமல் திணற, என்னவோ ஏதோ என்று வள்ளியும் வந்து சேருகிறாள்.

வேணு மாப்பிள்ளைக் கோலத்தில் ஸ்தம்பித்து நிற்பது அவளையும் பற்றுகிறது. நல்ல வேளை நரசிங்கம் சுதாரிக்கிறார்.

"வேணு... நான் தான் வாங்கித் தந்தேன், கல்யாண வேலை. சரியா தூங்கலை. உடனடியா தூங்க வைக்க இதுதான் கிடைச்சது. நீ தப்பா எடுத்துக்காதே..."

"தப்பா எடுத்துக்காதேவா... அவர் ஒரு ஹார்ட் பேஷண்ட் மாமா இன்டன்சிவ் கேர்ல ஆக்சிஜனுக்காக அல்லாடிக்கிட்டிருந்தவர். அவர் போய்..."

"தெரியும்டா.... ஒரு பெக்தான்னு சொல்லிதான் கொடுத்தேன். நீ எங்கே வந்தே... அதைச் சொல்லு..." நரசிங்கம் அவன் தோளில் கை போட்டு வெளிய தள்ளிக் கொண்டு வருகிறார்.



"ஆமா என்ன இது?" - இவன் இடுப்பில் இருந்து இரண்டு ஏர் டிக்கெட்டை உருவி, அவர் எதிரில் காட்டு கிறான்."

"ஏர் டிக்கட் தம்பி..."

"அதான் ஏதுன்னு கேட்டேன்?"

"வாங்கினேன்டா... காசு கொடுத்து வாங்கினேன். உங்க ஹனிமூனுக்காக காஷ்மீர் சிம்லா போகத்தான்..."

"அது தெரியும்... ஏது பணம்?"

"நாமளோ நடுத்தட்டுக்கும் கீழே... நமக்கெல்லாம் ஃப்ளைட் கேக்குதாக்கும்."

"உன்னை ஏண்டா சேத்துக்கறே... நீ லட்சாதிபதி!"

"என்ன கிண்டலா?"

அவன் மடக்க, நரசிங்கம் திணறுகிறார்.

"கிண்டல்லாம் இல்லப்பா... எங்க காலத்துலதான் எதையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்கல. நீங்க ளாச்சும் அனுபவிக்கணும்னுதான் நான் சேத்து வெச்ச பணத்துல இந்த ஏற்பாடு செய்தேன்.

உன் மாமனாரும் மாமியாரும் கொடைக்கானல் போக ரயில் டிக்கட் வெச்சிருந்தாங்க. நான்தான் அதை மாத்தி இப்படிப் பண்ணினேன்."

"வேண்டாம் மாமா... முன்னையாச்சும் நான் வேலைல இருந்தேன். இப்ப அது கூட இல்ல. எதை எதையோ சொல்லி என்னை ஒரு பொண்ணு கழுத்துல தாலிகட்ட வெச்சுட்டீங்க.

கை நிறைய சம்பாதிச்சு முதலாளின்னு ஆன பிறகு தான் முதலிரவே கொண்டாடணும்;ம்னு இருக்கேன்... இப்ப எதுக்கு காஷ்மீரும் சிம்லாவும்...?"

- அவன் பேச்சு அவர் நெஞ்சையடைக்கிறது. 'முதலாளி ஆகும்வரை முதலிரவையே தள்ளிப் போடுவதா? அடப்பாவி...! இதற்கா இத்தனை சதி செய்து பொய் சொல்லி, சதுரங்கம் ஆடி கல்யாணத்தைச் செய்து வைத்தோம்?'

"இல்ல வேணு. நீ போகத்தான் வேணும். இப்பவே நீ முதலாளிதான். உன்னை நம்பிதான் உன் மாமனார் ஒரு ஒர்க் ஷாப் ஆரம்பிச்சிருக்கான். பையனும் அவனுக்கு இல்ல. நீ தானே அவனுக்கு மகன் - மருமகள் எல்லாம். தயவு செய்து பைத்தியமாட்டம் முடிவுகள் எடுக்காதே.

ஆசை ஆசையா கல்யாணம் செய்துகிட்டு வர்ற பெண்களுக்கு நிறைய ஆசைங்க இருக்கும்யா. அதெல்லாம் முத ராத்திரில ஈடேறணும்.

ஒரு மனுஷனுக்கும் முத ராத்திரி ரொம்ப முக்கியமான ராத்திரி. அதுல கட்டாயமா சந்தோஷம் இருக்கணும். அத வெச்சுத்தான் அவங்க வாழ்க்கை சந்தோஷமே அமையுது. இத மறந்துடாத பழைய குப்பைங்களக் கிளறாம நல்லபடி சந்தோஷமா இருக்கப் பாருய்யா. இல்லாட்டி என் நெஞ்சுதான் கிடந்து தவிக்கும். தப்பு செய்துட்டேன், தப்பு செய்துட்டேன்னு என்னைத் தூங்கவிடாது..."

பல விஷயங்களை உள்ளடக்கி ஒரு தவறு நடந்து விட்டது. அது மேலும் தவறாகி விடாதபடியாவது செய்வோமே என்று உண்மைகளை மென்று விழுங்கி பூடகமாகப் பேசியபடி கண்கள் கசிபவரை ஆச்சரியத்துடன் பார்க்கிறான்.



அதற்குமேல் அவரிடப் பேசும் திராணியும் அவனுக்கில்லை. ஏர் டிக்கெட்டை திரும்ப பட்டு வேட்டி மடிப்புக்குள் சுருட்டி, அடக்கி வேட்டியை பதமாக கட்டிக் கொள்கிறான்!

●●●

மதுரை விமான நிலையம்.

அலங்காரக் காரில் வந்து இறங்குகின்றனர் ஜோதி ஷங்கரும் அனுவும்... காரின் அலங்காரம் விமான நிலையத்தையே திரும்பிப் பார்க்க வைக்கிறது. பின்னாலேயே சாரிசாரியாக தர்மராஜின் பவிசைக் காட்ட கார்கள்.

அதில் அனு இண்டஸ்ட்ரீஸ் அதிகார வட்டத்திலிருந்து தர்மாஸ் கம்ப்யூட்டர் பாயிண்ட்டின் அதிகாரப் புள்ளிகள் வரை எல்லோரும். ஜோதியும் அனுவும் பயணிகள் தங்குமிடம் நோக்கி தர்மராஜனுடன் செல்ல; மற்றவர்கள் கை குலுக்கி ஹேப்பி ஜர்னி என்கின்றனர்.

ஊடே படபடவென்று டீசல் என்ஜின் சப்தத்துடன் ஊடாடி வந்து நிற்கிறது ஆட்டோ ஒன்று. அதில் இருந்து வசந்தாவும் வேணுவும் இறங்குகின்றனர். கூடவே நரசிங்கம் ஒரு பெரிய சூட்கேஸை சுமந்தபடி இறங்குகிறார்.

விமானநிலையம், அதன் அணுகுமுறைகள் எல்லாமே அவர்களுக்குப் புதியது. டிராவல் ஏஜென்சி டிக்கட் போட்டு தந்து விட்டனர். அதை இங்கே யாரிடம் கொடுக்க வேண்டும்? எப்படி விமானம் ஏற வேண்டும்? பஸ்ஸைப் போல விமானத்திலேயே டிக்கட்டைப் பெற்றுக்கொள்வார்களா? குழப்பியடிக்கிறது வேணுவுக்கு...

குஞ்சு புறா போல பட்டுப் புடவைக்குள் சுருண்டு தாழ்ந்து நட்டிக் கொண்டு நிற்கிறாள் வசந்தா.

"என்னய்யா... இப்படி நின்னுகிட்டிருந்தா எப்படி... யார் கிட்டையாவது கேளு..." - நரசிங்கம் உசுப்பிவிடும் போது, விமான நிலையப் பயணிகள் அறையிலிருந்து யாரையோ வழியனுப்ப ஜோதி வெளியே வருகிறாள். யாரைக் கேட்கலாம் என்று தேடிவரும் வேணுவின் தோளை உரசுபவனை வேணுவும் வற்றி நிறுத்துகிறான்.

"எக்ஸ்யூஸ்மீ..."

"யெஸ்..."

"நாங்க ஃப்ளைட்டுக்குப் புதுசு. டிக்கட் இருக்கு? எங்க போய் யாரைப் பார்த்து விமானம் ஏறணும்னு தெரியலை நீங்க?"

"நீங்க எங்க போறீங்க?"

"சிம்லா போகணும்."

"மை குட்னெஸ்! கல்யாண மாப்ளையா?"

"ஆமாம். நீங்க."

"நானும்தான். ஹனிமூன் பர்ப்பஸ்! நானும் சிம்லா போறேன். வாங்க என் கூட. நான் பார்த்துக்கறேன். ஆமா; உங்க மனைவி?"

"அதோ அங்க?" - கை காட்டுகிறான் வேணு.

விமான நிலைய வெளிப்புறம் போர்டிகோவை விட்டு தள்ளி கார்கள் வரிசையாக நிற்கும் ஒரு இடத்தில் நரசிங்கத்துடன் நிற்கும் வசந்தா வேணுவின் கை காட்டலைத் தொடர்ந்து, நிமிர்ந்து பார்க்கிறாள். ஜோதியுடன் வேணு நிற்பதைப் பார்த்து நெஞ்சில் இடி வாங்குகிறாள்.

அதை வெளியே வரும் தர்மராஜனும் பார்த்து விடுகிறார். பாய்ந்து வருகிறார்.



கடவுளே...!

# 23

***'விதியின் விளையாட்டைப் பார்க்க வேண்டுமா? காதலிப்பவர்களை தூரஇருந்து பாருங்கள். வெற்றி தோல்வி இடம் மாறி இடம் மாறி கண்ணாமூச்சி ஆடுவது படு சுவாரஸ்யம்!'***

**த**ர்மராஜிடம் ஓட்டமான ஓட்டம்!

விமான நிலையத்தின் ஒரு பாகமே திரும்பிப் பார்க்கிறது.

"ஜோதி இங்க என்ன பண்றே...?" - கேள்வி முன்வர, அவர் பின் வந்து சேருகிறார். அவன் வசந்தாவைப் பார்த்த அதிர்ச்சியில் அலமலந்து கிடக்கிறான்.

அவள் அவனுக்கு மேல்.

வேணுவுக்கு ஏதோ சிக்கல் என்பது மட்டும் புரிகிறது.

தர்மராஜ் சட்டென்று ஜோதியின் கையைப் பிடிக்கிறார். ஏதோ வெடிகுண்டு வெடிக்கப் போகும் பகுதியில் இருந்து ஓடித் தப்பிக்க முனைபவர் போல அவனை இழுத்துச் செல்கிறார்.

அதுவரை செயலிழந்து கிடந்த நரசிங்கமும் வேணுவை பிடித்து இழுத்துக்கொண்டு வசந்தா நோக்கி நடக்கிறார்.

"என்ன மாமா... அவர் தர்மராஜ்தானே?"

"ஆமாம் வேணு."

"விரோதியா என்ன..? எதுக்கு இத்தனை பதட்டம்?"

"அவரு... அவரு... அவர் பேர் தர்மராஜ், தர்மாஸ் கம்ப்யூட்டர்ஸ் கம்பெனி பத்தி கேள்விப்பட்டிருப்பியே?"

"தெரியுமே இப்ப என்ன அதுக்கு?"

"அது போகட்டும் விடு, கைல பணம் இருக்குல்ல."

"நிறைய..."

"சரி, வாங்க கிளம்புவோம். ஆட்டோ..."

"ஆட்டோவா... ப்ளைட்?"

"ப்ளைட்... ப்ளைட்... ப்ளைட் வேண்டாம் வேணு."

"என்ன மாமா திடீர்னு?"

"இந்த ஆள் மூஞ்சில் முழிச்சிட்டுப் போனா உருப்பட்ட மாதிரிதான். டிக்கட்டை கேன்சல் பண்ணிக்கலாம், நீங்க வாடகை கார்லகூட போங்க. ஃப்ளைட் வேண்டாம்."

நரசிங்கம் உளறத் தொடங்க வேணு வசந்தாவைப் பார்க்கிறான். அவள் கண்களில் நீரின் கூட்டம்.

"நீ ஏன் அழறே...?"

"அது... அது..." - அவளால் சொல்ல முடியவில்லை. நடுவில் ஒரு ஆட்டோவைக் கையசைத்துக் கூப்பிட, உரசி வந்து நிற்கிறது அந்த உலோக முக்கோண வாகனம்.

"ஏறுப்பா..."

"மாட்டேன். வேறு ஏதோ விஷயமிருக்கு. நீங்க பதட்டப்படறீங்க. இவ அழறா? அந்த ஆள்வேற இழுத்தடிச்சுக்கிட்டு கூட்டிக்கிட்டுப் போறான். சம்திங்ராங்..."

பிரச்சினை வெளியே மேடை போட முயற்சிக்க, வெயிட்டிங் ரூம் உள்ளேயும் அதே நிலை.



"இப்ப என்ன ஆச்சுன்னு இப்படி இழுத்துகிட்டு வரீங்க... ஃப்ளைட் கிளம்பத்தான் இன்னும் டயமிருக்குல்ல..."

"அது எனக்குத் தெரியும். அவன் நம்ம விரோதி, அதான் உன்னை நான் பேசவிடலை."

"விரோதியா? என்ன சொல்றீங்க... வசந்தாவும்ல கூட இருந்தா... அதுவும் கல்யாணப் பொண்ணாட்டம்."

"பேச்சவிடு. விரோதின்னா நோண்டாதே. சரின்னு கேள். அவளுக்கும் நேத்து கல்யாணம்கறது உனக்குத் தெரியாது."

"சரின்னு கேட்கவா...? நான் என்ன பால்புட்டிப் பாப்பாவா? அப்பா என்ன பேத்தல் இது?"

தர்மராஜ் குளித்த மாதிரி வியர்த்து, அவனை மேலும் கலவரப்படுத்துகிறார். அனுவிற்கும் ஏதோ விபரீதம் என்பது புரிகிறது. கூட சற்றுத் தள்ளி நின்றுகொண்டிருக்கும் அதிகார வர்க்கம் கையைப் பிசைய - ஒருவர் வெளியே வந்து எட்டிப் பார்க்க, வேணுவும் நரசிங்கமும் ஆட்டோமுன் தர்க்கம் செய்வது தெரிகின்றது. அவருக்குள்ளும் குழப்பம்.

ஊடே அறிவிப்பு காதைத் திருகுகிறது.

'பயணிகள் விமானத்திற்குள் ஏறலாம். இன்னும் 15 நிமிடத்தில் விமானம் வானெழும்பும்' - என்கிறது கவர்ச்சியான அந்த ஆங்கிலக்குரல்.

"இதோ பார் ஜோதி... ஹனிமூன் போறீங்க. இந்த விஷயத்தை எல்லாம் வந்து பேசிக்கலாம். டயமாச்சு கிளம்பு..."

- தர்மராஜ் துரிதப்படுத்துகிறார். கசங்கக் கசங்கப் பார்த்துக கொண்டு அனு பக்கம் திரும்புகிறான் அவன். அவள் எழுந்து கொண்டு தயாராய் நிற்கின்றாள்.

"நடங்க..." - தர்மராஜ் அவனைத் தள்ளி அவளோடு சேர்த்து, வெயிட்டிங்ரூமிலிருந்து விமான நிலையரன் வேக்குள் இறக்கிவிட்டு விட்டு, மின்னல் வேகத்தில் திரும்பும் போது வேணுவும் வசந்தாவுடன் உள்நுழைந்து கொண்டிருந்தான்!

வசந்தா அவரைப் பார்த்து விழிக்க,

"என்னம்மா கல்யாணம் நல்லபடியா முடிஞ்சிச்சா?"

"உம்..."

"வரமுடியல. தப்பா எடுத்துக்காதே. வாழ்த்துக்கள்! ஆமா எங்க கிளம்பிட்டீங்க?"

"சிம்லா... காஷ்மீர்..." வேணு பதில் தருகிறான்.

"ஓ. ஹனிமூன் டூரா?"

"உம் உம்... அண்ணனுக்கும் தங்கைக்கும் ஒரே நாள்ல கல்யாணம். இரண்டு பேரும் ஹனிமூனுக்கு ஒரே ஊருக்குப் போறீங்க..."

- மிகச் செயற்கையாகப் பேசிச் சிரிக்கும் அவரது ஏறிடலில், வெளியே போர்டிகோவில் செக்யூரிட்டி கார்டுக்குப் பின்னால் நரசிங்கம் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிகிறது.

"சரி சரி; கிளம்புங்க. டயமாச்சுல்ல. ஆல்த பெஸ்ட்!"

அவர் விட்டுவிட்டு வெளியில் வந்து நரசிங்கத்தைப் பார்க்கும்போது கண்கள் இருக்கும் இடத்தில் இரண்டு செர்ரிப் பழங்கள் இருந்தன. அத்தனை கோபச் சிவப்பு!



"என்னய்யா இது... உங்க ஜோடிகளுக்கு கொடைக் கானல் போறதுக்கில்ல ஏற்பாடு செய்திருந்தோம்?"

"வாஸ்தவம்தான். நான்தான் தமிழ்நாடே ஒரு வாரத்துக்கு வேண்டாம்னு..."

"நல்லா கதையைக் கெடுத்தீங்க போங்க... பார்த்துப் பார்த்து பண்ணி, கடைசில ரெண்டு ஜோடியையும் ஒரே இடத்துல சேர்த்தும் வெச்சுட்டோமே? ஏய்யா எங்கள தான் பார்த்துட்டீங்கல்ல... பிரிச்சு இழுத்துக்கிட்டுப் போகலாம்ல?"

"முடியல... நீங்க பதட்டப்பட்டதுதான் சிக்கலாப் போச்சு. நானும் பதட்டப்பட்டுட்டேன். ஏதோ விவகாரம்னு புரிஞ்சுகிட்டான் வேணு. விரோதி அது இதுன்னு சொன்னேன். அவங்களைத் திரும்பிப் போகச் சொல்லு. நாங்க ஏன் போகணும்னு சொல்லி விறு விறுன்னு கிளம்பிட்டான்."

"விரோதின்னீங்களா. போச்சுடா. நான் கல்யாண வாழ்த்தெல்லாம் சொல்லி வழிஞ்சிருக்கேன். கடவுளே இது எதுல போய் முடியும்னு தெரியலியே...?"

"அவரை ஏன் கூப்பிட்றீங்க? தப்புப் பண்ணது நாம..."

"பண்ணத தப்புன்னு சொல்லாதீங்க. இப்ப என்ன கெட்டுப் போச்சு?"

"ஒண்ணும் ஆயிடலை. பணம் பணத்தோட சேர்ந்துடிச்சு. இனம் இனத்தோட சேர்ந்திடிச்சி!"

"குத்தறீங்களே... இதுதான் எல்லாருக்கும் நல்லது. போகட்டும். அவங்களைத் தொடர்ந்து போகவிடக் கூடாது. ஒருத்தரை ஒருத்தர் பார்த்து பேசிகிட்டாங் கன்னா ரசாபாசம் ஆனாலும் ஆகலாம்...!"

"என்ன பண்ணப் போறீங்க?"

"அதச் சொல்லமாட்டேன். செய்வேன்"

"வேண்டாம் விடுங்க. எதுவும் ஆயிடாது."

"அப்படி நம்ப நான் முட்டாள் இல்ல. இந்த ஜோடிங்க இவங்க வாழ்க்கைல இனி எங்கேயும் பார்த்துக்கக் கூடாது. அந்த மாதிரி பண்றேன்."

"உங்க பணத்தால நீங்க இன்னும் என்னதான் பண்ணப் போறீங்களோ...?"

பெருமூச்செறிகிறார் நரசிங்கம், தாடியே பொசுங்குமளவு...

தர்மராஜ் அங்கிருந்து நகர்ந்து நேராக தன் கார் நிற்குமிடத்திற்குச் செல்ல சூழ்ந்து கொள்கின்றனர் சிலர்.

"என்ன சார் டென்ஷனா இருக்கீங்க. ஏதாவது ப்ராப்ளமா?"

"ஆமாம். என் பையனும் மருமகளும் இந்தஃப்ளைட்ல போகக் கூடாது. உடனே தடுக்கணும்."

"என்ன சார் இது? வழியனுப்பி விட்டு வந்து தடுக்கணும்கறீங்க..."

"தடுக்கறது நான்கறது தெரியக்கூடாதுய்யா, புரிஞ்சுகிட்டுப் பேசுங்க."

"ஏன் சார்?"

"விளக்க நேரமில்ல. கமான்... அஞ்சு நிமிஷத்துல ஃப்ளைட் கிளம்பப் போகுது. அதுக்குள்ள அவங்களக் கீழே இறக்கணும்."

- அவர் கைபிசைந்து பதற, அவர்கள் தாடை வருடி யோசிக்க, ஒருவர் பிரகாசிக்கிறார்.



"சார் ஒரு ஐடியா...!"

"என்ன?"

"நம்ம மேடத்துக்கு ஜமீன் உங்க மிஸஸ்க்கி ஹார்ட் அட்டாக்னு சொல்லி ஸ்டாப் பண்லாமா?"

"ஹார்ட் அட்டாக் வேண்டாம். வெரி வீக் ஐடியா! வேற ஏதாவது...?"

"நம்ம கம்ப்யூட்டர் பாய்ண்ட்ல தீ விபத்துன்னு சொல்லி..."

"குட் வெரிகுட். நீ இப்பவே போய் ஒரு கம்ப்யூட்டர், கொஞ்சம் ஃபைல எரிச்சு செயற்கையா ஒரு ஆக்சிடெண்ட் கிரியேட் பண்ணு. மிச்சத்த நான் பார்த்துக் கறேன்.'

தர்மராஜ் செல்போனை எடுத்து காதில் வைத்துக் கொண்டு, பரபரப்பாக விமான நிலைய அதிகாரியைப் பார்க்க நடக்கிறார்.

நரசிங்கம் பார்த்துக்கொண்டே நிற்க, விமானத்தின் உள்ளே... சற்று குழம்பிப் போய் அமர்ந்திருக்கிறான் ஜோதி. அவனுக்கு முன் வரிசையில் கூந்தல் மல்லிகையை அவனுக்கு நுகரக் கொடுத்தவளாக வசந்தா. பக்கத்தில் வேணுவை அனு துளிகூட எதிர்பார்த்திருக்கவில்லை. பட படக்கும் இதயத்துடன் தலையைத் தாழ்த்திக் கொண்டு தலைவலிக்கும் பாவனையை அவள் காட்டும் போது ஜோதியின் செல்ஃபோன் சிணுங்குகிறது.

"யெஸ் ஜோதி ஸ்பீக்கிங்!"

"பெஸ்ட் விஷஸ் சார். நான் ரமேஷ் பேசறேன். நம்ம கம்ப்யூட்டர் பாய்ண்ட்டல இருந்து..."

"தேங்க்யூ ரமேஷ். ஆபீசைப் பார்த்துக்குங்க. ஒரு பத்து பதினைஞ்சு நாள்ல வந்துடுவேன்."

"மெல்ல வாங்க சார். ஒரு சந்தோஷ விஷயம் சார். அதுக்குதான் போன் பண்ணேன்."

"சொல்லுங்க."

"நம்ம கம்ப்யூட்டர் பாய்ண்ட்டை, மதுரையோட நம்பர் ஒன் கம்ப்யூட்டர் பாய்ண்ட்டா மதுரை சிடிக்ளப்ல தேர்ந்தெடுத்திருக்காங்க!"

"ஓ... குட்! தேங்க்யூ ரமேஷ்!"

"சாருக்குச் சொல்லவும் ட்ரை பண்ணேன். அவர் செல்ஃபோன் எங்கேஜ்டா இருந்தது. உங்களுக்கு ட்ரை பண்ணே, லாக் ஆயிடுச்சு!"

"அப்பா இப்பதான் ட்ராப் பண்ணிட்டு போனார். கார்ல வந்துகிட்டிருப்பார்."

"ரைட் சார்... நான் பார்த்துக்கறேன். ஹேவ் எ நைஸ் ஹனிமூன் சார்."

"தேங்க்யூ தேங்க்யூ..."

அவன் நன்றியறிவிப்புடன் செல்ஃபோனை முடக்கி பாக்கெட்டில் திணிக்கும்போது கேபினில் இருந்து அவனுக்கான பிரேத்யேக அறிவிப்பு ஒலிக்க ஆரம்பித்தது.

"மிஸ்டர் ஜோதிஷங்கர்... ப்ளீஸ் கெட் அவுட் ஆஃப் திஸ் க்ராப்ட் - அண்ட் மீட் த ஏர்போர்ட் ஆபீசர் இம்மீடியட்லி."

திடுக்கிட்டு நிமிர்கிறான் ஜோதி. அனுவும்.

திரும்பிப் பார்க்கிறான் வேணு!

அடுத்து...



# 24

***காதல்!***

***வயப்பட்டவர்களுக்கு இது கற்கண்டு***

***மற்றவர்களுக்கோ இது கல்துண்டு!***

புறப்பட்டுவிட்ட ஜோதியும் அனுவும் வசந்தா வயிற்றில் பாலை வார்க்கிறார்கள். ஆனால் வேணு விற்கோ அது வேறு மாதிரியான தாக்கங்களை உருவாக்குகிறது.

ஒரு சில வினாடிகள்தான். 'நரசிங்கம் பேசியது - தர்மராஜ் ஐந்து ஜோதியைப் பிடித்து இழுத்துச் சென்றது ஜோதியைப் பார்த்தது முதலே வசந்தா வியர்த்து வடிவது எல்லாவற்றுக்கும் மேலாக, அவன் அனுவின் கணவனாக இருப்பது என்று எல்லாமே வேணுவையும் பிசைந்ததில் அவனாலும் உள்ளே உட்கார முடிய வில்லை.

பக்கவாட்டில் ஓவல் டைப் கண்ணாடி வழியே பார்க்கிறான், விமான நிலைய ரஸ்தாவில் அனுவும் ஜோதியும் இறங்கி நடந்து கொண்டிருக்கின்றனர்.

- சட்டென்று வேணு வசந்தாவைப் பார்க்கிறான்.

"வசந்தா... புறப்பட்டதுல இருந்தே எதுவும் சரி யில்ல - எனக்கும் மனசு நல்லால்ல. நாமளும் இறங்கிட லாமா?"

- இப்படிக் கேட்கமாட்டானா என்று காத்திருந் தவள் போல, அவளும் தலையசைத்து எழுகிறாள்.

"எக்ஸ்யூஸ்மீ" - அவன் ஏர்ஹோஸ்டஸை அழைத்து எதையோ சொல்கிறான்.

அவள் ஒரு மாதிரி பார்க்கிறாள். ஏதோ சொல்ல வந்து பின் "வித் ப்ளெஷர்" என்கிறாள்!

அந்த ஜோடிகளும் இறங்க ஆரம்பிக்கின்றனர்.

ரஸ்தாவில் விறுவிறுப்பான நடை.

கையாட்டி விடை கொடுப்பதாகக் காத்திருக்கும் நரசிங்கம், இருவரும் திரும்பி வருவதைப் பார்த்து விமான நிலையம் என்றும் பாராமல் தலையில் கை வைத்துக் கொள்கிறார்!



கல்யாணத்திற்கு வந்தவர்கள் ஒவ்வொருவராகக் கிளம்பிச்சென்று கொண்டிருக்க, அவர்களுக்கு வெற்றிலை தேங்காய் வைத்துக் கொடுத்து வள்ளியம்மையும் வழியனுப்புவதில் மும்முரமாய் இருக்கிறாள்.

அவ்வப்பொழுது அண்ணாந்து அண்ணாந்து வானத்தைப் பார்க்கிறாள். மாணிக்கமும் பார்க்கிறார். கூடவே சிகரெட் புகையுடன்.

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்க, விமானம் அம்பு போட்டதுபோல ஒரு ஈசல் பூச்சியாட்டம் கண்ணுக்குத் தெரிகிறது.

"இந்த ஏரோப்ளேனு தானுங்களே?"

"இதேதான். இதேதான்..."

"எப்படியோ நினைச்சதைச் சாதிச்சிட்டீங்க."

"இப்பதான் வள்ளி நிம்மதியாயிருக்கு."

"ஆமாங்க! செத்து செத்துல்ல பொழைச்சேன். எவ்வளவு பொய் எவ்வளவு பொய்..."



"அப்படிச் சொல்லப் போய் ட்ராமா போட்டதால தானே இன்னிக்கு நம்ம பசங்களும் வானத்துல பறக்க முடிஞ்சிருக்கு..."

"இனி தப்பா எதுவும் ஆயிடாதுதானே?"

"எப்படி ஆகும்...? இல்ல எப்படி ஆகும்னு கேக்கறேன்..."

"இல்ல, ஒரு பேச்சுக்குக் கேட்டேன்."

"வாயவெச்சுகிட்டு சும்மா இரு. அதான் தாலியக் கட்டிட்டானல? புருஷன் பொண்டாட்டின்னு ஆயாச் சுல்ல. இங்க மட்டுமா? அங்கேயும் அதே கேஸ்தான்."

"தர்மராஜும், மயில்வாகனமும் எப்படிப்பட்ட பார்ட்டிங்க. அதை யோசிச்சுப் பார்த்தியா நீ?"

"என்னவோ... தப்பு மேல தப்பு பண்ணி கல்யாணத்தையும் பண்ணி வெச்சுட்டோம். இதுங்க நல்லவிதமா சந்தோஷமா வாழ்ந்தா அதுவே போதும்."

"ஒரு பக்கம் போதும்னாலும், மறுபக்கம் நீ சந்தேகப்பட்றத பார்த்தா நீயே எல்லாத்தையும் போட்டு உடைச்சாலும் உடைச்சிடுவே போல தெரியுதே? வாய மூடிகிட்டு உன் வேலையப் பாரு. எது வந்தாலும் நான் சமாளிச்சுக்கறேன்."

- மாணிக்கம் படபடக்கிறார். கப்கப் என்று சிகரெட் புகையை உமிழ்ந்துகொண்டே, கட்டியிருக்கும் புதிய வேட்டி துண்டால் முகத்தைத் துடைத்துக் கொள்கிறார்.

வள்ளி வார்த்தைகளில் கேட்டது அவருக்குள் மனதைக் கொத்துகிறதோ இல்லை கொளுத்துகிறதோ... உடம்பு நடுங்கத் தொடங்கிவிட்டது.

போட்டது போட்டபடி கிடக்கும் வீட்டில் தம்பதிகளுக்கென வாங்கிய பட்டு மெத்தைகள் இரண்டும் ஒரு திண்டாக ஒரு மூலையில் வைக்கப்பட்டிருக்கிறது. அதன் மேல் போய் தட்சிணாமூர்த்தி போல கால் மேல் கால் போட்டபடி அமருகிறார்.

"வள்ளி... ஒரு வேளை நாளப் பின்ன நம்ம ட்ராமால்லாம் தெரிய வருதுன்னே வை... ஒரு பேச்சுக்குத்தான். என்ன பண்ண முடியும்கறே? ஒண்ணும் பண்ண முடியாது. அதான் தாலியக் கட்டிட்டாங்கல்ல?"

மாணிக்கம் ஒரு அரைக் கிறுக்கனைப் போலத்தான் அந்த நொடியில் தெரிகிறார். இதைத்தான் மனித மனம் என்கிறார்களோ?

"என்ன... ஒரு நாலு நாளைக்கு நம்ம மாப்ள பய கத்துவான். மூஞ்சியத் தூக்கி வெச்சுக்குவான். வசந்தாவும் டம்முடிம்முன்னு பாத்திரத்தப் போட்டு உடைப்பா. நாலு நாள்... நாலே நாள்! அப்புறம் எல்லாம் சரியாயிடும். சரியாகித்தானே தீரணும்?

குழந்தை குட்டின்னு வேற ஆயிடும். அப்பால அடிச்சு உருண்டுகிட்டு பழையபடி தலையைப் போட்டு பிராண்டிகிட்டிருந்தா கதையாகுமா?

நான் ஒரே வார்த்தைல முடிச்சிடுவேன்.

'வேணு... நீதான் என் மாப்ளையா வரணும்னு நான் நினைச்சேன் இல்ல ஆசைப்பட்டேன். உங்கம்மா வேற என்கிட்ட சத்தியம் வாங்கியிருந்தா அந்த சத்யத்தக் காப்பாத்த தான்யா அப்படி எல்லாம் நடிச்சோம்'னு சொல்வேன். அதுலையும் சமாதானமாகாட்டி கால்ல விழுந்துட்டுப் போறேன்.



என்ன இப்ப...?

என் மாப்ள கால்லதானே விழப் போறேன்?

விழுந்துட்டுப் போறேன்...'

- நெஞ்சு நாலங்குலத்துக்கு நிமிரும் வண்ணம் புடைத்தெழ, மெத்தை மேல் அமர்ந்து புலம்பும் மாணிக்கம் டென்ஷன் தாளாமல் அடுத்த சிகரெட்டுக்குத் தாவுகிறார். அதற்கெல்லாம் அவசியம் வந்துவிட்டது அநிச்சையாகப் புரிகிறதோ என்னவோ?

வள்ளி வேகமாக வந்து வாயில் செருகியதைப் பிடுங்கிக் கசக்கி எறிகிறாள்,

டென்ஷனா இருக்கேன்ல... கத்துகிறார் மாணிக்கம்.

"குத்தமுள்ள நெஞ்சு... அதான் நடக்கறதுக்கு முந்தியே நடந்துட்டா என்ன பண்றதுன்னு நினைச்சு பயந்து நடுங்குது. நல்ல வேளை... கல்யாணத்துக்கு வந்தவங்கல்லாம் கிளம்பிப் போயிட்டாங்க. இல்ல, உங்க பெனாத்தலைப் பார்த்து வேற மாதிரி நினைச்சிருப்பாங்க."

- அவள் வீட்டை ஒழித்தபடி பேசப் பேச, அவரது கரங்கள் அந்த சிகரெட்டுக்குச் செல்கிறது.

திரும்பவும் பிடுங்க முன் வருகிறாள் வள்ளியம்மை.

"வேண்டாம் வள்ளி... பிடுங்காதே. என் மனசே சரியில்ல..."

"அப்ப எனக்கும் ஒண்ணு கொடுங்க. ரெண்டு பேரும் சேர்ந்து ஊதுவோம்."

"வேண்டாண்டி... விளையாடாதே..."

"ஆமாம்! நமக்கு இப்பதான் கல்யாணம் ஆகியிருக்கு விளையாடறதுக்கு...!" - சொல்லியபடி திரும்ப சிகரெட்டைப் பிடுங்கப் பார்க்கிறாள்.

"வேண்டாம் சொன்னாக் கேளு...."

"இப்படி சிகரெட் பிடிச்சா, ட்ராமால போட் டுங்களே ஹார்ட் அட்டாக்-அது நிஜமாலுமே வந்துடும்."

"வரட்டும். நீ போய் உன் வேலையப் பாரு."

- சொன்ன வேகத்தில் தீக்குச்சிச்சுடர் அந்தப் புகையிலைக் குச்சியின் தலைப்பாகத்தில் பற்றுகிறது. மூக்குத் துவாரம் வழியாக புகை பீறிடுகிறது.

வள்ளி அதைப் பார்த்து கடுரமாகிறாள்.

வெடுக்கென்று மாணிக்கம் கையில் உள்ள சிகரெட் பாக்கெட்டைப் பிடுங்கி தானும் ஒரு சிகரெட்டை எடுத்து வாயில் வைத்துக் கொண்டு தீப்பெட்டிக்காக மாணிக்கத்தின் மற்றொரு கையைப் பார்க்க, மாணிக்கம் அதிர்ந்து போய் என்ன நினைத்தாரோ... சட்டென்று தானே தீக் குச்சியை உரசி அவளது வாயில் இருக்கும் சிகரெட்டுக்கு நெருப்பு வைக்கிறார்.

அவளுக்கு உறிஞ்சத் தெரியவில்லை.

நெஞ்சில் கமறல் ஏற்பட்டு இருமல் வருகிறது.

"ஏண்டி இருமறே... பிடிடி பார்ப்போம்... நானே பத்த வெச்சுட்டேன்... எங்க புகை விடு பாப்போம் விடுடி... விடுடின்னா..." அவர் அதட்ட அவள் உணர்ச்சி வசப்பட்டு கன்னங்குழியுமளவு உறிஞ்சி கசாமுசாவென்று புகைவிட கண்ணெல்லாம் கலங்கிப்போய் அந்தப் புதிய அனுபவம் அவளை ஏதேதோ செய்யும்போது...



"சபாஷ் அத்த... சபாஷ் மாமா!" என்றொரு பாராட்டு!"

- திரும்பினால் வேணு!

- கூடவே வசந்தா நரசிங்கம்!



**க**ம்ப்யூட்டர் பாய்ட்டின் எரிந்த ஃபைல்களையும் கம்ப்யூட்டர்களையும் பார்த்துவிட்டு வந்து சீட்டில் விழுகிறான் ஜோதி.

கல்யாணத்திற்கெனத் தைத்த புதிய சஃபாரி சூட் அத்தர்வாசம் சுமக்கிறது.

எதிரில் நிதானமாய் கண்மூடி தீவிர சிந்தனையில் இருக்கும் அவனையே பார்த்தபடி வந்தமர்கிறார் தர்ம ராஜ். வடவே மயில்வாகனம்.

"என்னய்யா... நல்ல நாளும் அதுவுமா இப்படி ஆயிடிச்சேன்னு நினைச்சு வருத்தப்பட்றியா?' மிக இதமாக பட்டிமைக் குரலில் வருடத் தொடங்குகிறார் தர்மராஜ்.

"இருக்காதா மாப்ள... ஆமாம் இன்சூரன்ஸ் ரெகவரி இருக்குல்ல?" மயில்வாகனம் நஷ்டமெல்லாம் இல்லை என்பதை அப்படிக் கேட்டுச் சொல்லப் பார்க்கிறார்.

"அப்படியே இல்லைன்னாலும் கவலையில்ல மயில் வாகனம். எரிஞ்சதெல்லாம் தூக்கி எறிய வேண்டிய பிசிங்கதான். ஒண்ணும் நஷ்டமில்ல. நான் திருஷ்டி கழிஞ்சிச்சுன்னுதான் நினைக்கறேன். என்ன சொல்றே?"

"ஆமா! அவசர அவசரமா கல்யாணம் பண்ணாலும் அசத்திப்புட்டோம்ல. மத்தியான நியூஸ்கூட சொன்னாங்கப்பா. அப்ப எவ்வளவு கண்ணு விழுந்திருக்கும்?"

இரண்டு பெரியவர்கள் மட்டுமே மாறி மாறிப் பேசிக் கொள்கிறார்கள். ஜோதி மூடிக் கொண்டிருக்கும் கண்களை மெல்லத் திறக்கிறான்.

"அப்பா... மாமா... ப்ளீஸ் லீவ் மீ அலோன்.'

- அவர்கள் சற்று அதிர்ந்தாலும் சமாளிக்கின்றனர்.

"வா மயில்வாகனம் ஜோதி மூட் அவுட் ஆயிட் டான். எல்லாம் கொஞ்சநேரம் போனா சரியாயிடும்... வா நாம வெளிய போவோம்..."

- தர்மராஜ் கெத்தாகச்சமாளித்து அறைக்கு வெளியே வருகிறார். அடுத்த நொடியே இன்டர்காமில் 'ரமேஷ்' என்கிறான் ஜோதி.

"யெஸ் சார்."

"உக்காருங்க..."

"பரவால்ல சார்..."

"சும்மா உக்காருங்க. எனக்கு இந்த மாதிரி பயந்த பணிவெல்லாம் பிடிக்காதுன்னு தெரியும்தானே?"

ரமேஷ் உட்காருகிறான்.

"நீங்கதானே செல்போன்ல நமக்கு விருது கிடச்ச தகவலைச் சொன்னது?"

"ஆமாம் சார். அது உண்மை சார்!"

- ஜோதி லேசாகச் சிரிக்கிறான்.

"நான் பொய்யுன்னு சொன்னேனா ரமேஷ். நான் கேக்க வந்ததே வேற!"

"கேளுங்க சார்."

"ஆமா எப்ப ஃபயர் ஆக்சிடென்ட் ஆச்சு?"



"கொஞ்சம் முந்திதான் சார்."

"எக்ஸாக்டா சொல்லணும். எத்தனை மணிக்கு?"

"அது... அது..."

"என்ன ரமேஷ்...? டயம் சொல்லத் தெரியாதா உங்களுக்கு?"

"இல்ல சார்... அப்ப நான் வெளிய போய்ட்டேன்..."

"அப்ப நீங்க செல்ஃபோன்ல என்கிட்ட பேசினது?"

"வெளிய இருந்து சார்."

"ஸோ, ஃபயர் ஆக்சிடென்ட் ஆகும்போது நீங்க இங்க இல்லை... அப்படித்தானே?"

"அ... ஆமாம் சார்."

"குட்....! நம்ம ஆபீஸ் ஃபோன் நம்பர் என்ன?"

"701900"

ஜோதி உடனே தன் செல்ஃபோனை எடுத்து, அதன் மெமரியைத் தட்டிவிட, அதில் அந்த எண்கள். அதை அப்படியே ரமேஷ் எதிரில் நீட்டிக் காட்டு கிறான்.

"என்ன பாக்கறீங்க...? செல்ஃபோன்ல ஒரு வசதி ரமேஷ் எந்த நம்பர்ல இருந்து நமக்கு கால் வருதுன்னு தெரிஞ்சுகிட்டு பேசலாம். நீங்க பேசின ஃபோனோட நம்பர்தான் இது. ஒருவேளை வெளில யாராவது இதே நம்பர்ல போன் வெச்சிருக்காங்களோ?"

- ஜோதியின் நைச்சியமான அதே சமயம் கோபம் பூசிய அந்த வளைப்பில் வெளிறிப் பார்க்கிறான் ரமேஷ்.

"சார் ஐ ஆம் வெரி சாரி சார்! நான் உள்ளே இருந்து தான் பண்ணினேன். இங்கே என்ன நடந்த துன்னா..."

"குட்! அதான் எனக்கு வேணும். என் அப்பா என் காதுல ஏகத்துக்கும் பூ சுத்தியிருக்கார். அது ஏன்னு எனக்குத் தெரிஞ்சாகணும்?"

- ரமேஷ் விவரித்து முடிக்கிறான்.

"சரி; நீங்க போகலாம்."

"சார்."

"நோ ப்ராப்ளம். உங்க வேலைக்கோ, உண்மைக்கோ ஒரு பாதிப்பும் வராது."

"தேங்க்யூ சார்!"

அவன் அகல ஜோதி எழுந்து பின் பாகம் வழியாக வெளியே பார்க்கிறான்.

மீனாட்சியம்மன் கோவில் கோபுரம் பளிச்சிடு கிறது. அதைச் சுற்றிலும் புறா வட்டம்.

கோவிலில் வசந்தாவைச் சந்திக்கச் சென்றதும், அவ்வேளையில் அனுவைப் பார்த்து அவளோடு சேர்ந்து கொண்டதும் நினைவில் எழுகிறது.

"சன்னதியிலேயே மாறிப் போனோம். அதனால் தான் வாழ்க்கையிலும் மாறிப் போனோமோ?"

கண்கள் பனிக்க பார்த்துக் கொண்டே நிற்கிறான்.

கத்தரிக்கிறது தொலைபேசி. சலிப்போடு திரும்பி காதுகளைக் கொடுக்கிறான்.

"ஜோதிஷங்கர் தம்பிதானே?"



"ஆமாம்! நீங்க...?"

"என் பேர் முத்துசாமி தம்பி. உங்கள நான் அவசியம் பாக்கணுமே..."

"என்ன விஷயம்?"

"அத நேர்ல சொல்றேனே..."

"சரி. வாங்க."

"நான் வர முடியாது தம்பி. நீங்கதான் என்னைக் காப்பாத்த வரணும்."

"என்னங்க சொல்றீங்க?"

"ஆமாம் தம்பி; உங்கப்பா என்னை இப்போ உங்க குடோன்லதான் போட்டு பூட்டி வெச்சிருக்கார். எனக்குக் காவல் இருக்கறவன் கொஞ்சம் அசந்த நேரத்துல குடோன் ஆபீஸ் போன் மூலமாதான் இப்ப உங்களோட பேசிக்கிட்டிருக்கேன்."

"நெஜமாவா?"

"வந்து பாருங்களேன் தெரியும். ஒண்ணு மட்டும் சொல்றேன் தம்பி. உங்கப்பா மாதிரி ஒரு அயோக்யனை இந்த இந்தியா பூரா தேடினாலும் பார்க்க முடியாது! கொஞ்சம் நேர்ல வந்து என்னைக் காப்பாத்துங்களேன்... உங்களுக்குக் கோடி புண்ணியம்..."

"இதோ இப்பவே வரேன்..."

- ஜோதி அடுத்த நொடி புயலாகிறான்.

# 25

*'காதல் அமிர்தமயமான உணர்ச்சிதான் வாலிபத்துக்கு... அதுவே ரோகமாகிப் போகிறதே மற்றவர்களுக்கு...'*

குடோன் முன் சிறியபடி வந்து நிற்கிறது அந்த அரக்கு நிற பியூஜியட், எட்டிப் பார்க்கும் வாட்ச் மேனுக்கு கால் நரம்பே அறுந்து போகிறது - இறங்கு கிறான் ஜோதி ஷங்கர்.

"வணக்கம் சார்."

"உள்ற யார் இருக்கா?"

"உள்றையா? யா... யாரும் இல்லீங்களே..."

"எங்க... வா.. காட்டு பாப்போம்."

- கல்யாண சஃபாரி சரசரக்கும் நடை. வாட்ச் மேனிடம் பதட்டம். உள்ளே நுழையவும் சில லுங்கி மனிதர்கள் சுவாரஸ்யமான சீட்டுக் கச்சேரிக்கு நடுவில் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருக்கின்றனர்.

"சார்...!"

"யார்யா நீங்கள்லாம். சீட்டாட இதென்ன க்ளப்பா?"

"இல்லீங்க... சும்மாதான்..."

"ஆமாம்-பூட்டின அந்த ரூமுக்குள்ள யார் இருக்கா?"

"அது... அது..."

"எனக்கு எல்லா சனியனும் தெரியும். கதவைத் திறந்து அந்த ஆளை வெளிய இழுத்துகிட்டு வாங்க."



அவர்கள் தயங்கித் தயங்கி கதவைத் திறக்கவும் கும்பிட்ட நிலையில் முத்துச்சாமி. கண்ணிரண்டில் துளி ஈரமும் கூட....

"ரொம்ப நன்றி தம்பி... என் போன் காலுக்கு இவ்வளவு சீக்கிரமா ஒரு விமோசனம் கிடைக்கும்னு நானே எதிர்பார்க்கலை..."

"என் கூட வாங்க... உங்ககிட்ட நான் நிறைய பேச ணும். வாங்க முதல்ல ஒரு ஹோட்டலுக்குப் போவோம். நீங்க சரியா சாப்பிடலைன்னு நல்லா தெரியுது."

"சாப்பிடவேயில்லை தம்பி..."

அடுத்த நொடி காரில் ஏற்றிக்கொண்டு பறக்கிறான்.

பார்த்துக் கொண்டேயிருப்பவர்களில் ஒருவன் போன் செய்து விஷயத்தை தர்மராஜிடம் சொல்ல ஓடுகிறான்.



ஹோட்டல் நளா!

ஸ்பெஷல் மீல்ஸ் பிளேட்டுகளால் டேபிளில் வழிசல் செயற்கையான அரை இருட்டுச் சூழ்நிலை.

"சொல்லுங்க! அப்பா ஏன் உங்கள குடோன்ல போட்டு பூட்டி வெச்சார்...? என்ன காரணம்?"

ஜோதி ஷங்கர் கேட்டதற்கு முத்துச்சாமியும் முழு விபரத்தையும் சொல்லி முடித்தாயிற்று. அதன் எதி ரொலி தானோ என்னவோ ஜோதியிடம் இறுக்கம்.

"இதெல்லாம் பெரிய கொடுமை தம்பி... காதலுக்கு எதிரா இந்தப் பணக்காரங்க புத்தி ஏன்தான் இப்படிப் போகுதோ.. உறவு முறைகளையே மாத்தி இவங்க போட்ட நாடகம் இருக்கே... அது பெரிய கொடுமை..."

முத்துச்சாமியிடம் இன்னமும் வருத்தம் குறையவே இல்லை.

"ஆமா... கல்யாணம் ஆயிடுச்சா?"

"உம்."

"கடவுளே... அதுக்கு முந்தியே உங்களுக்கு போன் பண்ண முடியாமப் போயிடிச்சே..."

"தட்ஸ் ஆல் ரைட் இப்பவாவது உண்மை தெரிய வந்ததே."

"தம்பி, எனக்கு இன்னொரு உதவியும் உடனடியா ஆகணும்."

"என்ன வேணும் சொல்லுங்க?"

"என் பொண்டாட்டி ஆஸ்பத்திரியில இருக்கா எப்படி இருக்காளோ என்ன பண்ணிகிட்டிருக்காளோ... உடனடியா பாக்கணும்."

"இதை ஏன் முதல்லையே சொல்லலை?"

"யோசிக்கக் கூட தெம்பு இல்லாமல் இருந்தேன்? என்னை அந்தநிலைல என் பொண்டாட்டி பார்த்தா என்னவோ ஏதோன்னு பதறிப் போயிடுவா. அதுலையும் அவ உடம்பு இப்படி இருக்கற நிலைல..."

"கிளம்புங்க... முதல்ல ஆஸ்பத்திரிக்குப் போவோம்."

- அவன் ஒரு நூறு ரூபாய்த்தாளை டேபிளில் வைத்துவிட்டு எழுகிறான்.

**த**லை தாழ்ந்து போய்க் கிடக்கிறது நரசிங்கத்திடம் எதிரில் வசந்தா முதல் எல்லோருமே...



ஒரு புயல் அடித்து ஓய்ந்தது போல் ஒரு நிலை. மாணிக்கம் அதில் நிமிர்ந்தெழப் பார்க்கிறார். வேணுவிடம் நெருங்கி...

"மாப்ள..."

"என்ன...?"

"நடந்தது நடந்து போச்சு இனி நடக்கவேண்டியதைப் பார்ப்போமே?"

"நிச்சயமா இனி நடக்க வேண்டியதத்தான் பாக்கணும். அதுல என்ன சந்தேகம்? மாமா இப்படி குனிஞ்ச தலையோடையே இருந்தா எப்படி...?"

- நரசிங்கம் நிமிர்கிறார். கண்களில் பனித்திரை.

"வேண்டாம் மாமா. அழுதெல்லாம் என்னை இனியும் ஏமாற்ற முடியாது. எங்க கல்யாணத்தைச் சுற்றி பல புதிர்கள் அடங்கியிருக்கு. அதை நீங்களா அவிழ்த்துட்டா எல்லாருக்கும் நல்லது. இல்லேன்னா..."

"ஒரு புதிரும் இல்ல தம்பி. வசந்தாக்கு நீங்க, உங்களுக்கு வசந்தாங்கறதுதான் சிறு பிராயத்துலையே செய்த முடிவாச்சே... அதைத்தானே ஈடேத்தியிருக்கோம்?"

"அப்படியா அத்தை... அப்ப எதுக்காக உங்க பொண்ணு அந்த தர்மராஜன் மகனைப் பார்த்து வேர்த்து விறுவிறுத்துப் போனா...?"

"அவன் அவளோட அண்ணன் தம்பி என் கூடப் பிறந்தவளோட மகன் அவன்."

"அண்ணனைப் பார்த்தா வேர்க்குமா?"

"அது... அது..."

"சரி; எங்களைப் பார்த்து அவங்க-ஏன் பிளேனை விட்டு இறங்கிப் போனாங்க?"

"அவங்களுக்கு என்ன சங்கடமோ?"

"நிச்சயம் நாங்கதான் சங்கடம். அதுல சந்தேக மில்லை."

- பேச்சுக்குப் பேச்சு வளர்ந்து கொண்டே போக, நரசிங்கம் அனைத்தையும் சொல்லிவிடும் முடிவுக்கு வருகிறார். அதனாலோ என்னவோ அந்த பத்து லட்ச ரூபாய் உள்ள சூட்கேசும் இப்பொழுது அவர் கைகளில்.

"என்ன மாமா இது சூட்கேஸ்...?"

"சொல்றேன்பா. இனியும் இந்தப் பாவிங்களோட சேர்ந்து நான் தப்பு மேல தப்பு பண்ணத் தயாரா யில்லை..."

"அண்ணே... வேண்டாம் சும்மா இருங்க..." மாணிக்கம் இடையில் புகுந்து கத்துகிறார். நரசிங்கம் அவர் பக்கம் அனல் பார்வையோடு திரும்பவும் அவரிடம் அடங்கல்.

"மாணிக்கம், இனியும் உன் பேச்சு நான் கேட்கப் போறதில்லை. நீயும் அந்தப் பணக்கார பெரிய மனுஷ னும் ஐந்தாண்டுத் திட்டம் மாதிரி பிளான் பண்ணி, நம்ம வசந்தாவை அந்த ஜோதிகிட்ட இருந்து பிரிச்சீங்க. அதே மாதிரிதான் வேணுவையும் அனுகிட்ட இருந்து பிரிச்சாங்க. எப்படியோ திண்டாடித் தடுமாறி பிரிச்ச ஜோடிங்கள இடம் மாத்தி கல்யாணமும் பண்ணி வெச்சீங்க.

"ஆனா, கடவுள் அவங்க பக்கம்தான் இருக்கிறார். இல்லேன்னா கல்யாணம் முடிஞ்ச மறுநாளே அவங்க



ஒருத்தலை ஒருத்தர் பார்த்துகிட்டோ பதட்டப்பட்டோ இருக்க மாட்டாங்க. யாரை யார் பார்த்துக்கக் கூடாதுன்னு நினைச்சோமோ அவங்களே ஒருத்தரை ஒருத்தரும் பார்த்துக்கிட்டாங்க.

எது பிரச்சினையா வரும்னு நினைச்சீங்களோ, அதைப் பத்தியே நீங்க இரண்டு பேரும் இங்க பேசி அடிச்சிக்க, கரெக்டா அத்த நேரம் பார்த்துத்தானா நாங்க உள்ள வரணும்? எல்லா விஷயமும் காதுல விழணும்?

நுணலும் தன் வாயால கெடும்கறது இதுதாண்டா!

போதும். நடந்த தப்பைப் பூரா சொல்லி மன்னிப்பு கேள். நானும் கேட்டுக்கறேன்."

மூச்சு விடாமல் பேசுகிறார் நரசிங்கம். வேணு கலங்கிப் போய்விட்டிருக்கிறான்.

"மாமா எல்லாம் சரி; இந்த சூட்கேஸ்...?"

- அவர் உடனே திறந்து காட்டுகிறார்.

"வேணு இது அந்த அனு பொண்ணு உன் வள மான வாழ்க்கைக்காக கொடுத்த பணம். நான் வாங்க மாட்டேன்னுதான் சொன்னேன். ஆனா அந்தப் பொண்ணு எழுதின கடிதம் என்னை கொஞ்சம் கரைச்சிடிச்சு.,

அப்ப இந்த புத்தி இல்ல உனக்கும் வசந்தாவுக்கும் கல்யாணம் ஆனா உங்க வாழ்க்கைக்கு இது உதவும்னு நம்புனேன். சொல்லப் போனா உன்னைவிட்டு அந்தப் பெண் விலக நான்தான் மூலகாரணம். நான் அதைப் போய் பார்க்காம இருந்துருந்தா ஒருவேளை இப்படி எல்லாம் நடந்துருக்காதோ என்னவோ?"

"நீங்க அனுவைப் போய் பார்த்தீங்களா?"

"ஆமாம். இந்தப் பாவியோட நெஞ்சுவலி நாடகத்தைப் பார்த்துப் பயந்து அந்த பொண்ணைப் போய்ப் பார்த்து உன்னை வசந்தாவுக்காக விட்டுக் கொடுக்கச் சொன்னேன். இல்லேன்னா ஒரு உயிருக்கு பல உயிர் போயிடும்னு சொன்னேன். அது தங்கமான பொண்ணு, இந்தக் கிழவன் பேச்சைக் கேட்டு விட்டுக் கொடுத்தது, சும்மா இல்ல... அவங்க அப்பாகிட்ட சொல்லி பத்து லட்ச ரூபா காம்பன்சேஷன் வாங்கித் தந்த நிலைல.

ஒரு பக்கம் எனக்கு உதவி செய்த மாதிரியே மறு பக்கம் அவங்க அப்பாக்கும் செய்தது அவரோட சூதாட்டத்துல நீ பலி ஆயிடக்கூடாதுங்கறதுக்காகவே அவர்விருப்பப்படி அவரோட தங்கச்சி மகனைக் கட்டிக்க சம்மதிச்சிச்சு.

இங்க எப்படி சிறு வயசுல இருந்தே உனக்கு வசந்தா - வசந்தாவுக்கு நீன்னு பேசிகிட்டோமோ, அதே கதை தான் அங்கேயும்.

காதல்னா சுயநலம்னு நான் இது வரை நினைச்சு கிட்டிருந்தேன் அடுத்தவங்க நலம்தான் அதுன்னு அந்தப் பொண்ணு நிரூபிச்சிடிச்சு.

நான் பெரிய பாவத்த பண்ணிட்டேன். என்னை மன்னிச்சிடு."

- நரசிங்கம் உணர்ச்சிகரமாகப் பேசியபடி சரே லென்று வேணுவின் காலில் விழுகிறார்.

வேணு திடுக்கிட்டுத் தாவுகிறான்.

"மாமா என்ன இது?"

"தப்பு பண்ணிட்டேனப்பா..."



"எல்லாத்தையும்விட பெரிய தப்பு இப்படி கால்ல விழறதுதான்."

- அவன் அவரை சமாதானப்படுத்தும்போது, வசந்தா விசுக்கென்று உள் ஓடி கதவைத் தாழிட்டுக் கொள்கிறாள்.

அனைவரிடமுமே திடுக் உணர்வு. கதவருகே சென்று பதறுகின்றனர்.

"ஏய் வசந்த்... கதவைத் திற! இப்ப எதுவும் நடந்துடலை. எல்லாத்தையும் பேசித் தீர்த்துக் கலாம்" - வேணு கத்தியபடியே கதவைத் திறக்க முயற்சிக்கிறான்.

வள்ளி பக்கத்து ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள். உள்ளே வசந்தா தூக்கில் தொங்கும் முகாந்திரத்தில் -

"நீங்கள்லாம் அப்பா அம்மாவே இல்லை. பணப் பிசாசுங்க. எவ்வளவு தூரம் ஏமாத்தியிருக்கீங்க. இவ் வளவுக்குப் பிறகும் உயிரை நான் வெச்சுகிட்டிருந்தா மனுஷியே கிடையாது."

- கருவியபடியே தன் சேலையாலேயே மின் விசிறிக்கு இணைப்பு கொடுக்கிறாள், கதவோ உறுதியாக அசைந்து கொடுக்க மறுக்கிறது.

# 26

***'நாடகத்தில் காவியத்தில் காதலென்றால்***
***நாட்டினர்தாம் வியப்பெய்தி நன்றாம் என்பர்***
***ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்றோரத்தே***

*ஊரினிலே காதலென்றால் உறுமுகின்றார்*
*பாடைகட்டி அதைக் கொல்ல வழிசெய்கின்றார்'*

– பாரதியார்

**ப**லங்கொண்ட மட்டும் மட்டும் கதவைத் தட்டிப் பார்த்து விட்டு, காலால் உதைக்கத் தொடங்குகிறான் வேணு. ஜன்னலருகே நின்று கொண்டு வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்கிறாள் வள்ளி. கூடவே மலங்க மலங்க மாணிக்கம்.

இறுதியில் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே போனபோது, கிட்டத்தட்ட வசந்தாவிடம் இதயம் நின்று விட்ட நிலை.

●●●

**ஹா**ஸ்பிடல்!

கலைத்த தலையும், அழுக்கு உடம்புமாய் எதிரில் வந்து நிற்கும் கணவனைப் பார்த்து கசிய ஆரம்பிக்கிறாள் வடிவு. கூடவே நிற்கும் ஜோதி லேசாக சிலிர்ப்பூட்டு கிறான்.

"எங்கங்க போய்ட்டீங்க... இப்படியா சொல்லாமக் கொள்ளாமப் போவீங்க.'

"அது வந்து வடிவு..."

"எல்லாம் தெரியும்- தர்மராஜ் அத்தான் சொன்னாரு. வியாபார விஷயமா உங்களை கல்கத்தா அனுப்பியிருக் கேன். தப்பா எடுத்துக்காதே'ன்னாரு. நீங்க ஒரு போனாச்சும் பண்ணியிருக்கலாமுல்ல...?"

- வடிவு சொன்னதில் இருவருமே ஒரு சுமாரான அதிர்ச்சிக்குள் தள்ளப்படுகின்றனர்.



"என்ன பேசாம நிக்கறீங்க... நீங்க கிட்ட இல்லேங்கற ஒரு குறையைத் தவிர வேற எந்தக் குறையும் எனக்கில்ல இங்க நல்லா பாத்துக்கறாங்க. எனக்கும் உடம்பு கொஞ்சம் தெம்பா இருக்கு.

ஆபரேஷன் பண்ணுனா நான் இன்னும் பத்து வருஷம் உசுரோட இருப்பேனாம்... ஆமா இது யார்...?" வடிவு புதுப்புது உண்மைகளைக் கூறுகிறாள்.

"இது... இது... ஜோதி."

"ஜோதின்னா...?"

"உங்கக்கா மகன் வடிவு..."

"அந்த ஜோதியா... தம்பி..." வவு உடைத்துக் கொள் கிறாள். படுக்கையில் இருந்து சரேல் என எழப் பார்க்கிறாள். தடுக்கிறான் ஜோதி.

"படுங்க சித்தி படுங்க படுங்க..." - அவன் பயன் படுத்திய சித்தி என்கிற வார்த்தை அவளை பனிமலை உச்சிக்குத் தூக்குகிறது. கண்ணில் பனிப்பு கூடிப் போகிறது.

அப்பொழுது காலோரமாக அவளது இரண்டு பெண் குழந்தைகளும் விளையாட்டு பொம்மைகளோடு வந்து சேர, ஒருத்தி முத்துசாமியை வந்து கட்டிக் கொள் கிறாள்.

"இவங்க..."

"என் குழந்தைங்க ஜோதி..."

"ஹாய்... வாங்க என்கிட்ட நான் உங்க அண்ணன்" - ஜோதி மின்னல் வேகத்தில் உறவு முறைகளைப் பிணைத்துக் கொள்கிறான். முத்துச்சாமியையே அது நெகிழ்த்துகிறது.

"பாத்தியா ஜோதி... உங்கப்பா பண்ணின..."

- தர்மராஜ் பற்றி முத்துச்சாமி எதையோ சொல்ல வாயெடுக்க, ஜோதி பார்வையாலேயே தடுக்கிறான். அப்படியே கடைக்குட்டியை தன் தோளுக்கும் தூக்கிக் கொள்கிறான்.

"உனக்கு கல்யாணம்னு அக்கா சொன்னா... நல்லா நடந்துருக்கும்னு நினைக்கறேன். ஆமா உன் பொண்டாட்டியோட வரலாம்ல...?" வடிவு ஆசை பீய்ச்சுகிறாள்.

"அது... அது... கட்டாயம் வரேன் சித்தி."

"உக்காருய்யா. ஏன் நிக்கறே?" - வடிவு கரிசனத்திலும் கரைகிறாள்.

"இருக்கட்டும் சித்தி. சித்தப்பா இல்லாம பத்து நாளா ரொம்ப கஷ்டப்பட்டிருப்பீங்க. ஆமா பசங்களை யார் பார்த்துக்கிட்டாங்க?"

"எப்பவும் போல எங்க பக்கத்து வீட்டுக்காரங்க தான். காலைல குளிப்பாட்டி சாப்பாடு ஊட்டிட்டு கொண்டு வந்து விட்டுடுவாங்க. அப்றமா இங்க விளையாடிகிட்டு இருப்பாங்க. ஆரம்பத்துல ஆஸ்பத்திரியில, அனுமதிக்கல, 'இது என்ன பார்க்கா? ஆஸ்பத்திரியா'ன்னு டாக்டர்ங்க கத்தினாங்க.

அப்றமா கொஞ்சம் நாள்ல போகப் போறேன்னு தெரிஞ்சதும் பசங்களைப் பிரிக்க வேண்டாமேன்னு கண்டுக்காம விட்டுட்டாங்க."

- பேச்சோடு அவள் கண்கள் திரையிடுகின்றன, முத்துச்சாமி சடாரென மண்டியிட்டு அவள் கண்களை படபடப்போடு துடைத்து விடுகிறார்.



"ஏன் வடிவு இந்த மாதிரி பேசறே? அதான் ஆபரேஷன் பண்ணப் போறாங்க. பத்து வருஷம் இருப்பேன்னு சொன்னேல்ல?"

"ஆமா சித்தி... நீங்க நிச்சயம் உயிரோட இருப்பீங்க. நாங்கலாம் இருக்கோம்ல... நீங்க இனிமே இப்படி கலங்கக்கூடாது. கலங்கவே கூடாது"

- ஜோதி வாஞ்சையாக அவள் கரங்களைப் பற்றி, பாசத்தோடு ஆறுதலளிக்கிறான்.

நடுவில் விசும்பல் சப்தம். முத்துச்சாமிதான் விசும்பிக் கொண்டிருக்கிறார்.

"சித்தப்பா என்ன இது?" ஜோதி அவரையும் உறவு முறையோடு தோளைத் தொடவும், அவர் சிலிர்த்துப் போகிறார்.

எழுந்து இருவரும் ஓரமாக ஒதுங்குகின்றனர். ஜோதியும் கசங்கி விட்டிருக்கிறான்.

"நீ ஏன்ப்பா அழறே?"

"அழாம... என்ன சித்தப்பா இது கொடுமை... சொப்பு சொப்பா குழந்தைங்க... சித்திக்கு இப்படி ஒரு வியாதி. கடவுளுக்கு கண் இல்லையா?"

"கடவுளுக்கு மட்டுமில்ல ஜோதி. எங்க வரைல மனுஷங்களுக்குக் கூட கண் இல்ல. பாத்தியா. உங்கப்பா ஆடுன நாடகத்தை... அங்க என்ன மடக்கிப் போட்டு இங்க இவகிட்ட பாசத்தக் காட்டி..." - அவரிடம் விசும்பல் தொடர்கிறது.

"அப்பா வியாபாரத்துல எல்லா தப்பும் பண்ணுவார். கேட்டா, வியாபார தர்மம்னு சொல்லி விழுங்குவாரு.

ஆனா வாழ்க்கையையே வியாபாரமா நினைச்சு நடந்துக்கு வாருன்னு நான் நினைச்சுக்கூட பார்க்கலை..."

"இப்ப என்ன பண்ணப் போறே ஜோதி? அன்னிக்கு எங்க காதலுக்கும் உங்கப்பாதான் வில்லன். இன்னிக்கு உங்க காதலுக்கும் உங்கப்பாதான் வில்லன்."

"உங்க காதலுக்குமா?"

"ஆமா... நீ அப்ப உங்கம்மா வயித்துல இருக்கே. உன் சித்தியும் நானும் ஓடிப்போய் கல்யாணம் பண்ணிக்கிடோம். மாலையும் கழுத்துமா வீட்டுக்கு வந்தப்போ, என் மாமனார் மாமியார் எங்களை ஏத்துக்கற நிலைலதான் இருந்தாங்க. ஆனா, என்னை ஒரு தடவை கூட பார்த்துருக்காத உங்கப்பா. எங்களை ஏத்துக்கக் கூடாதுன்னுட்டார். மீறி ஏத்துக்கிட்டா உங்கம்மாவைப் பிறந்த வீட்டுக்கே அனுப்பிடுவேன்னு செக் வெச்சார்.

நான்தான் எங்களால யாருக்கும் எந்த சங்கடமும் வர வேண்டாம்னு பம்பாய் பக்கம் போய்ட்டேன்... அங்கே ஹோட்டல் கடைபோட்டேன். அடுப்படியில் உங்க சித்தி வெந்தா... அந்தப் புகை தந்த பரிசுதான் இந்த கேன்சரோ என்னவோ?" குமுறுகிறது முத்துச்சாமியின் நெஞ்சம். எச்சில் தெறிக்க வார்த்தைகள் வெளி வந்து விழுகின்றன.

ஜோதி இறுகிப்போய் விட்டிருக்கிறான். நெடு நேரம் எதுவும் பேசவே பிடிக்காத நிலை.

"ஐய்யா..."

"என்ன சித்தப்பா?"

"நீ சித்தாப்பாங்கறது எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?"



"எனக்கும் உங்களப் பார்க்க சந்தோஷமா இருக்கு சித்தப்பா... அந்த நிலையிலேயும் சித்திமேலதான் உங்களுக்கு எவ்வளவு அன்பு!"

"என் அன்பெல்லாம் சும்மா... அவ என் மேல வெச்சிருக்கா பாரு..."

அவர் பொங்கும்போது, கையில் காபி தம்ளருடன் அங்கு தடுமாறியபடி வருகிறாள் வடிவு.

பதறிப் போகின்றனர் இருவரும்.

"வடிவு, எதுக்கு படுக்கையை விட்டு எழுந்திரிச்சே?"

"கத்தாதீங்க. எனக்கு ஒண்ணுமில்ல. என் மகன் என்னைப் பார்க்க முதல் முதலாக வந்துருக்கான். அவனுக்கு நான் ஏதாவது தர வேண்டாமா? அதான் ஃப்ளாஸ்க்குல இருந்த காபியையாவது தருவோமேன்னு எடுத்துக்கிட்டு வந்துருக்கேன். உங்களுக்கும் நான் காபி தந்து எவ்வளவு நாளாச்சு?"

"அதா இப்ப முக்கியம்?"

"இப்ப எனக்கும் இதெல்லாம் தாங்க முக்கியம். அப்ப தாங்க சாகும் போது கொஞ்சமாவது நிம்மதியா சாவேன்!"

வடிவு திரும்பத் திரும்ப தனது முடிவைப் பற்றியே பேச கட்டியணைத்துக் கொள்கிறார் முத்துச்சாமி. கையில் காபி தளும்புகிறது.

"வடிவு இனிமே சாவப்பத்தி பேசாதே. இப்படிப் பேசினே நீ போறதுக்கு முந்தி அதை நினைச்சே நான் செத்துடுவேன் முதல்ல...!"

"ஐய்யய்யோ பிள்ளைங்களை யார் பார்த்துப் பாங்க?" - என்று அவள் வாயைப் பொத்த, அந்த

பிஞ்சுகள் இரண்டும், அப்பா அம்மாவின் உணர்ச்சிப் பெருக்கைப் பார்த்து லேசாக கலங்கிப் போயிருக்கின்றன.

நடுவில் "அப்பா" என்று இதயம் புரண்டு சிக்கு மளவு ஒரு கத்து கத்துகிறான் ஜோதி. இருவரிடையேயும் பலத்த அதிர்ச்சி.

"ஜோதி எதுக்குக் கத்தினே...?"

"கத்தாம... எங்கப்பாவை நினைச்சேன்... அதான் தாங்க முடியாம கத்திட்டேன். துரோகி... துரோகி... பச்சத் துரோகி."

- நரநரக்கிறான் ஜோதி.

"ஐய்யோ உங்களை என்ன... அந்த ஆள் என்னமா விளையாடிட்டான் சித்தப்பா. நம்ம காதுல பூவைச் சுத்தி அந்த ஆள் விளையாடிட்டான் சித்தப்பா. ஒரு வகைல சித்தி கான்சருக்கு... என்னோட இன்றைய தவிப்புக்கு... எல்லாத்துக்கும் அந்த பெரிய மனுஷன்தான் காரணம்.

"நான் அந்த ஆளை சும்மா விடப் போறதில்ல... பீஸ் பீஸா..."

- டாக்டர்களும் நர்ஸ்களும் எட்டிப் பாக்குமளவு கத்தும் ஜோதியை முத்துச்சாமி கட்டியணைத்து சமா தானப்படுத்துகிறார்.

"கத்தாதே ஜோதி. உணர்சசி வசப்படாதே... இது உணர்ச்சி வசப்படற நேரமும் இல்ல. சொன்னா கேளு"

"முடியலை சித்தப்பா... முடியல..."

"முடியணும். காதலிக்கறவங்களுக்கு பகையே அவங்க உணர்ச்சிதான். அதனாலதான் மத்தவங்க சுலபமா ஜெயிச்சிடறாங்க."



"சாரி சித்தப்பா... உபன்யாசமெல்லாம் பண்ணா தீங்க. நான் கேக்கற மூட்ல இல்ல."

"இது உபன்யாசம் இல்ல. உனக்கு கட்டாயம் தேவைப்படற அறிவுரை. அன்னிக்கு நானும் உணர்ச்சி வசப்பட்டதுனாலதான் பல விஷயங்கள் இழந்தேன்"

"வேற என்ன பண்ணச் சொல்றீங்க?"

"புத்தி பூர்வமா சிந்தி."

"இப்ப என்ன சிந்திக்கல?"

"சரி! என்ன செய்யப்போறே சொல்."

- இருவரின் உணர்ச்சிப் போராட்டம் வடிவுக்குப் புதிராக இருக்கிறது.

"ஆமா! எதுக்கு ஜோதி இப்படி கத்துது. நீங்களும் என்னென்னமோ சொல்றீங்க?" - என்று இடையில் புகுந்து பார்க்கிறாள் வடிவு.

"நீ வா வடிவு. வந்து படு. பிறகு எல்லாத்தையும் சொல்றேன். பசங்களா போய் விளையாடுங்க பார்ப் போம் போங்க... போங்க..."

- அனைவரையும் அவரவர் இடத்தில் விட்டுவிட்டு, முத்துச்சாமி ஜோதியிடம் வருகிறார்.

அவன் அவரை அனல் விழிகளுடன் ஏறிடுகிறான்.

"அப்படிப் பாக்காதே... என்ன செய்யப் போறே நீ? அதைச் சொல்..."

"அப்பாவை பீஸ் பீஸா கிழிக்கப் போறேன்."

"கிழிச்சா உன் காதல் தோல்வி சரியாயிடுமா?"

'......"

"என்ன பேச்சக் காணோம்? உன் காதலுக்கு எப்படி உயிர் கொடுக்கப் போறே? அதச் சொல்லு..."

"அது... அது... எப்படி சித்தப்பா எப்படி? ஈவன் வசந்தாவுக்கு கல்யாணம் ஆகாம இருந்திருந்தாலும் பரவால்ல... அங்க அவளுக்கும் கலயாணம் ஆயிடிச்சு. பாஸ்டர்ட்? எங்கப்பன் பெரிய கிரிமினல் சித்தப்பா. பெரிய்ய கிரிமினல்..."

"கத்தாத... அந்தக் கிரிமிலை மண்டையப் பிச்சுக்க நான் வழி சொல்றேன். அதுக்கு முந்தி சில கேள்விங்க?"

"என்ன?"

"இப்ப உனக்குப் பொண்டாட்டியா வந்துருக்க றாளே அனு... அவ ஆள் எப்படி?"

"எப்படின்னா?"

"இல்ல... பணத்திமிர் உள்ளவளா? இல்ல நல்ல குணமான பொண்ணா?"

"நிச்சயம் அனுவுக்கு பணத்திமிர்லாம் கிடையாது. அற்புதமான பொண்ணு அவ..."

"அப்ப வா. முதல்ல அவளோட சேர்ந்து பேசுவோம்."

"அவ எதுக்கு?"

"சொல்றேன் வா..."

புதிர் போட்டபடியே அழைப்பவர் எதிரில், அதற்கு அவசியமே இல்லாதபடி அனு வந்து கொண் டிருக்கிறாள்!



# 27

**'காதலிகள் மனைவிகளாகிட மனைவிகள்**
**காதலிகளாகிட விடுகதைப் புதிர் போடும்**
**காதலே அமிலத்தை விடவும் நீ காரமோ?**
**அமிர்தத்தை விடவும் நீ ஜீவிதமோ?'**

அனுவை அங்கு ஜோதி துளிகூட எதிர் பார்க்கவில்லை. அதிர்ச்சி, ஆச்சரியம் அனைத்தையும் முகத்தில் காட்டுகிறான். நெருங்கி விட்டவன் முகத்தில் கற்பாறை போன்ற இறுக்கம். நிறைய அழுதிருக்கிறாள் என்று எண்ணும்படியாக கண்களில் கலக்கப் பிசர்வு.

"அனு நீ எப்படி இங்க...?" - ஜோதி அவளைக் கேட்கும்போது அவள் அதற்குப் பதில் சொல்லாதபடி ஒரு விரக்திச் சிரிப்பு சிரிக்கிறாள்.

"இவர்தான் முத்துசாமியா?" என்று அவனைப் பார்த்து பதில் கேள்வி கேட்கிறாள்.

"ஆமாம்... உனக்கு...?" - அவன் திரும்ப கேள்விக் கொக்கியைப் போட, அதை விலக்கியபடி அந்த ஸ்பெஷல் வார்டில் கண்களை மூடமுடியாதபடி படுத்திருககும் வடிவின் அருகே செல்கிறாள்.

கால்மாட்டில் குழந்தைகளின் விளையாட்டு. கை தட்டும் பொம்மை ஒன்று சுற்றி நடப்பதெல்லாம் தனக்குத் தெரியும் என்கிற மாதிரி கைகட்டியபடி நின்றிருக்க, பொம்மையைப் பார்த்து அந்தக் குழந்தைகள் ரசித்துக் கொண்டிருக்க...

ஜோதி நெருங்கி வந்து அவள் தோளைப் பிடித்துத் திருப்புகிறான்.

"அனு... என்ன இது....? நான் கேட்டுக்கிட்டே இருக்கேன் நீ பாட்டுக்கு...

திரும்பும் அவள் விழிகளில் கண்ணீர், தன் முதல் துளியைக் காட்டிக் கொண்டிருக்கிறது.

"ஏய்.. வாட்ஸ் திஸ்... உனக்கு எல்லாம் தெரிஞ்சு போச்சா?"

அவள் ஆமோதிப்பாக தலையை அசைக்கும்போது உருண்டு விழுகிறது கண்ணீர்த்துளி.

"எப்படி... யார் சொன்னா?"

"நீங்க இவரை குடோன்ல இருந்து மீட்ட உடனேயே அவங்க மாமாவுக்குத் தகவல் தந்துட்டாங்க. மாமாவும் உடனே குடோனுக்கு கிளம்பிப் போனார். போய்ட்டு வந்தவர் பைத்தியம் பிடிச்ச மாதிரி கத்தினார். எல்லாம் போச்சு எல்லாம் போச்சுன்னு ஒரே ரகளை...!"

"இந்த ஹாஸ்பிடல்லதான் நான் இருக்கேன்னு உனக்கெப்படி தெரியும்."

"பத்துநாள் அடைஞ்சு கிடந்தவர் பொண்டாட்டியப் பாக்கத்தான் முதல்ல போவாங்கறது ஒரு சாதாரண காமன்சென்ஸ் ஜோதி."

"ஐ.சீ..."

"உங்கப்பா எங்கப்பா இரண்டு பேருமே துரோக திலகங்கள். ஜோதி, அதுக்கெல்லாம் பாரத ரத்னா தர மாட்டாங்கள்ல.."

- அனு கண்ணீரைச் சிலிர்ப்பியபடி கேட்கும்போது குழந்தைகள் இரண்டும் அவனைப் பார்க்கின்றன. வடிவும் படுக்கையில் நிமிர்ந்து எழுந்து அமர்ந்த நிலையில்...



"அம்மாடி நீ யார்... என்ன இங்க குழப்பம்?"

"சித்தி இதுதான்... இவதான்..." ஜோதி சொல்லப் பார்க்கிறான். அடுத்த வார்த்தை வர மறுக்கிறது.

"உன் மனைவியா தம்பி?"

"ஆமாம் சித்தி." - - மிடறு விழுங்கியபடி சொல்கிறான். அவள் அதைக் கூர்ந்து கவனித்து விட்டு வாயைத் திறக்கிறாள்.

"இல்ல ஜோதி... நான் உங்க மனைவி இல்ல! மனைவியாகவும் முடியாது...

"அனு..."

"யெஸ்... உங்க மனைவி வசந்தாதான். அதுதான் சரி. நான் அனு, மயில்வாகனம்தான்."

"ஏன் அனு, உன்னையும் அனு -வேணுன்னு கூட சொல்லலாமே?"

"உம் சொல்லலாம். நான் சொல்லலாம். ஆனா அதை அவர் ஒத்துக்கணுமே? அதான் எல்லாம் முடிஞ் சிடிச்சே?

அதே பதிலை நானும் சொல்லலாமே... என் வரையிலயும் வசந்தா ஒத்துக்கணுமே. இங்கேயும்தான் எல்லாம் முடிஞ்சிடிச்சே?"

"ஆமா... சந்தையில குழந்தைகள் தொலையற மாதிரி நம்ம வாழ்க்கை தொலைஞ்சு போச்சு. லாண்டரிக்குப் போட்ட துணி மாறிப் போயிட்ட மாதிரி நாங்களும் மாறிப் போயிட்டோம்.

இந்தக் குழந்தைங்க பொம்மையோட விளையாடற மாதிரி நம்ம பேரண்ட்ஸ் நம்மளோட விளை

யாடிட்டாங்க. இந்த பொம்மையாவே இருந்திருந்தா இந்த உண்மைகள்லாம் தெரிஞ்சிருந்தாலும் ஒண்ணும் ஆகியிருக்காது.

ஸோ.. பொம்மையை விடவும் கேவலமா மனுஷ ஜென்மமாப் போயிட்டோம் இல்ல ஜோதி?"

அவள் குமுறுகிறாள். வருத்தத்தை வார்த்தைகளில் குழைத்துக் கொட்டுகிறாள். அவனும் திணறியபடி நிற்க முத்துச்சாமி கைகளைக் குத்திக் கொண்டு கத்துகிறார்.

"கொஞ்சம் உணர்ச்சிவசப்படாம நான் சொல்றத கேக்கறீங்களா...?"

"என்னங்க விஷயம். என்ன இது குழப்பம்? கல்யாணம் ஆன மறுநாளே இவங்க என்னென்னமோ பேசிக்கி றாங்களே. என்னதான் நடந்தது? எனக்கும்தான் சொல்லுங்களேன்."

"ஒண்ணுமில்ல வடிவு. நீ படு. உனக்கு இதெல்லாம் எதுவும் தெரிய வேண்டாம். எல்லாம் சரியாயிடும்... படு."

"இப்ப சொல்லப் போறீங்களா இல்லையா?"

"நீ படு... வாங்க நாம வெளிய போய் பேசுவோம்." முத்துச்சாமி அனுவையும் ஜோதிஷங்கரையும் அழைத்துக் கொண்டு வார்டை விட்டுக்கிளம்ப வடிவு கலங்கிய விழிகளோடு படுக்கையில் விழ...!



காரிடார் சலவைக்கல் பளபளப்போடு டெட்டால் வாசத்தோடு ஈக்களுக்கு எரிச்சல் மூட்டிக் கொண் டிருக்கிறது குறுக்கும் நெடுக்குமாய் ஹாஸ்பிடல் ஊழியர்களின் பிரவேசங்கள், நடுவில் முத்துச்சாமியின் துவக்கம்.



"இதோ பாருங்க நீங்க ரெண்டுபேரும் உங்க மேல சுயபச்சாதாபப்பட்டுக்கறதால எதுவுமே ஆயிடறப் போறதில்ல. ரெண்டுபேர் மனசுலையும் ரெண்டு பேருமே இல்ல... நிச்சயம் இதே நிலைதான் அந்த வசந்தா வேணு விஷயத்துலையும் இருக்கணும்.

இந்த சதியை அவங்களுக்குத் தெரியப்படுத் தணும், அப்பதான் உங்களுக்கு ஒரு நல்ல வழி பொறக்கும்..."

"வேண்டாம் அங்கிள்... அவங்களாவது நல்ல படியா இருக்கட்டும். இந்த அசிங்கமான துரோகங்கள் அவங்களுக்குத் தெரியவே வேண்டாம்.

எங்க கல்யாணம்தான் விபத்துன்னு தெரிஞ்சு போச்சு. அவங்களுக்கு நடந்திருக்கறதும் அட்லீஸ்ட் விபத்துதான்னாலும் அது தெரியாதவரை நல்லது தானே?"

"என்ன பேசறே... உங்க ரெண்டு பேருக்கும் தெரிய வந்த மாதிரி அவங்களுக்குத் தெரிய வர எவ்வளவு காலமாகும்?"

"சரி. தெரிய வருதுன்னே வெச்சுப்போம். அதனால என்ன பண்ண முடியும்?"

"என்ன ஜோதி... நீயும் தாலி செண்டிமெண்ட்ல மாட்டிக்கிட்டியா?"

"என்ன நீங்க.. ஊரறிய ரெண்டு பேருக்கும் கல்யாணம் நடந்தாச்சு. அதைக் கழட்டி எறிஞ்சுட்டு இஷ்டப்பட்டப் படி சேர்ந்துக்க சொல்றீங்களா?"

"அதுல என்ன தப்பு?" முத்துச்சாமி எங்கு வருகிறார் என்பது புரிகிறது. அனு அதைக் கேட்டு லேசாக அதிர்ச்சியை கண்களில் காட்டுகிறாள்.

"என்ன தப்புன்னு கேக்கறேன். அப்படி நீங்க செய்தாதான் உங்க அப்பா அம்மாக்களுக்கும் புத்தி வரும் காதலை இளப்பமா நினைக்கற மத்தவங்களுக்கும் புத்தி வரும்..."

முத்துச்சாமியிடம் வெறி அடங்காத பேச்சு அனுவும் ஜோதியும் ஒருவரை ஒருவர் பொருள் பொதிந்த பார்வை பார்த்துக் கொள்ளும் போதுதான் அந்தக் காட்சி ஜோதியின் கண்ணில் பட்டது.

பக்கவாட்டு ஜன்னலைக் கடந்து உள்ளே படுக்கைகள். அதில் ஒன்றில் வசந்தா. அவளைச் சுற்றிலும் வள்ளி, வேணு, நரசிங்கம் என்று ஒரு கூட்டமே...

ஜோதியின் முகத்தில அதிர்ச்சி பரவுகிறது.

சட்டென்று அவர்களிடமிருந்து கத்தரித்துக் கொண்டு வார்டுக்குள் நுழைகிறான்.

அனலில் வாட்டிய வாழை இலையாட்டம் படுக்கையில் வசந்தா.

அவனைப் பார்க்கவும் எல்லோருக்குமே தூக்கி யடிக்கிறது.

"என்னாச்சு... என்னாச்சு என் வசந்தாக்கு...?" அந்தப் பழைய காதல் பீறிட முண்டி முந்துகிறான்.

வேணு சலனமின்றி அதைப் பார்க்க எல்லோருமே பிடித்து வைத்தமாதிரி நிற்கின்றனர்.

"கேக்கறேன்ல... என்னாச்சு வசந்தாக்கு?"

அவன் உரக்கக் கத்துகிறான். அனுவும் முத்துச் சாமியுடம் கூட உள் நுழைந்த அவர்களோடு கலக்க, வேணு, ஜோதியின் தோளை வாஞ்சையோடு பற்றுகிறான்.



பார்வையாலேயே வெளியே அழைக்கிறான்.

"வாங்க சொல்றேன்."

- இருவரும் வெளியேறுகின்றனர். ஜோதி உடம்பு நடுங்கிக் கொண்டிருக்கிறது. ஏற்கனவே ரோகத்தால் வந்த தவிப்பு இப்பொழுது காதலியின் மரணப் படுக்கை... இரண்டும் சேர்ந்து அவனை அக்குனியில் புதைத்து விட்டிருக்கிறது.

"ஆமாம் நீங்க எப்படி இங்கே?"

"நான்... நான்... நீங்க சொல்லுங்க முதல்ல... வசந்தாவுக்கு என்ன... கல்யாணம் பண்ணினது பிடிக்காம விஷத்தக் குடிச்சிட்டாளா? என்ன ஆச்சு... முதல்ல அதச் சொல்லுங்க..."

"வசந்தாவுக்கு ஒரு ஆபத்துமில்ல... கழுத்துல லேசா எலும்பு பிசகியிருக்கு. வலி அதிகம். மயக்கம் ஊசி போட்டுருக்காங்க..."

"கழுத்துல எலும்பு பிசகியிருக்கா? அப்படின்னா, தூக்குல..."

"ஆமாம். தொங்கப் பார்த்தா- காப்பாத்திட்டோம்"

"நிஜமா இப்ப அவளுக்கு ஒரு ஆபத்துமில்லியே...?"

"நிஜமா உங்க வசந்தாவுக்கு ஒரு ஆபத்து மில்லை...?"

"என் வசந்தாக்கு... என் வசந்தாக்கு யூ மீன்..."

"எல்லாம் எனக்குத்தெரியும் மிஸ்டர் ஜோதிஷங்கர்"

"உங்களுக்குமா...?"

"உங்களுக்குமான்னா? அப்ப உங்களுக்கும்?"

"மை காட்... காலம் இப்படி ஏன் நமக்கு நடுவுல கண்ணாமூச்சி விளையாடுது."

"காலம் இல்ல ஜோதி... நம்ம பெற்றோர்கள்...'

- அவன் அழுத்தமாய்ச சொல்ல, முத்துச்சாமியும் நரசிங்கமும் அங்கு வருகின்றனர்.

'தம்பி' - நரசிங்கம் தழுதழுக்கிறார். ஜோதி அவரை நிமிர்ந்து பார்க்கிறான்.

"என்னை மன்னிச்சிடுய்யா. நடக்கக் கூடாதது தான் வரிசையா நடந்துகிட்டு வருது. உணர்ச்சி கொந்தளிப்புன்னு எல்லோருமே மாறிட்டோம். இது இப்படியே தொடர்றது நல்லது இல்ல. ஆகையால..."

"ஆகையால?"

"தப்ப செய்த நாங்களே அதுக்கு ஒரு பிராய சித்தமும் செய்துட்றோம்..."

- நரசிங்கம் பல பொருள்பட சொல்லி நிறுத்த, நடுவில் கத்தரித்தது நர்ஸ் ஒருத்தியின் குரல்.

'மிஸ்டர் முத்துசாமி... உங்க மனைவிக்கு ரொம்ப சீரியஸா இருக்கு. உடனே வாங்க..."

- அடுத்த நொடி அத்தனை பேர் கவனமும் வடிவு அட்மிட் ஆகியிருக்கும் வார்டை நோக்கித் திரும்புகிறது. வார்டின் வாசலில் அழுதபடி அந்த இரண்டு குழந்தை களும் நின்று கொண்டிருக்கின்றன.



# 28

**'காதல் தேசத்தின் தலைநகரில் கலவரப்**
**புயல் இடி மழை மின்னல் புயலுக்குப் பின்**
**அமைதியாமே... வருமோ?'**

**க**ண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்கும் குழந்தை களை வாரிச் சுமந்தபடி உள்ளே பாய்கிறார் முத்துச்சாமி.

எதிரில் டாக்டர்.

முகத்தில் கசங்கலுடன்.

"டாக்டர்! என்ன டாக்டர் ஆச்சு என் வடிவுக்கு... கொஞ்சம் முந்திகூட நல்லாதானே இருந்தா?"

"மண்ணாங்கட்டி... ஏற்கெனவே சொத்த உடம்பு இதுல பிரஷர் கூடுனா நல்லாவா இருக்கும்? மனச பாதிக்கிறமாதிரி இங்க எதையோ பேசியிருக்கீங்க..."

- டாக்டர் முகத்தில் குத்துவதுபோல பதில் தரு கிறார், முத்துச்சாமி மட்டுமல்ல அனு, வேணு, நரசிங்கம் எல்லோருமே விடைத்துத்தான் போகின்றனர்.

"இப்ப எங்க அவ...?"

"உம்... இன்டென்சிவ் கேர்ல... ஐ ஆம் சாரி. எது வேணா நடக்கலாம். இனிமேலாவது ஆஸ்பத்திரிய வீடு மாதிரி நினைச்சுப் பேசறத விடுங்க..."

- சொன்ன சூட்டோடு அவர் அங்கிருந்து அகல் கிறார். முத்துச்சாமி கண்களில் ஊற்றாய்ப் பெருகி வழிய ஆரம்பிக்கிறது. அந்தப் பிஞ்சுகளின் கண்களில் அதற்குமேல் வழிகிறது. ஜோதி துடைத்துவிடுகிறான். அப்படியே கையைக் குத்திக் கொள்கிறான்.

"என்னய்யா... என்ன இது புதுசிக்கல்?" நரசிங்கம் சிணுப்புகிறார்.

"அப்றம் சொல்றேன் சார், நாங்க தப்பு பண்ணிட்டோம். இங்கையே வெச்சு பிரச்சினைகளைப் பேசியிருக்கக் கூடாது. தப்பு பண்ணிட்டோம். தப்பு பண்ணிட்டோம்."

- ஜோதி கண்ணீர் கசியக் கமற, அனுவும் ஆமோதிக்கிறாள். முத்துச்சாமியின் குழந்தைகளில் இளையது சற்று சாய்ந்த கண்களோடு அந்த அழுகையைப் பார்க்கிறது. பெரிதும் மலங்க மலங்கப் பார்க்கிறது.

சட்டென்று முத்துச்சாமியிடம் ஒரு உதறல். குழந்தைகள் கீழே விழுகின்றார்கள்.

"சனியன்களா... எல்லாம் உங்களாலதான். நீங்க பொறந்த நேரம்தான். அதான் என் வடிவுக்கு வரக்கூடாத வியாதியெல்லாம் வந்து நடக்கக்கூடாததெல்லாம் நடந்து போச்சு..."

- முத்துச்சாமியின் அந்தத் தணல் போன்ற வார்த்தைகள் அனுவையும், ஜோதியையும் அதிரச் செய்கிறது. வேணு பதறிப் போகிறான்.

"என்ன சார் இது... இவங்க என்ன பண்ணுவாங்க...' மத்தியமாகக் கத்தியபடி பெரியவளை வாரிக் கொள்கிறான். அது அவன் வசம் போய்ச் சேர்ந்தாலும் அப்பாவையே பார்க்கிறது.

"அப்பா... ப்பா... ப்பா..." கேவுகிறது சின்னவள் அதைப் பார்த்து அவளும் விசும்ப, ஜோதி அவளைத் தூக்கிக் கொள்கிறான்.

"அழாதடா கண்ணு... அண்ணன் இருக்கேன்ல அழாத... அழாத..."



அந்த இடமே மாறிப்போகிறது. ஒரே உணர்ச்சிப் பெருக்கு. நரசிங்கம் நிலைகுலைந்த மாதிரி கண்ணாடிச் சாளரத்தை ஒட்டிப்போய் ஓரமாக அமர்கிறார். கண்ணீர் திரட்டுகிறார்.

'ஒரு தவறு... அதைத் தொடர்ந்து இன்னொரு தவறு. அதையும் தொடர்ந்து இன்னொன்று... கடவுளே என்ன இது?"

கல்யாணமானால் எல்லா இளசுகளின் வாழ்விலும் சந்தோஷம் பூக்கும். அதிலும் அந்த முதல் வாரத்தில் வண்ணக் கனவுகளும் சந்தோஷப் பூக்களும் டன்டனாகத் திரளுமே...

வாழ்க்கை பாரத்தைத் தெரிந்து கொள்ளவே மாதக் கணக்காகுமே... உலகம் முழுக்க இன்பமாகத் தெரியுமே... சுவரில் விழித்துப் பூசிய சுண்ணாம்புத் திப்பிகூட விகாரமாகத் தெரியாதே... ஏதோ ஒரு கலைச்சின்னம் போலல்லவா மனதுக்குத் தெரியும்.

ஆனால் இவர்கள் கூடிக்கூடி அழும்படியாகவா ஒரு நிலை உருவாகும்.

இதை இப்படியே விடலாமா?

விட்டால் அதுதான் அழகா என்ன?'

- நரசிங்கம் ஆழ்ந்த சிந்தனையில் கண்ணாடிச் சாளரம் வழியாக வெளியே பார்த்தபடி இருக்கிறார்.

தமிழ்த் தேசத்தின் பரபரப்பான ஜன நடமாட்டங்கள். காரில், ஸ்கூட்டரில், சைக்கிளில் என்று உயிர் உறுப்புகள் பயணப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

யாரிடமுமே அமைதியில்லை எனும் படியான ஒரு வேகம், ஊடே மதியப் பொழுதின் நான்கு மணிக்கான

வெய்யில். அதன் ஒளிக் கற்றைகளில் ஊடுருவித் திரியும் தூசுகள் துப்புகள்...

இந்தத் தூசையும் துப்பையும்விட தானும் தன்னைச் சார்ந்தவர்களும் மோசமாகிவிட்டோம் என்று நரசிங்கம் நினைக்கும்போது இன்டென்சிவிலிருந்து வந்த செய்தி அங்கு இருப்பவர்களை நிலை குலைய வைக்கிறது.

"ஐ ஆம் சாரி, மிஸ்டர் முத்துச்சாமி, உங்க மனைவியை எங்களால காப்பாற்ற முடியல!"

- அடுத்த நொடி 'வடிவு!' என்று முத்துச்சாமி அலறிய அலறலில் அந்த ஆஸ்பத்திரியே நடுங்கிப் போகிறது.



மீனாட்சியம்மன் கோவில்...

புதிய ஐய்யப்ப பக்தர்களின் சங்கமத்தில் திணறிக் கொண்டிருக்கிறது. அதிசயமாகப் பொற்றாமரைக் குளத்தில் தண்ணீர், படிக்கட்டில் வேணு, அனு, ஜோதி, வசந்தா!

குத்துக்காலிட்டு வாய் பூட்டப்பட்டுவிட்ட மாதிரி வரிசையில் அமர்ந்திருக்கின்றனர்.

இதே படியில் உரசியபடி அமர்ந்துகொண்டு எதிர் கால வாழ்க்கை பற்றிய கனவுகளோடும், ஆசையோடும் பேசியதெல்லாம் ஞாபகத்திற்கு வருகிறது.

என்ன வந்து என்ன பயன்...?

எல்லாம் மாறிவிட்டது. வைத்த காதல் பொய்த்த நம்பிக்கையாகிவிட்டது. மலைபோல் நம்பிய மீனாட்சி கை விரித்து விட்டாள்.



பெற்றோர்களைக் கட்டிப்போட அவளால் முடிய வில்லை. அவளை நம்பியது வீண்போய் விட்டது எனலாமா, இல்லை நம்பியதால்தான் இந்த விபரீதங்கள் எல்லாம் தெரிய வந்ததா....?

ஆளாளுக்கு யோசனையில் மூழ்கியிருக்கிறார்கள். கோயிலுக்குள் நுழைந்து அவளைச் சேவித்திருந் தால் நெற்றியில் குங்குமம் இருந்திருக்கும். இது இல்லாத தால் அவளைப் பார்க்கப் பிரியமில்லாத கோபமும் அவர்களிடம் கொடிகட்டிப் பறக்கிறது.

"உக்குக்கும்..." - ஊடே செருமுகிறான் வேணு நிமிர்ந்து பார்க்கிறான் ஜோதி.

"என்ன சார்... இப்படி மௌன விரதம் அனுஷ் டிக்கவா நாலு பேரும் இங்க வந்துருக்கோம்." - வேணு வின் கேள்வி அனுவை, வசந்தாவை நிமிர்த்துகிறது.

"சரி என்ன பேச?" என்பது போலப் பார்க்கின்றனர்.

"நடக்கக் கூடாததெல்லாம் நடந்து போச்சு..."

"அதான் தெரியுமே வேணு."

"அடுத்து நடக்கவேண்டியத பேசுவோமே..."

"அடுத்து... அடுத்து... வேணு உங்க அனுவை நீங்க. கூட்டிகிட்டுப் போங்க, என் வசந்தாவை என்கிட்ட தந்துருங்க..."

- தயங்கித் தயங்கி, ஆனால் சுற்றி வளைக்காதபடி விஷயத்திற்கு வருகிறான் ஜோதி

"தாராளமா... இந்த வினாடி என் சுண்டுவிரல்கூட வசந்தா மேல படலை, நீங்க தாராளமா கூட்டிக்கிட்டு போகலாம்."

"நானும்தான் வேணு... அனுமேல என் நிழல்கூட படவிடலை நான்."

"இதைச் சொல்லணுமா... எனக்குத் தெரியும் ஜோதி..."

"இதென்ன வேணு நாமளே பேசிகிட்டிருக்கோம்... இவங்க எதுவும் பேசமாட்டேங்கறாங்க..."

இருவரும் வசந்தா அனுவை உசுப்புகின்றனர், அவர்களிடம் ஆழமான பெருமூச்சு...

"ஏய் - சிரிங்க... அதான் எல்லாம் சரியாகப் போகுதுல்ல"

"என்ன சரியாகப் போகுது?"

- அனு நிதானமாக, ஆனால் அழுத்தமாகக் கேட்கிறாள். அவள் கேட்கும் விதத்தில், எதுவும் சரியாகவில்லை, சரியாகவும் ஆகாது, என்பதுபோன்ற பாவனை.

"நீ என்ன சொல்றே அனு...?"

"இல்ல எல்லாம் சரியாகப் போகுதுன்னு சொன்னீங்களே... எப்படின்னேன்?"

"எப்படியா... நீ உன் விருப்பப்படியும், நான் என் விருப்பப்படியும் எல்லோரும் அவங்கவங்க விருப்பப் படியும் நடக்க ஒரு வழி கிடைச்சிருச்சில்லியா?"

"எது வழி?"

"நாம மாறிக்கறதுதான்." "மாறிக்கறது நல்லதா... இல்ல மாத்திக்கறது நல்லதா!"

"என்ன சொல்றே நீ?"



"ஊரறிய எல்லாருக்கும் தெரியும்படியா, மனுஷ சாட்சிகளுக்கு நடுவுல வேத சாட்சியா தாலி கட்டியிருக்கீங்களே, அதை என்ன பண்றதாம்?"

- மெல்ல வசந்தா நிமிர்ந்து, தானும் அனு கட்சி என்பதுபோல கேட்கிறாள்.

"கழட்டி இந்தக் குளத்துல எறி..."

"அதுக்குத்தான் இங்க சந்திச்சிருக்கோமா?"

"அதுக்கும்னு வெச்சுக்கோயேன்."

"அப்புறம்...?"

"நம் விருப்பப்படி தாலிக் கட்டிப்போம். நம்மை ஏமாத்தின பெத்தவங்க எதிர்க்கப் போய் நிப்போம்"

"அப்புறம்?"

"என்ன அனு...? அப்புறம் அப்புறம்கறே அதுதானே நமக்கு இருக்கற ஒரே வழி..."

"வேற வழியே இல்லையா?"

"என்ன வழி இருக்கு...?" ஜோதி எழுந்து கொண்டு கத்திக் கேட்கிறான்.

"கத்தாதீங்க... அதுவும் கோயில்ல..."

அனு அவனை அடக்கப் பார்க்கிறாள்.

"பெரியகோயில். இங்க தெய்வமும் இல்ல. இருந்தாலும் அது எனக்குத் தேவையும் இல்ல."

"ஜோதி... டென்ஷனாகாதீங்க. இவங்க இரண்டு பேரும் வேற ஏதோ பிளான்ல இருக்காங்க. அது என்னன்னுதான் கேட்போமே..." வேணு சமாளிக்கிறான்.

"சரி சொல்லுங்க... வாட்ஸ் யுவர் பிளான். கமான் டெல்மீ..."

அனுவும் வசந்தாவும் ஒருமித்துச் சொல்லத் தொடங்குகின்றனர்.

அது...

# 29

*'காதலில் நீ கைப்பாவையா?*

*இல்லை காதல் உன் கைப்பாவையா?'*

ஒருமித்து அனுவும், வசந்தாவும் பேசுவது ஜோதிக்கும், வேணுவுக்கும் ஒரு பெரிய ஆச்சரியத்தை அள்ளித் தருகிறது.

அதே நொடியில் இவர்கள் ஏன் தங்களைப் போல உணர்ச்சிப் பிழம்பாகாமல் இப்படி இறுக்கமாக ஒரு தீவிர சிந்தனையோடு காட்சி தருகின்றனர் என்பது இருவருக்குமே பிடிபடவில்லை.

சரி, வேறு ஏதோ ஒரு வழி இருப்பதாகக் கூறினார்களே... என்ன அது? கேட்டுத்தான் பார்ப்போமே...

இருவரும் கைகோர்த்தபடி குத்துக் காலிட்டு அமர்ந்திருக்கும், இருவருக்கும் எதிரில் கீழ்படியாக போய் நின்று கொண்டு "அது என்ன வழின்னு சொல் நீங்களா?" என்று கேட்கின்றனர்.



அதே சமயம்...

●●●



வசந்தா வீட்டுமுன் கிறீச்சிட்டு நிற்கும் காரிலிருந்து இறங்குகிறார் ஜோதியின் அப்பா தர்மராஜன். கூடவே ராஜேஸ்வரி, பின்னாலேயே இன்னொரு கார் - அதிலிருந்து மயில்வாகனம். கூட யார் அது? பார்த்தால் வக்கீல்போலத் தெரிகிறது. அனைவரையும் நரசிங்கம் கை கூப்பி வரவேற்கிறார். தெருவே வாசலுக்கு வாசல் நின்று வேடிக்கை பார்க்க அவர்கள் உள்ளே நுழைகின்றனர்.

"வரணும் வரணும் எல்லாரும் வரணும். எங்க வராம போயிடுவீங்களோன்னு நினைச்சேன்..."

நரசிங்கம் பேசுவதைப் பார்த்தால் அவர்தாள் அழைத்த மாதிரி இருக்கிறது.

அதுதான் உண்மை என்பது அடுத்த நொடியே தெரிய வருகிறது.

"டேய் மாணிக்கம்! பாயை எடுத்து விரிடா. எப்படியோ இவங்களை வீட்டுக்கு வரவைச்சுட்டேன். அக்கா தங்கைன்னு டிராமா போட்டது இங்கதானே? இங்க வெச்சே பரிகாரத்த நான் சொன்னதுபோல செய்."

- என்று சொல்ல மாணிக்கமும் பாயை விரிக்க அதில் அவர்கள் உட்காராமல் நின்றபடியே பார்க்க...

"என்ன இது...? உட்காருங்க..."

"பரவால்ல, இருக்கட்டும். சட்டுன்னு நீங்க விஷயத்துக்கு வாங்க."

"நின்னுக்கிட்டேவா? உட்காருங்க."

"......"

"அட உட்காருன்னா. உங்க பணக்காரப் பவிசுதான் நாறிப்போச்சே? இன்னும் என்ன கெத்து... உக்காருங்க இது நின்னு பேசற விஷயமில்ல."

நரசிங்கம் ஒரு அதட்டு அதட்ட, அவர்கள் அரை மனதாக அமர்கின்றனர் - ஆனால் முறைப்புடன்.

"நீயே ஆரம்பிடா..." - நரசிங்கம் மாணிக்கத்தைத் தூண்டுகிறார்.

"அண்ணே... அது வந்து."

"எது வந்து... ஆரம்பி."

"சரிண்ணே... சரிண்ணே..." மிடறு விழுங்குகிறார் மாணிக்கம். பின்னர் தர்மராஜை ஒரு அசட்டுப் பார்வை பார்க்க, அவரிடம் நரிப்பார்வை. மயில்வாகனம் தரையில் எதையோ தொலைத்ததைத் தேடுபவராட்டம்...

நடுவில் ஓங்கி உயர ஆரம்பிக்கிறது ராஜேஸ்வரி குரல்.

"நாம நல்லதுக்குப் பண்ணின தப்பெல்லாம் நம்ம பசங்களுக்குத் தெரிஞ்சுபோச்சு. இப்ப என்ன பண்ணலாம்கறதுதானே உங்க கேள்வி?"

"இல்ல... அதுக்குப் பரிகாரம் பண்ணியே தீரணும்ங்கறதுதான் எங்க முடிவு" வள்ளி திக்கித் திணறி அதற்கு பதிலைச் சொல்லிவிட.

"பரிகாரமா... எப்படி?"

"பிரிச்ச நாமே அவங்களை அவங்க விருப்பப்படி சேர்ந்து வைக்கறதுதான்."

"முடியாதுன்னு சொன்னா?"

"அவங்களா அதைச் செய்துக்குவாங்க. அசிங்கம் நமக்குத்தான்."



"நாம செஞ்சா மட்டும் அசிங்கமில்லையா?"

"இல்ல... அது பரிகாரம், ஒரு வகைல பார்த்தா நாம தப்ப ஒத்துக்கிட்ட பெருந்தன்மை. நல்ல திருத்தம். எல்லாம்..."

"அப்ப நடத்தின கல்யாணம்?"

"அது தான் பொய் நாடகமாயிடிச்சே"

"யோசிக்கணும்" ராஜேஸ்வரி சொல்வது தர்மராஜைக் கீறுகிறது.

"அதுக்கு நேரமில்ல. நம்ம பசங்க இப்ப ஒரு புள்ளில சந்திச்சு பேசிக்கிட்டிருக்காங்க. அவங்க இங்க வரும்போது நாம அவங்கள ஆச்சரியப்பட வைக்கணும். போனது போகட்டும் - நடக்கறதாவது நல்லதா இருக்கட்டும்னு அவங்ககிட்ட பேசி, நாமெல்லாம் மன்னிப்பும் கேட்டுக்கணும்." - வக்கில் கனைத்தபடி தானிருப்பதை ஞாபகப்படுத்துகிறார்.

"சார்... இவரு?"

"எங்க ஃபேமிலி வக்கில். நம்ம பிள்ளைங்க எடுக்கற முடிவுக்குத் தகுந்த மாதிரி இவர் செயல்படுவார்..."

"புரியல..."

"எங்களுக்கு அவங்க காதல்ல இந்த நிமிஷம் உடன்பாடில்லை. காதல்ங்கறது என் வரைல சந்தேகமே இல்லாம காமத்துக்கான ஒரு கவர்ச்சியான பேர்.

என் மகன் ஜோதி வசந்தாகிட்ட எதிர்பார்த்த எல்லாமே அனுகிட்டேயும் இருக்கு. அதே உடம்பு அதே இளமை எக்ஸ்டரா... எக்ஸெட்ரா. அது அப்படியே உங்க வேணுவுக்கும் பொருந்தும்.

அவங்க அவங்களுக்குக் கிடைச்ச வாழ்க்கையைக் காதலிக்கணும், அதான் புத்திசாலித்தனம். அதுக்கு அவங்க ஒத்துக்கிட்டாதான் என் சொத்தெல்லாம் என் பையனுக்கு... இல்லேன்னா அதை நான் என் விருப்பத்துக்கு யாருக்கு வேணாலும் கொடுப்பேன். அதை சட்டப்படியே செய்தும் முடிச்சிடப் போறேன். என் பேச்சைக் கேட்காத என் ஆசைக்கு இணங்காத என்குடும்ப கௌரவத்தைக் காப்பாத்தாத மகனுக்கு என் சொத்து மட்டும் எதுக்கு?"

- தர்மராஜ் பலமான பீடிகையையும் உச்சகட்ட முடிவுகளையும் அதறல் பதறல் இன்றி விவரித்து முடிக்கிறார்.

"என் சொத்தும் நான் சம்பாதிச்சதுதான். என் விருப்பப்படி நடந்துக்கறதா இருந்தா என் மகளுக்கு என் சொத்துல பங்கு உண்டு. இல்லேன்னா நானும் என் மாப்ளை போலத்தான் நடந்துக்கப் போறேன்."

- மயில்வாகனமும் தர்மராஜுக்கு ஒத்து ஊதுகிறார். இமாலயம் இடம் பெயர்வதும், பணக்காரன் திருந்துவதும் வரலாற்றில் நடக்காதவை - வருங்காலத்திலும் நடக்காது என்று யாரோ எழுதியதைப் படித்த ஞாபகம் நரசிங்கத்துக்குள் பாய்ச்சலெடுக்கிறது.

"அப்ப இதுதான் உங்க முடிவா?"

"ஆமாம்!"

"அதைச் சொல்லவா இவ்வளவு தூரம் இந்தக் குடிசைக்கு வந்தீங்க?"

"அதுக்கு மட்டுமில்ல."

"வேற?"



"எங்களைப் போல நீங்களும் உறுதியா இருங்க. நடந்த கல்யாணம் நடந்ததுதான். அதுல மாற்றமில்லன்னு சொல்லுங்க. நம்ம விருப்பத்துக்கு சம்மதிக்கலேன்னா வீட்டை விட்டுப் போகச் சொல்லுங்க. அவங்க வெளியேறி எப்படி வாழறாங்கன்னு நான் பார்த்துட்றேன்."

"இது ஆனாலும் அநியாயம். அக்கிரமம், பணம் இருக்குங்கறதுக்கா இப்படி தப்பு மேல தப்பு பண்றது கொஞ்சம் கூட நல்லா இல்லை."

நரசிங்கம் நெஞ்சைக் கையில் பிடித்துக் கொண்டு கத்துகிறார்.

"மாணிக்கம்... இவர் கிடக்கிறாரு. நீங்க என்ன சொல்றீங்க? நீங்கதான் பொண்ணுக்கு அப்பா?"

- மாணிக்கத்திடம் திணறலின் பெருக்கம். வியர்வையின் கும்மாளம்.

"வந்து... வந்து..."

"வந்து என்ன... போயி என்ன? எங்க கருத்துக்கு ஒத்து வரலைன்னா கை நீட்டி வாங்குன; காசை ஒரு நயா பைசா பாக்கி இல்லாம எண்ணி வைக்கணும்."

"இல்லீங்க. நான் உங்க கட்சிதாங்க எப்பவும் உங்க கட்சிதான்!" - மாணிக்கம் அடித்த அந்த பல்டி? நரசிங்கத்தையே திரும்ப நெஞ்சில் தாக்குகிறது.

"அடேய்..." - எகிறுகிறார்.

"சும்மா கத்தாதேண்ணே. வாங்குனத எப்படித் திருப்பித் தர்றதாம்? அவங்களுக்குத்தான் அப்படி என்ன வீம்பு?"

"அது வீம்பு இல்லடா. ஆசை. பருவத்துல வர்ற நியாயமான ஆசை. குருவிக்கூட்டைக் கலைக்கற

மாதிரி நீங்க பண்ணினது தாண்டா தப்பு... பாதகம் எல்லாம்."

"அப்படியே இருக்கட்டும். இப்ப என்ன கெட்டுப் போச்சு? சார் கேட்டமாதிரி என் மாப்ளை எதிர் பார்க்கறது எது என் பொண்ணுகிட்ட இல்ல..."

"அதெல்லாம் காச விட்டெறிஞ்சா வரிசைல வந்து நிக்கும்டா. ஆனா மனசுன்னு ஒண்ணு இருக்கு. அது எல்லார்க்கும் எல்லார்கிட்டேயும் கிடைக்காதுடா."

"எல்லாம் கிடைக்கும். இப்ப நானும் வள்ளியும் வாழலை. கல்யாணத்துக்கு முந்தி காதலா செஞ்சோம் இல்லியே?"

"புடலங்கா... புரியாமப் பேசறே மாணிக்கம். அவங்க தான் பணத் திமிருல பேசறாங்க. நீயுமா?"

"சாரிண்ணே இதுக்கு மேல ஒரு வார்த்தை பேசி னாலும் நான் மனுஷனா இருக்கமாட்டேன். இது எங்க குடும்ப விஷயம். அவங்க வரட்டும் - நாங்க பாத்துக் கறோம். நீங்க இங்க இருந்து குட்டிக் கலாட்டா பண்ணாம கிளம்பறீங்களா?"

- மாணிக்கம் ஈட்டியை வார்த்தைகளாக்கி ஒளிவு மறைவின்றி நரசிங்கம் நெஞ்சில் செருகுகிறார்.

நரசிங்கம் கண்களில் ஈரம் துள்ள ஆரம்பிக்கிறது. உடம்பில் தந்திக்கம்பி சீண்டப்பட்டது போன்ற நடுக்கம். நாவையும் மௌனம் கவ்வி மடக்குகிறது.

வள்ளியால் அதைத் தாங்க முடியவில்லை.

"அண்ணே..." - ஏதோ சொல்ல வருகிறாள். மாணிக்கம் பாய்ந்து தடுக்கிறார்.



"எ புள்ள வாயை மூட்றியா?"

- அடுத்த நொடி அவள் கப்சிப். நரசிங்கம் வெளி யேறுகிறார்.

மாணிக்கம் தர்மராஜிடம்...

"ஏங்க உங்க அஸ்திரம் வேலை செய்யுமா?"

"செய்யுமாவா? எப்படி வேலை செய்யுதுன்னு பாருங்க. மீறி சொத்து வேணாம்னுட்டு போனான்னு வையுங்க. ஒரு இடத்துல வேலைக்குச் சேர விடமாட்டேன். அவன் போற இடமெல்லாம் என் பணம் போகும். சொந்தமா தொழில் செய்ய ஆசைப்பட்டா கூட நடக்காது. எதை எப்படி அடிக்கணும்னு எனக்குத் தெரியும்."

- தர்மராஜ் ஹிந்தி, தெலுங்கு, தமிழ், கன்னடம் என்று சகல சினிமா வில்லன்களின் கலவையாகவே பேசுகிறார்.

மாணிக்கம் கப்சிப்!

ஆனால்...

ஆனால்...



"ஏ ஜோதி... எப்பவும் நாம் அடுத்தவங்க கைப்பாவை தானா?" - வசந்தாதான் கேட்கிறாள்.

"என்ன சொல்றே வசந்தா?"

"இல்ல... இப்ப நம்ம பெத்தவங்க என்ன முடிவுக்கு வந்துருப்பாங்கன்னு நினைக்கிறீங்க?"

"அவங்க தப்பு வெளிய நமக்குத் தெரிஞ்சிட்டதால நம்மை நம்ம விருப்பப்படி சேர்த்து வைக்கற முடிவுக்கு அவங்க வரலாம்."

"ஆமாம். நானும் அப்படித்தான் நினைக்க றேன். மாமா நரசிங்கம் பேசினதும் அப்படித்தான்." ... வேணு அனுவைப் பார்த்தபடியே சொல்கிறான்.

"ஆமா... இந்த ஆசை ஏன் வேணு அவங்களுக்கு முதல்லையே வரலை?" அனு கேட்கிறாள்.

"இதென்ன பேத்தல், நம்மைப் பிரிக்க முடியும்னு நினைச்சாங்க. அதனால வரலை."

"அதுல அவங்க ஜெயிச்சாங்க தானே?"

எங்க ஜெயிச்சாங்க? அதான் இப்ப எல்லாம் தெரிஞ்சு போச்சே?"

"எப்போ... நம்ம கழுத்துல தாலி ஏறின பிறகு தானே?"

"அதனால.....?"

"அவங்க ஜெயிச்சாங்களா இல்லையா?"

'ஜெயிச்சாங்க். அதுக்கென்ன இப்போ, நம்மள ஏமாத்தி ஜெயிச்சாங்க.'

"நாம ஏமாந்தோமே- அது ஏன் தெரியல உங்களுக்கு?"

"நீ என்ன சொல்ல வர்றே... விதி அது இதுன்னு சுத்தி வளைக்காதே."

"வளைக்காட்டியும் உண்மை அதுதானே... ஒரு பொண்ணுக்கு ஒரு தாலி விழறதுதான் கௌரவம். அது சரியா விழறதும் தப்பா விழறதும் அவ தலை எழுத்து தானே?"

"உளறல் அபத்தம். பைத்தியக்கார பிற்போக்கு இது. கிறுக்குத்தனமான பேச்சு இது."



"அப்படியா... அப்ப நம்ம அம்மாக்கள் அப்பாக்களோட சண்டை வரும்போது முற்போக்குன்னு தாலியைக் கழட்டி எறிஞ்சிட்டு அவங்க விருப்பத்துக்குப் போனா ஒத்துப்போமா?"

"எதுக்கு எதை இணை வெக்கறே...? கல்யாணம் ஆகி வாழ்ந்துட்டவங்களுக்கும் வாழ்க்கையையே தொடங்காத நமக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு புரிஞ்சுக்கோ?"

"வயசுலதான் வித்யாசமெல்லாம். வாழ்க்கைல இல்லை!"

"சரி; என்ன சொல்ல வர்றே... நமக்கு நடந்த கல்யாணம் நடந்ததாவே இருக்கட்டும்னா..."

"ஆமா... விரும்பினது கிடைக்கல. கிடைச்சத விரும்புவோமே!"

"உன்னால முடியுமா அனு? உன்னால முடியுமா வசந்தா?"

"முடியணும் அதுதான் எல்லார்க்கும் நல்லது"

"யாருக்கு? நம்மள ஏமாத்தினாங்களே மாண்புமிகு பெற்றோர்கள்! அவங்களுக்கா?"

"நான் சொஸைட்டிய சொன்னேன். நல்லா யோசிச்சுப் பாருங்க. நாம காதலிச்சப்ப எதிர்த்தாங்க. அவங்க எதிர்த்தது தெரிய வரும்போது ஆதரிக்க வர்றாங்க. எப்பவும் நமக்கு எதிர்த் திசையிலேயே இருக்காங்க. ஒண்ணு காதலைப் பிரிக்கறாங்க. இல்லை கல்யாணத்தைப் பிரிக்கறாங்க. நாம என்ன உயிரில்லாத பொம்மைகளா இவங்க விருப்பப்படியெல்லாம் நடந்துக்க..."

"நம்ம விருப்பப்படி அவங்க நடந்துக்கும்போது நாம இப்படி நினைக்கறதும் பேசறதும் அபத்தம்..."

"நம்ம விருப்பமே மொதல்ல தப்பு ஜோதி அத புரிஞ்சுக்கோங்க..."

"என்ன வசந்தா புதிர்மேல புதிரா போட்டறே. உங்களுக்கு என்ன வந்தது ஏன் இப்படி எல்லாம் பேசறே? நம்மவிருப்பம் எப்படித் தப்பாகும் சொல் பார்ப்போம்?"

"நிச்சயமா தப்புதான்.

நாம காதலர்களா இருந்தப்போ நம்மைப் பிரிச்ச பெற்றோர்களால நாம இழந்தது காதலை மட்டும்தான் ஆனா இப்ப அந்தக் காதலை அடைய நாம இழக்கப் போறது ஒரு திருமண வாழ்க்கையையே... உண்டா இல்லையா?"

"எங்க இழக்கறோம்... காதலை அடைஞ்சு திரும்ப வாழ்க்கையை அடையத்தானே போறோம்?"

"ஒரு வாழ்க்கையை இழந்துதானே இன்னொரு வாழ்க்கையை அடையறோம்."

"சரி அதுக்கென்ன... பிடிக்காத வாழ்க்கையை இழந்து பிடிக்கற வாழ்க்கையை அடையறோம்னு வெச்சுக்கோயேன்."

"இப்படி பெற்றோர், காதல், நடந்துட்ட தப்பான கல்யாணம் எல்லாத்தையும் பணயம் வெச்சு நாம அடையப் போற அந்த வாழ்க்கை, இப்ப நமக்கு அமைஞ்சுட்ட வாழ்க்கையை விட எந்த விதத்துல உயர்ந்தது...

அதைவிட இப்ப அமைஞ்சுட்ட வாழ்க்கையை நாம நேசிக்க ஆரம்பிச்சுட்டா இதுல என்ன குறை



வந்துடும்? இரண்டுக்கும் நீங்க சொல்ற பதில்ல நான் எங்களோட இறுதி முடிவு இருக்கு..."

- அந்தப் பெண்கள் கோவிலின் புனிதத்தை கோபுரத்துக்கு ஏற்றுவது போலப் பேசியதைக் கேட்டு வேணுவும் ஜோதியும் யோசிக்கும்போது நரசிங்கம் அங்கே பிரவேசிக்கிறார்.

# 30

*'அல்ஜிப்ரா புரிந்தது*
*அணுதத்துவம் புரிந்தது*
*அத்வைதம், த்வைதம் என*
*அனைத்தும் கூட புரிந்தது...*
*பெண்ணே - உன் மனதை*
*உன்னை ஏன் என்னால்*
*புரிந்துகொள்ள முடியவில்லை?"*

ஒருவாறு பேசி ஓய்ந்து போய் அமர்ந்திருக்கும் நால்வருக்கும் நடுவில் நரசிங்கம் நுழைகிறார்.

துண்டை உதறியபடி படி ஒன்றிலும் அமர்கிறார்.

"வாங்க மாமா... என்ன தூது அனுப்பியிருக்காங்களா பெரியவங்க...?" வேணு அவரைப் பார்க்கவும் நகத்தைக் கடித்தபடி கேட்கிறான்.

நரசிங்கம் முகத்தில் கேலிச் சிரிப்பின் பரவல்.

"சிரிக்காதீங்க... அதான் உண்மைங்கறது எங்களுக்குத் தெரியும். ஆரம்பத்துல இருந்தே நீங்க ஒருத்தர் தான் கொஞ்சம்நியாயமா நடந்துக்க ஆசைப்பட்டவர். இப்பவும் எங்களை எப்படியாவது சேர்த்து வெச்சு

தப்பைச் சரி பண்ணனும்னு துடிக்கறீங்க. ஆனா அது நடக்காது மாமா."

- வேணு, அனு வசந்தா இருவரின் கருத்துக்களை மனதில் வைத்துக்கொண்டு சொல்வது, நரசிங்கத்திடம் தப்பாகப் போய்விழுகிறது.

வீட்டில் பெரியவர்கள் காட்டும் அந்த முரட்டுத் தீவிரம் தெரிந்துதான் இவன் இப்படிச் சொல்கிறானா? வேணுவை ஒரு தினுசாகப் பார்க்கிறார் நரசிங்கம்.

"என்ன மாமா பாக்கறீங்க? அனுவும் வசந்தாவும் கொஞ்சம் முந்தி அடிச்ச லெச்சரைக் கேட்டா மெய் சிலிர்த்துப் போயிருப்பீங்க.

நம்ப நாட்டுல தாலி சென்டிமெண்டுக்கு எதனால மதிப்பு இருக்குங்கறது நல்லா தெரிஞ்சு போச்சு.

பொம்பளைங்களை எல்லாம் ஒரு தாலி - ஒரு புருஷன் அப்படி இப்படின்னு சொல்லிச் சொல்லியே வளர்த்திட்டோம். அவங்களும் அதுல நல்லா சிக்கிக்க றாங்க."

- வேணுவின் ஆதங்கம் ஜோதியையும் கவ்வி இழுக்கிறது.

"என்னதான் இன்டர்நெட் கம்ப்யூட்டர்னு நாகரீகம் மாறினாலும் நம்ப கல்ச்சர் சில விஷயத்துல கான்க் ரீட்டைவிட வலுடா சாமி! டைனமைட் வெச்சுக் கூட அதைப் பிளக்க முடியாது" ஜோதியின் சலிப்பு அனுவைத் திரும்பவும் சீற வைக்கிறது.

"என்னஇது- ரெண்டுபேரும் பேசிசிட்டே போறீங்க. உங்களுக்குத் துணிவும் தெளிவுமிருந்தா எங்க கேள்விக்கு முதல்ல பதில் சொல்லுங்க.



இந்த தாலி சென்டிமெண்ட், மெண்டல் லாகிங் எல்லாம் பிறகு - அப்படி ஒரு சென்டிமெண்ட்டும் லாகிங்கும் தப்பு இல்ல ஜோதி. அது மட்டுமில்லன்னா பல குடும்பம் பாழாப் போயிருக்கும் ஞாபகம் வெச்சுக்குங்க."

"என்ன பாழாப் போயிருக்கும்... நேத்து வரை என்னைக் காதலிச்சிட்டு இன்னிக்கு இன்னொருத்த னோட வாழறங்கறே... இது சரியா...?"

"நான் வாழ ஆசைப்படலை. ஆனா ஒருவிபத்து போல அது நேரிட்டிருக்கு."

"அந்த விபத்துக்கு எதுக்கு மரியாதை தரீங்க. தூக்கி எறிங்கன்னு தானே சொல்றோம்."

"எதைத் தூக்கி எறியச் சொல்றீங்களோ அதைத் திரும்ப எடுத்துக்கறது எந்த வகைல சரி...?"

"ஃபூல்... ஏன் போட்டுக் குழப்பிக்கறே. ஒரு தப்பான கல்யாணத்தைத்தான் தூக்கி எறியச் சொல்றேன். கல்யாணத்தையே இல்லை."

"கல்யாணத்துல தப்பானது சரியானதுங்கறதெல் லாம் கிடையாது ஜோதி."

நால்வரும் திரும்பவும் பீறாய்ந்து கொள்கிறார்கள். நரசிங்கம் ஆச்சரியத்தின் உச்சிக்கே போய் அவர்களைப் பார்த்து பிரமிக்கிறார்.

"மாமா... வேடிக்கை பார்க்கவா வந்தீங்க. ஞாயத்தச் சொல்லுங்க..."

"என்ன நியாயம் வேணு?"

"நடந்த கல்யாணம் நடந்தபடியே இருக்கட்டுமாம். அதை மாத்திக்க நினைக்கறதுல ஆயிரம் ஞாயம் இருந் தாலும் அது தப்பாம்..."

"என்ன குழந்தைகளா சொல்றீங்க?"

"நல்லா சொன்னீங்க. குழந்தைங்கதான் இவங்க. இவங்க பேச்சு அப்படித்தான் இருக்கு!"

"நீ வாயை மூடு. வசந்தா என்ன சொல்றாங்க இவங்க. உனக்கு உன் காதல் ஜெயிக்க வேண்டாம்?"

"காதல்ல ஜெயிக்கறதே வாழ்க்கையையும் ஜெயிக்கத் தானே மாமா."

"ஆமா."

"இங்க வாழ்க்கையில தோத்துல்ல காதல் ஜெயிக்க வேண்டியிருக்கு."

"இது தோல்வியில்லடா குழந்தை. மாற்றம். தப்பா நிகழ்ந்துட்ட ஒண்ணுக்கான சரியான மாற்றம்."

"எத்தனை அலங்காரமா சொன்னாலும் முதல் கல்யாணம்கறது தோல்விதானே?"

"அது தோக்கறதுதானே உங்களுக்கு நல்லது?"

"எங்களுக்கு நல்லது சரி, ஆனா சமூகத்துக்கு...?"

"இங்க ஏன் சமூகத்தைப் பாக்கறீங்க... சமூகம் உங்களுக்கோ உங்க காதலுக்கோ உதவி செய்ததா?"

"எங்க காதலை எதிர்க்காம இருந்ததே எங்களுக்குச் செய்த ஒருவித உதவிதானே?"

"நீ போட்டுக் குழப்பிக்கறே.. சுருக்கமாகச் சொல்லு... நீங்க உங்க காதல்படி கல்யாணம் பண்ணிக்கிட்டா என்ன தப்பு?"

"ஐயோ... முடியலை! ஒரு பெண் தன் கணவன் காமாந்தகனா, கொடுமைக்காரனா இருந்தாதான் தனக்கு நடந்த கல்யாணத்துல இருந்து விலக்கு பெற நினைக்கலாம். அப்பகூட அவ சகிச்சுகிட்டு அவனோடு வாழ்ந்தா அதை கையாலாகாத்தனம்னு ஒரு பக்கம் சொன்னாலும், மறுபக்கம் அவ தாம்பத்யத்துக்குத் தர்ற பெரிய மரியாதையை யாரும் மறுக்க முடியாது."



"அப்படின்னா நீங்க உங்க காதல்படி இன்னொரு கல்யாணம் செய்துகிட்டா தாம்பத்யத்துக்கு மரியாதை போயிடும்கிறியா?"

"அது எனக்குத் தெரியாது. ஆனா நிச்சயம் எங்க ளுக்கு மரியாதை கிடைக்காது. அது உறுதியாத் தெரியும்."

"காதலிச்சது ஒருத்தனை.. கல்யாணம் பண்ணி கிட்டது இன்னொருத்தனை... இதுல மட்டும் மரியாதை இருக்கா?"

"இதுலயும் இல்லைதான். ஆனா இந்தத் தப்புக்குக் காரணம் நாங்க இல்லையே. எங்களைப் பெத்தவங்க தானே?"

"அப்ப உறுதியா உங்க முடிவு?"

"பல பேர் தவறு செய்ய எங்க காதல் காரணமா இருந்திருக்கு. இனியும் தவறுகள் தொடர நாங்க அனுமதிக்க முடியாது. அதே சமயம், ஒரு தப்புக்கு இன்னொரு தவறு பரிகாரமாகாதுங்கறதால எங்க மேல திணிக்கப்பட்ட கல்யாண வாழ்க்கையையும் நாங்க வெறுக்கப் போகிறதில்ல. பழசையெல்லாம் மறக்கணும், புதுசை நேசிக்கணும். இதுதான் இப்ப எங்க முன்னால இருக்கற விஷயம்...!"

"பேத்தல்... பயங்கர பிற்போக்குத்தனம். வாழ வழி இருந்தும் நீங்க இப்படிச்சிந்திக்கறது முட்டாள்தனம் கோழைத்தனம். இன்னும் என்னவெல்லாம் உண்டோ எல்லாம்!"

-ஜோதி நாலு பேர் திரும்பிப் பார்க்குமளவுக்குக் கத்துகிறான். நரசிங்கம் எதையுமே பேசாமல், கோபுரத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறார்.

அந்தப் பெண்கள் சொல்வதில் உள்ள நியாயம் அவருக்கு நன்றாகப் புரிந்ததோ என்னவோ, ஜோதியும் வேணுவும் அதை மறுதலிக்கும் போது அவர்களோடு சேர்ந்து பேச அவரால் முடியவில்லை.

இவர்கள் சாதாரண பெண்களில்லை. உதாரணப் பெண்கள். எப்படி இத்தனை சீக்கிரமாய் காதலை உதற இவர்களால் முடிந்தது? எப்படி நடந்த அத்தனை தவறு களையும் ஜீரணித்து, நடந்தது நடந்ததாக இருக்கட்டும் என்று போக முடிகிறது?

பெண் மனதை எடையிடுவதும், கடல் நீரை அளந்து பார்க்க முனைவதும் இயலாதது என்பார்களே... அது இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் பெண்கள் இப்படி நடந்து கொள்வதைப் பார்த்துதானா?"

நரசிங்கம் ஆச்சரியத்தோடும் துளி அதிர்ச்சி யோடும் அமர்ந்திருக்க 'மாமா' என்று அவர் தோளைப் பற்றி உலுக்குகிறான் வேணு.

"என்னப்பா...?"

"நீங்க என்ன சொல்றீங்க?"

"நான் சொல்ல என்ன இருக்கு?"

"அவங்க உளர்றாங்க. யார் இவங்க மனசை இப்படிக் கெடுத்ததுன்னு தெரியல, சொல்லுங்க மாமா..."

"முடியாது வேணு. நீங்க உணர்ச்சி வசப்பட்டு மட்டும் பேசறீங்க. அவங்க அதைக் கடந்து சமூக



சிந்தனையோடும் பேசறாங்க. அவங்க ரெண்டு பேரும் சராசரிப் பெண்களில்ல வேணு!"

"உளறாதீங்க. வாழ்க்கை ஒண்ணும் சினிமா இல்லை மாமா. அதுலதான் கதாசிரியர் ரொம்ப செயற்கையா இப்படி ஒரு முடிவை வைப்பார். கதாநாயகியும் குடம் குடமா அழுதுகிட்டே டயலாக் பேசுவா! இவங்கள பிராக்டிகலா பேசச்சொல்லுங்க. சிந்திக்கச்சொல்லுங்க."

"போடா முட்டாள். சினிமா வேணும்னா செயற் கையா இருக்கலாம் ஆனா வாழ்க்கை முடிவு அப்படி இல்லை. எப்பவும் சொல்றேன் எங்கேயும் சொல்றேன்... ஒரு தாலிக்குக் கிடைக்கிற மதிப்பு மரியாதை இரண்டா வது மூணாவதுக்கு இருக்கறதேயில்லை.

இப்ப சொல்றேன்... உங்க அப்பா அம்மாக்கள் துளி கூட திருத்தலை. நீங்க உங்க விருப்பப்படி கல்யாணம் பண்ணிக்க அவங்க சம்மதிக்கலை. அப்படிச் செய்து கிட்டா உங்களுக்கு சொத்துல பங்கு இல்லை. வாழவும் விடமாட்டோம்னு சபதம் எல்லாம் செய்துருக்காங்க.

அதைக் கேட்ட நான் உங்களை உங்க விருப்பப்படி எப்படியும் வாழ வெச்சு அவங்களை ரெண்டுல ஒண்ணு பார்க்கணும்னுதான் முடிவு செய்து இங்க வந்தேன்.

ஆனா இவங்க பேச்சு என்னை மாத்திடிச்சு. கல்யாண வாழ்க்கைங்கறது உங்க வரைல அமைச்சுக்கற ஒண்ணு... இவங்க வரைல அமையற ஒண்ணு.

அமையறது தப்பா இருந்தாலும் அதை நேசிக்க ஆரம்பிச்சுட்டா அந்தத் தப்பே சரியா மாறிடும்.

ஆனா அமைச்சுக்கறது தப்பா இருந்தா அதைச் சரி செய்யறேன்னு திரும்ப அதுல கை வைக்கத் தோணும்,

ஒரு முறை கை வைச்சா மறு முறையும் கைவைக்கறது சுலபமாயிடும்.

அப்புறம் வாழ்க்கையும் போட்டுக்கழட்டற சட்டை மாதிரியாயிடும். கிழிஞ்சு போயிடிச்சு, சின்னதாயிடிச்சு, சாயம் போயிடிச்சுன்னு சட்டையை மாத்திக்கற மாதிரி, அவ எதிர்த்துப் பேசினா... சந்தேகப்படும்படி நடந்துக் கறா, சொன்ன பேச்சு கேட்கமாட்டேங்கிறான்னு சின்னக் காரணங்களுக்கெல்லாம் கணவனை மனைவியும், மனைவியை கணவனும் மாத்திக்கற நிலை வந்தா நல்லாவா இருக்கும்?"

- நரசிங்கம் கேட்கும் கேள்விகள் மீனாட்சிக்கும் பிடித்ததோ என்னவோ உள்ளிருந்து மணியடித்து ஆமோதிப்பு தருகிறாள்.

அவர்கள் இளக ஆரம்பிக்கின்றனர். கோபம் தணியத் தொடங்குகிறது.

"டேய் உங்க காதலிகளை விட உங்க மனைவிகள் மாணிக்கங்களடா...!"

- நரசிங்கம் சிலிர்ப்புடன் சொல்லியபடி எழுகிறார். அந்த இரண்டு பெண்களையும் நெருங்கி கைகளை இழுத்துப் பற்றியபடியே கேட்கிறார்.

"குழந்தைகளா... உங்கள ரொம்பப் பாராட்டறேன். பொய்யும் புனைசுருட்டுமான உங்க பெற்றோர்கள் வயித்துல நீங்க எப்படிப் பொறந்தீங்களோ தெரியல...

உங்களப் பார்க்கும்போது இளைய தலைமுறை மேல எனக்கு நல்ல நம்பிக்கை வருது. பழமையை மதிக்கற புதுமைதான் எப்பவும் வாழ்ந்திருக்கு.

உங்கள மனசார நான் ஆசீர்வாதம் பண்றேன்.



ஆனா..."

- நரசிங்கம் போடும் அந்த ஆனா'வில் ஆயிரம் டன் அழுத்தம்.

"என்ன மாமா ஆனா...?" அனு எழுந்து புடவை முந்தியால முகம் துடைத்தபடியே கேட்கிறாள். ஜோதி யும், வேணுவும் கூட கேட்காமல் அந்தக் கேள்வியை தங்கள் புருவ வளைப்பில் சுமந்து கொண்டு அவரைப் பார்க்கின்றனர் வசந்தா எழுந்து அவரருகில் வந்து அவரது தோளைப் பற்றுகிறாள்.

"என்ன மாமா ஆனா...? சொல்லுங்க."

"சொத்துக்கு ஆசைப்பட்டும் பெரியவங்களுக்கு பயந்தும்தான் நீங்க நடந்த கல்யாணத்தை ஒத்துக்கிட் டீங்கன்னு எல்லாரும் நினைப்பாங்களேம்மா...?"

"அதுக்காக...."

"உங்க முடிவுக்கு ஒரு விலை மதிப்பே கிடை யாதும்மா! அதைக் கொச்சைப் படுத்தற விதமா யார் நினைச்சாலும் என்னால தாங்கிக்க முடியாது."

"சரி. என்ன பண்ணலாம் சொல்லுங்க...?"

"சொல்வேன் நான். கேட்பீங்களா?"

"தாராளமா..."

"பொம்பளங்க உங்க மேல எனக்கு நம்பிக்கை இருக்கு. ஆனா உணர்ச்சிகள் சமாதானம் ஏற்படாத இவங்களை நினைச்சாதான்..." நரசிங்கம் வேணுவையும் ஜோதியையும் பார்த்தபடியே பேச்சில் சுரத்தைக் குறைக்கிறார்.

"விஷயம் என்னன்னு சொல்லுங்க, அவங்க சொத்துல ஒரு காசுகூட வேண்டாம்னு நாங்க சொல்லணுமா..."

கூட்டி அள்ளியதுபோல தெளிவாகப் பேசும் வசந்தாவை, கண்கள் பனித்துப்போகப் பார்க்கிறது அந்தக் கிழடு.

“அ... ஆமா... ஆமா...! வாழ்க்கை. உறவு, மனசு, ஆசை, பாசம் எல்லாமே சந்தைல கிடைக்கற சமாச் சாரம்கறது உங்க பெற்றோர் நினைப்பு.

எல்லாத்துக்கும் விலை இருக்கு. விலை வைக்க பணம் இருக்குங்கற கொழுப்பு அவங்களுக்கு.

அந்தக் கொழுப்பை நீங்க அடக்கணும்!”

“நாங்க அடக்கறோமோ இல்லையோ... இவங்க நிழல் மேல பட்டாலும் நம்மால மனிதர்களா சிந்திக்க முடியாதுங்கறதால இவங்களை விட்டு எல்லா விதத் துலயும் ஒதுங்கி வாழறதுங்கற முடிவையும் நாங்க எப்பவோ எடுத்துட்டோம்.”

- அந்தப் பெண்கள் நரசிங்கத்தைத் திக்கு முக்காட வைக்கின்றனர். ஆனால் ஜோதியும் வேணுவும் பதறு கின்றனர்.

“ஏய்... என்ன இது? எப்ப இதுபத்தி எங்கிட்ட பேசினே நீ? உன் இஷ்டத்துக்கு முடிவெடுக்க நீ என்ன பெரிய மகாராணியா...?” - வேணு பாய்கிறான்.

“நான்சென்ஸ். உன் அப்பா அம்மாவை நீ வேண் டாம்னு விலக்கலாம். என் அப்பா அம்மாவையும் அப்படி விலக்கணும்னு நீ எப்படிச் சொல்லலாம்?

அவர்தான் புரியாம பேசறார்னா நீங்களும் பேசி கிட்டே போறீங்களே...?

ஓக்... நம்ம வாழ்க்கை விஷயத்துல நீங்க முடிவெடுத்தா மட்டும் போதாது. நாங்களும் அத ஒத்துக்கணும். இல்லேன்னா...?”



- ஜோதி தனது முகத்தின் இன்னொரு பக்கத்தைக் காட்டி சீறி எழுகிறான். யாரும் எதிர்பார்த்திராத திருப்பம்.

●●●

# 31

*‘நிறைய புரிந்தது போல் இருநதது.*
*ஆனால் எதுவுமே புரியாமல் போனது!*
*நிறைய இனித்தது போல் இருந்தது.*
*ஆனால் அவ்வளவும் கசாப்பாகிப் போனது!*
*- இதைத்தான் காதல் என்கிறார்களா?’*

●●●

**வே**ணுவும், ஜோதிஷங்கரும் தங்கள் கருத்துக்கு எதிராகப் பேசியதை அந்தக் கோபத்தையும் ஆச்சரிய மாகப் பார்க்கிறாள் அனு. வசந்தாவும்...

பார்வையா அது? ஆயிரம் கேள்விகளை உள் ளடக்கிய பரீட்சை வினாத்தாள்!

“எதுக்கெடுத்தாலும் பூடகமா கொஞ்சம் தலையை சாய்ச்சுப் பாக்றதே உங்களுக்கு வழக்கமாப் போச்சு, என் கேள்விக்கு பதில் சொல்லு...’ ஜோதி சீற்றத்தை குறைக்காமல் கேட்கிறான்.

“ஆமா நான் யாரு?” - அனுவும் மடக்க ஆரம்பிக் கிறாள்.

“அனு”

“அது தெரியும்.... உங்களுக்கு உறவு?”

"எந்த உறவைச் சொல்ல... மாமன் மகள்ங் கறதையா... இல்லை மனைவிங்கறதையா... எதை?"

இரண்டும்தானே?"

"இதோ பார்... வந்ததுல இருந்தே பாக்கறேன்... நீங்க கேள்வி கேக்கிறது - இல்லேன்னா மௌனமா கழுத் தறுக்கறதுன்னே ரெண்டு பேரும் எங்களைக் கொன்னு கிட்டுருக்கீங்க.

பைத்தியக்காரத்தனமா நான் யார்னுல்லாம் இப்ப எதுக்குக் கேக்கறே அனு...?"

"அனு கேட்ட அதே கேள்வியை வேணு அத்தான் உங்களைப் பாத்து நான் கேட்டதாகவும் வெச்சுக் குங்க...' வசந்தா இடையில் புகுந்து வேணுவையும் இழுத்துப் போட...

"இதோ பார்... சுத்தி வளைக்காம என் கேள்விக்கு பதில் சொல்லுங்க. தன்னிச்சையா நீங்களா எப்படி முடிவெடுக்கலாம்? இதுதான் இப்ப எங்க கேள்வி?"

:அந்த முடிவு தப்பா?"

"தப்பு சரி... அடுத்தபிரச்சினை... எங்ககிட்ட ஒரு வார்த்தை..."

"கேட்டுத் தெரிஞ்சுக்கத் தேவையில்லாத அளவு உங்க முடிவும் எங்க முடிவும் ஒண்ணா இருக்கும்னு நினைச்சுதான் நாங்க அப்படிச் சொன்னோம். தப்பா...?"

"அது... அது..."

"என்ன அது...நீங்க தடுமாறுவதைப் பார்த்தா நாங்க உங்களை சரியாப் புரிஞ்சுக்கலைன்னு தோணுது. நீங்க எங்க கருத்தை மறந்து கோபப்படறதைப் பார்த்தா



நீங்களும் எங்களைப் புரிஞ்சுக்கலைன்னு தோணுது. அங்கிள்! நீங்க சொல்லுங்க. நான் சொல்றது சரிதானே?"

- ஒதுங்கி ஒரு ஓரமாக நால்வரின் வாதப் பிரதி வாதங்க்ளை ஒரு பார்வையாளராக இருந்து கேட்டு வரும் நரசிங்கததைப் பிடித்து உள் இழுத்தாள் அனு.

அவர் சற்றுத் திணற ஆரம்பித்தார்.

"என்னம்மா இது... இது உங்க பிரச்சனை. என்னை ஏன் இழுக்கறே?"

"இழுக்கலே... சரியா தப்பா அத மட்டும் சொல் லுங்க... நடு நிலைல நின்னு சொல்லுங்க..."

"சரிதாம்மா..."

"அதானே உண்மை...?"

"வெங்காயம்! சரி புரிஞ்சுக்கலை. அதுக்கென்ன இப்போ?" ... இப்போது பாய்ந்து வந்தவன் வேணு.

"அப்படி வாங்க."

"வந்து...' - இது ஜோதி.

"இல்ல நாம் என்ன பழகினோம்... என்ன புரிஞ்சு கிட்டோம்; அதக் கேக்க வர்றேன்..."

- அனு எதன்பொருட்டு அப்படி வருகிறாள் என்பது ஜோதிக்கும், வேணுவுக்கும் புரிந்ததோ இல்லையோ, நரசிங்கத்துக்குப் புரிகிறது.

நிமிர்ந்து மிகக் கூர்மையாக அவளைப் பார்க்கத் தொடங்குகிறார்.

"இதோ பார் அனு... யாரும் யாரையும் முழுசா எந்தக் காலத்துலையும் புரிஞ்சுக்க முடியாது. அத தெரிஞ்சுக்கோ முதல்ல..."

"அப்ப கருத்து வேற்றுமை மனித வாழ்க்கைல ரொம்ப சகஜம் அப்படிதானே?"

"பின்னே..."

"ரைட்- இப்படி புரிஞ்சுக்காத நிலைல நம்ம காதலை எப்படி தெய்வீகமானதுன்னு சொல்ல முடியும்?"

"சரி இல்ல... சாதாரணமானதுன்னே வை! அதுக்கென்ன?"

"பொறுங்க... இன்னும் பாக்கி இருக்கு. இப்படிப் புரிஞ்சுக்க முடியாததாலதான் பெரியவங்க நமக்குள்ள புகுந்து சுலபமா நம்மைப் பிரிச்சாங்க. சரியா...?"

"இருக்கலாம்...."

"இருக்கலாம் ல்ல... அதுதான் உண்மை. நாம நல்லா ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சிக்கிட்டிருந்தா பெரியவங்க எந்த சதி வேலை பாத்திருந்தாலும் நாம பிரிஞ்சிருக்கமாட்டோம். உங்களைக் காதலிச்ச நான், இவர் பக்கத்துல உக்காந்து தாலிகட்டிக்க கழுத்த நீட்டியிருக்க மாட்டேன். வேணுவான நீங்களும் வசந்தா கழுத்துல தாலி கட்டியிருக்க மாட்டீங்க..."

- அனு விளக்கம் இப்பொழுது வேணுவுக்கு உறைக்கத் தொடங்குகிறது. அங்கே நால்வரிடையே திரும்பவும் ஒரு அழுத்தமான வெட்கம் கலந்த மௌனம் கூடுகட்ட ஆரம்பிக்கிறது.

"அம்மாடி... நீ எங்க வரேன்னு நான் சொல்லவா?"

- நரசிங்கம் திரும்பவும் அந்த மௌனத்தைப் பிளக்கப் பார்க்கிறார்.

"சொல்லுங்க..."



இப்படி கருத்து வேற்றுமைகள் நிரம்பிய மண வாழ்க்கைல கல்யாண உறவை மதிச்சாதான், ஒருத்தருக்கொருத்தர் விட்டுக் கொடுத்தோ இல்லை ஒப்புக் கொண்டோ அந்தவாழ்க்கையைத் தொடர முடியும். அப்படி இல்லைன்னா, சரி ஒத்து வரலைன்னு ஒவ்வொரு பிரச்சினையின் போதும் பிரிஞ்சு போறத பத்தித்தான் சிந்திப்போம்கறே... அது தானேம்மா...?"

"ஆமாம் சார்..."

"அப்ப உங்க காதல்ல மோகமும் ஆசையும் இருந்த அளவு வாழ்க்கைக்கு மிகத் தேவையான விட்டுக் கொடுத்தலோ, சரியான புரிதலோ இல்லேங்கறே..."

"எக்ஸாக்ட்லி...!"

- அனு அழுத்தமாகக் கூற 'அதுவே என் கருத்தும் கூட' என்கிற தோரணை குறையாமல், வசந்தா அவளை எட்டி அவள் கையை வளைத்துக் கொள்ள, வேணுவும் ஜோதியும் திரும்பவும் அந்த இரண்டு பெண்களின் யதார்த்தமான அதே சமயம் சத்யபூர்வமான விளக்கத்தின் முன் கூனிக் குறுகிப் போகின்றனர்.

"என்னப்பா சொல்லப் போறீங்க...?" நரசிங்கம் அந்த ஆண் மகன்களைப் பார்த்துக் கேட்கிறார்.

"இதென்ன பட்டிமன்றம்...? நாங்க இனி வாழப் போறதப் பத்தி யோசிக்கிறோம். இவங்களோ நாமெல்லாம் எப்படி இருந்தோம்கறத பத்தியே பேசறாங்க?"

"இருக்கறத வெச்சிதானே இருக்கப் போறது நிலைக்கும்...?"

- திரும்பவும் அந்தக் கேள்வி மௌனத்தில் அவர்களை புதைக்கப் பார்க்கிறது.

நரசிங்கத்துக்கும் வந்த நோக்கமே அடிபட்டுப் போய் விட்டது. அந்த இரண்டு பெண்களின் தீர்க்கத்தை திடத்தை அவரால் ஒதுக்க முடியவில்லை.

அது அந்த இரண்டு ஆண்மகன்களையும் அடக்கி விட்டதைப் பார்க்கிறார்.

கோயிலில் வழக்கம்போல ஜனத்திரள்...

பாசிபடிந்த பச்சை நீர் பொற்றாமரைக் குளம், நால்வரையும் படிக்கட்டின் மேல் வேடிக்கை பார்க்கிற மாதிரி தெரிகிறது.

வள்ளுவனின் குறளில் இருந்து எத்தனையோ அழிக்கப் படமுடியாத இலக்கியங்களை சங்கப்பலகை யில் வைத்து மூழ்கவிடாதபடி ஏந்தித் தந்த திருக்குளம் அல்லவா இது?

வாழ்க்கையைப் பற்றிய தெளிவோடும், கலாச்சாரம் கெடாத சிந்தனையோடும் பேசும் அந்தப் பெண்களைப் பார்க்கும்போது அதற்கே பெருமை போலும்! அவர் களை ஆசீர்வதிக்க ஆசைப்படுகிறமாதிரி தளும்பிக் கொண்டிருக்கிறது.

நடுநடுவே மீனாட்சி சந்நிதியில் ஒலிக்கும் ஆனந்த மணி நாதம்.

"சரிம்மா கிளம்புங்க.. மத்த விஷயங்களை நாளைக்கு பேசலாம். ஒரே நாள்ல பல அழுத்தமான முடிவுகளுக்கு வர முடியாது. வரவும் கூடாது..."

நரசிங்கம் துண்டை உதறியபடி எழுந்திருக்கும் போது,

"என்ன தெளிவான முடிவுக்கு வந்துட்டீங்களா?" என்று கேட்டபடி அங்கு நுழைகிறார் வக்கீல் பாலசந்தர்.



தர்மராஜனோடும் ராஜேஸ்வரியோடும் மாணிக்கம் வீட்டுக்கு வந்தவராயிற்றே இவர்...

இவருக்கு எப்படி இப்படி நான்கு பேரும் குளத்தங் கரையில் கூடிப் பேசிக் கொண்டிருப்பது தெரியும்? நரசிங்கத்திடம் மட்டுமல்ல... வேணு ஜோதியிடமும் அதே கேள்விதான்.

"நாங்க எங்க கருத்தை எவ்வளவு அழுத்தமா சொல்ல முடியுமோ அவ்வளவு தூரத்துக்குச் சொல்லிட் டோம் சார். இனி அவங்க தான் பேசணும்" என்கிறாள். அனு.

"டோன்ட் ஒர்ரி... அவங்க கேட்டாலும் கேக் கலைன்னாலும் உங்க முடிவுல நீங்க மாறாதீங்க..." என்று வக்கீல் சொல்வதைப் பார்த்தால் அவர்களின் கருத்துக் களுக்கெல்லாம் பின்னால் அவர்தான் இருக்கிறாரோ என்கிற சந்தேகமும், அதிர்ச்சியும் அங்கு ஜோதிக்கும், வேணுவுக்கும் உருவாக அவரை கோபத்தோடு பார்க் கின்றனர்.

அவரோ "உங்க சிக்கல்ல முத்துச்சாமியையும் அவரோட ரெண்டு குழந்தைகளையும் சுத்தமா மறந்துட் டீங்களே.. இது நியாயமா?" - என்று ஒரு கேட்க வேண்டிய கேள்வியை கேட்கிறார்.

அப்பொழுதுதான் வடிவாம்பாளை இழுத்து விட்டு சோகம் தாளாதபடி தத்தளிப்போடு இருக்கும் முத்துசாமி என்னும் ஒரு பவித்ரமான காதலின் நினைப்பு அவர்களுக்குள் சிலிர்த்தெழுகிறது.

"அடடா..."

# 32

'காதலும் ஒரு ஃபீனிக்ஸ் பறவைதான்...
சுட்டெரிப்பதில் அதன் புதிய எழுச்சியும்
புதிய வானத்தில் அதன்
சிறகசைப்பும்... ஆஹா!'

தட்டில் உள்ள சோற்றோடு விளையாடிக் கொண்டிருந்தாள் முத்துச்சாமியின் இளைய மகள். மூத்தவள் தானே குளிக்கும் முயற்சியில், கண்ணில் சோப்பு நுரை இறங்கியதால் கத்திக் கொணடிருந்தாள்.

ஆனால் எதுவும் முத்துச்சாமியின் காதில விழவேயில்லை.

கிட்டத்தட்ட லெனின் தாடியோடு சுவரில் சாய்ந்தபடி கிடக்கிறார்.

முத்துச்சாமியைப் பார்க்கும் நோக்கத்தோடு வீட்டு வாசலில் காரை விட்டுஇறங்கும் இரண்டு ஜோடிகளோடு நரசிங்கம் மாமாவும் இதை எல்லாம் பார்த்துவிட்டுப் பதைத்துப் போகிறார். கூடவே வக்கீல் பாலசந்தர், அவர்களைப் பார்த்துவிட்டு வரும் பக்கத்து வீட்டுக்காரம்மாள் அந்த பதைப்பைக் கூட்டுவது போலப் பேச ஆரம்பித்தாள்.

"அந்தப் பொண்ணு செத்தாலும் செத்துச்சு... இந்த மனுஷனால அந்தத் துக்கத்துல இருந்து மீண்டு வரவே முடியல. பசங்களுக்காகவாவது, தன்னைத் திடப்படுத்திக்க வேண்டாம்?"

அவர்கள் பக்கத்து வீட்டுக்காரம்மாவின் கருத்தைக் கேட்டபடி உள்ளே நுழைகின்றனர்.



பெரியவளின் அலறல் சப்தம் கேட்டு வசந்தா பாத்ரூமுக்குள் நுழைய, சிறியவளின் சாப்பாட்டுக் கோலம் பார்த்து அனு அவளை நெருங்க, ஆண்கள் நான்கு பேரும் முத்துச்சாமியை வளைத்துக் கட்டி நிற்கின்றனர்.

"என்ன சித்தப்பா இது தேவதாஸ் மாதிரி...?"

ஜோதி கேட்டதற்கு முத்துச்சாமியிடம் எந்த பதிலுமில்லை. காதில் விழுந்ததா என்று கூடத் தெரியவில்லை.

"சித்தப்பா உங்களைத்தான்" - சற்று தொண்டைகிழியக் கத்துகிறான். முத்துச்சாமி மிக நிதானமாக அவர்களைப் பார்க்கிறார். "வாங்க... வாங்க..." என்கிறார். குரலில் துளிகூட பலமில்லை.

"ஆமா என்ன இது?"

"ப்ச்ச்..."

"என்ன ப்ச்ச்.... இப்படி நீங்க இருந்தா எப்படி சித்தப்பா? குழநதைகளை பார்த்தீங்களா?"

"என்ன முத்துச்சாமி சின்னப் பிள்ளையாட்டம் நடந்துக்கறீங்களே. ஒரு மரணம் இப்படியா உங்களை நிலை குலைய வைக்கும்?" வக்கில் தன் பங்குக்குத் தேறுதல் தர முயல, முத்துச்சாமி அவரை நிமிர்ந்து பார்க்கும் பார்வையில் ஆயிரமாயிரம் அர்த்தங்கள்.

உலகத்துல பொறந்த எல்லாரும் ஒருநாள் செத்துத் தானே தீரணும், அதையே நினைச்சிட்டிருந்தா ஆச்சா? நம்மளை நம்பி இரண்டு குழந்தைங்க இருக்குல்ல. அதுவும் பெண் குழந்தைங்க!"

- ஆளாளுக்கு ஆறுதல் சொல்கிறார்கள். முத்துச்சாமி சிரிக்கிறார். அந்தச் சிரிப்பில் எக்காளம், கேலி.

சோகம் இன்னும் பிடிபடாத அர்த்தங்களின் பலவித கலவை!

"என்ன சித்தப்பா நீங்க... கொஞ்சம் முந்திவரை எங்க ஜோடிங்க சிரிச்சு எங்க கழுத்தை அறுத்தாங்க. இப்ப நீங்களா?"

"ஆமா, வக்கீலோட வந்திருக்கீங்களே என்ன சமாச்சாரம்?"

முத்துச்சாமி எல்லாவற்றையும் விட்டு விட்டு, நேரே விஷயத்திற்கு வந்தார். அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"பேசுங்கப்பா... நடந்த கல்யாணத்தை முறிச்சுக் கிட்டு உங்க இஷ்டப்படி கல்யாணம் பண்ணிக்கப் போறீங்கதானே?"

திரும்பவும் அவர்களிடம் அடர்வான மௌனம்.

"இல்ல முத்துச்சாமி" என்று அவர்கள் சார்பில் பதில் சொல்ல ஆரம்பிக்கிறார் நரசிங்கம்.

"இல்லையா?"

"ஆமாம். நடந்துட்ட கல்யாணம் தப்பானதாகவே இருந்தாலும், அதே இருந்துட்டுப்போகட்டும்றாங்க இந்தப் பொண்ணுங்க. தாலியக் கழட்டி எறிஞ்சிட்டு இன்னொரு கல்யாணம் பண்ணிக்க அவங்களுக்குச் சம்மதம் இல்ல..."

நரசிங்கம் சுருக்கமாகச் சொன்னதன் எதிரொலியாக முத்துச்சாமி பார்வை அந்த பெண்கள் பக்கம் திரும்புகிறது. அவர்கள் இருவரும் இரண்டு குழந்தைகளிடம் தங்களை இழந்திருக்கின்றனர். ஒருத்தி தலை துவட்டி விட்டுக் கொண்டிருக்கிறாள். இன்னொருத்தி சோறு ஊட்டிக் கொண்டிருக்கிறாள்.



ஆச்சரியமாக இருக்கிறது.

"அந்த விவகாரம் இருக்கட்டும். இப்ப எங்க கவலை எல்லாம் நீங்கதான். உங்க குழந்தைங்கதான். நான் ஒண்ணும் உங்களக் கேட்கலாமா?" நரசிங்கம் பீடிகை போடுகிறார்.

"தாராளமா கேளுங்க."

"நீங்க ஏன் இந்த இரண்டு குழந்தைங்களுக்காக. இன்னொரு கல்யாணம் பண்ணிக்கக் கூடாது?"

நரசிங்கம் சாதாரணமாகத்தான் கேட்டார். ஆனாலும் முத்துச்சாமி முகம்பேயறைந்த மாதிரி மாறி விட்டது. பதில் சொல்லாதபடி தேம்பித் தேம்பி அழ ஆரம்பிக்கிறார்.

"ஹலோ... ஏன் அழறீங்க? நான் என்ன தப்பா சொல்லிட்டேன்?"

"சித்தப்பா நானும் கேக்கறேன். இப்படி அழுதா என்ன அர்த்தம்? பதில் சொல்லுங்க.."

"என்னத்தையா சொல்ல... என் வடிவு செத்து முழுசா ஒரு வாரம் கூட ஆகலை. அதுக்குள்ற அடுத்த கல்யாணம் பத்திப் பேசறீங்களே..."

"நீங்க பேச வெச்சிட்டீங்க. இந்த குழந்தைகளப் பார்த்தீங்களா? அவங்களுக்காகத்தான் சொல்றோம்."

"இதோ பாருப்பா... எந்த ஒரு விஷயத்துக்குப் பின்னாலையும் அதன் தன்மைக்கேற்ப ஒரு நியாயம் இருக்கத்தான் செய்யும். இருந்தாலும் மனசுக்குப் பிடிச்ச நியாயம்னு ஒண்ணு இருக்குல்ல?"

"சரி; அது என்ன...? அதைச் சொல்லுங்க?"

"கல்யாணப் பேச்செல்லாம் எடுக்காதீங்கய்யா. ஒரு பொண்ணு மட்டுமில்ல... ஒரு ஆண் கூட இரண்டாவது கல்யாணம் பண்ணிக்கறது என் வரைல தப்பு தான் இது வடிவு வாழ்ந்த வீடு."

"அவங்கதான் இப்ப உயிரோட இல்லையே. இருந்தா தானே தப்பு?"

"இது தப்பு சரி சம்பந்தப்பட்ட விஷயம் இல்ல ஜோதி! மனசு சம்பந்தப்பட்டது. செத்துட்ட பிறகுதான் எனக்கு வடிவு நினைப்பே அதிகமா இருக்கு. அவ செத்துட்டதாவே என்னால நினைக்க முடியல..."

"அப்ப அவங்க ஆவியா வந்து இந்தக் குழந்தைங்களைப் பார்த்துக்கும்? நீங்க உளர்றீங்க சித்தப்பா..."

"நீ என்ன சொன்னாலும் சரி ஜோதி என் மனசுல இன்னொரு பெண்ணுக்கு இடம் கிடையாது."

- முத்துச்சாமியின் அந்தப் பிடிவாதம் ஜோதியையும் வேணுவையும் நெம்பித் தூக்குகிறது.

"செத்துட்ட பிறகும் இவரால மறக்க முடியலியே. உயிரோட இருக்கும்போதே எங்களை மறந்துட்டு வாழச் சொல்றீங்களே... நியாயமா?"

- இரண்டு பேரும் தங்கள் மனைவிகளை அருகில் அழைத்துக் கேட்கின்றனர்.

அதுவரை தங்கள் தரப்பு நியாயங்களுக்காக ஒரு பட்டி மன்றமே நடத்திய அந்தப் பெண்களும் கூட, இந்தக் கேள்வி முன் தடுமாறித்தான் போகின்றனர்.

வக்கீல் நடுவில் நுழைகிறார்.



"உங்க பிரச்சினையைப் பிறகு பேசிக்கலாம். முதல்ல இவருக்கு எந்த வகைல உதவலாம்கறத பத்திப் பேசுவோம். அதுதான் இங்க ப்ரியாரிட்டி."

"ஆமாம் சார்...! சித்தப்பா இவ்வளவு நாளாதான் சுகப்படாம இருந்துட்டார். இனியாவது அவர் நல்லா இருக்கணும். நான் இப்பவே அப்பா கிட்ட பேசி, அதுக்கு ஏற்பாடு செய்யறேன்."

"ரொம்ப சரி ஜோதி. நீங்களும் அனுவும் போய் அதுக்கு ஏற்பாடு செய்துட்டு வாங்க நானும் வசந்தாவும் இங்கேயும் இருந்துமத்த விஷயங்களைப் பார்த்துக்க றோம்.'

- வேணு பாதை போட்டுத் தருகிறான்.

"ஏய் பசங்களா... என்ன இது? என்னைப் பாத்துக்க எனக்குத் தெரியும். நீங்க கல்யாணமான ஜோடிங்க. சந்தோஷமா இருக்கற வழியப்பாருங்க."

"எங்க சந்தோஷமே இப்ப உங்க சந்தோஷம்தான். பேசாம இருங்க...' வாயை அடக்கி விட்டு அனுவோடு காரைக் கிளப்புகிறான் ஜோதி.

குழந்தைகள் குளித்திருக்கவில்லை. எனவே அவர்களைக் குளிப்பாட்டுவதில் வசந்தா முனைப்பாகிறாள்.

வேணுவும் நரசிங்கமும் ஒதுங்கி நின்று எதையோ பேசுகின்றனர். வக்கீல்கள் மட்டும் தனியாக...

அவரைக் கை தட்டி அழைக்கிறார் முத்துச்சாமி.

"ஆமா... இவ்வளவு தீவிரமா காதலிச்சவங்க எப்படி பட்டி மனசை மாத்திக்கிட்டாங்க?"

"தீவிரமா காதலிச்சாங்கறது உண்மை. ஆனா ஆழமா காதலிக்கலை. அதான் மாத்திக்க முடிஞ்சிருக்கு."

"அது எப்படி உங்களுக்குத் தெரியும்?"

"கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேணுமாக்கும்? நீங்க காதலிச்சப்ப கூட தான் தர்மராஜ் எல்லா தகிடு தத்தமும் பண்ணினார். ஆனா உங்ககிட்ட பாச்சா பலிச்சிடுச்சா?"

"அப்ப ஆழமான காதல் தங்களோட காதல் இல்லைன்னு அவங்க ஒத்துக்கறாங்களா?"

"வேற வழி...?"

"இதுல உங்க பங்கு...?"

"அவங்க அவங்களுக்குப் புரிய வைச்சதுதான்."

"இதுக்கு அந்த தர்மராஜ் கிட்ட எவ்ளோ வாங்கி னீங்க?"

- முத்துச்சாமி அப்படி மடக்குவார் என்று வக்கீல் எதிர்பார்க்கவேயில்லை.

"நான் இதை ஒரு வக்கிலா செய்ய மிஸ்டர் முத்துச் சாமி. மனுஷனா செய்தேன்.

"எந்த மனுஷன்யா இப்படிச் செய்வான்?"

"என்ன சொல்றீங்க நீங்க?"

"முளைச்சலவை பண்ணின நீர் உருப்படமாட் டீர்னு சொல்றேன். கூடி வரும்போது கலைக்கறது. பெரிய பாவம்... பெரியவங்களுக்குத்தான் ஸ்டேட்டஸ் காய்ச்சல்? உனக்கு என்னய்யா?"

"என்ன இது மரியாதையில்லாம... உங்க வருங்கால வாழ்க்கைக்காக நான் தர்மராஜ்கிட்ட எவ்வளவு சண்டை போட்டுருப்பேன் தெரியுமா?"



"புடலங்கா... என் வடிவே போயிட்டா. என்னய்யா பெரிய வருங்காலம்?"

"முத்துச்சாமி...!"

"கத்தாதய்யா...! நீ தலைகீழா நின்னு தண்ணி குடிச்சாலும் நான் சொல்றபடிதான் அந்தப் பெண்கள் கேட்பாங்க, பாக்கறியா இப்ப?"

முத்துச்சாமி சவால்விடும் தோரணை வக்கீல் பாலச் சந்தரை ஒரு கலக்கு கலக்குகிறது.

# 33

***காதலும் காற்றும் வேறல்ல. இரண்டுமே***
***உலகம் முழுக்க பரந்து கிடக்கின்றன.***
***இரண்டும்தான் உயிர்களை ஆள்கின்றன.***
***ஒன்றிருந்து ஒன்றில்லாவிட்டாலும் அதில்***
***உயிரில்லை!***

**வ**க்கீலின் கலக்கத்தை வேணுவும் அனுவும் கவனிக் கின்றனர். அப்படியே முத்துச்சாமியைப் பார்க்கின்றனர். நரசிங்கத்திற்குக் கூட, முத்துச்சாமியின் அந்த ஆக்ரோஷம் பலத்த அதிர்ச்சியைத் தருகிறது, ஆனால் ஆச்சரியமேற்படவில்லை.

முத்துச்சாமி போல் காதலுக்கு வாழ்ந்த ஒருவன், காதலுக்கு வக்காலத்து வாங்காமல் வேறு எதற்கு வாங்கு வான்?

"முத்துச்சாமி என்ன இது...? ஏன் வக்கீலைக் கோபிக்கிறீங்க?" நரசிங்கம் நெருங்கி அமர்ந்தபடி கேட் கிறார்.

"கோபிக்காம... ஆமா நீங்க என்ன பண்ணிகிட்டிருக்கீங்க... இவங்க கலாசார புராணம் பாடவும் அதுல மயங்கி தலையை ஆட்டிட்டீங்களா?"

"பொறுமை முத்துச்சாமி... இந்த ஜோடிங்களோட பேச்சு சிந்தனை எதையுமே என்னால மறுக்க முடியல, அவ்வளவு துல்லியம் அவ்வளவு தெளிவு!"

"விளக்கெண்ணை... என்ன நரசிங்கம் சார் நீங்க... இந்த உலகத்துல விபசாரத்ததைக்கூட மிகப்பெரிய தியாகமா எல்லாரையும் ஒத்துக்கும்படி செய்யலாம். பேசத் தெரிஞ்சா போதும்!"

"இல்ல முத்துச்சாமி... இவங்க பேசத் தெரிஞ்சு பேசல, புரிஞ்சுதான் பேசினாங்க, இவங்கள இவங்க போக்குல விட்றதுதான் சரி."

"இல்ல நரசிங்கம்... இவங்கள இந்த வக்கீல் பிரைன் வாஷ் பண்ணியிருக்கான். இந்த ஆளுக்கு இதே வேலை. என் வடிவையும் இந்த ஆள் இப்படிப் பேசித்தான் பிரைன் வாஷ் பண்ணப் பார்த்தான், ஆனா அவகிட்ட நடக்கலை."

"அத ஏன் பிரைன் வாஷா நினைக்கறீங்க...? எனக்கு அப்படித் தெரியலை...'?

"ஆமாம்! நானும் அனுவும் கூட அப்படித்தான் நினைக்கறோம், பிரைன் வாஷ் பண்ண நாங்க என்ன பாப்பாவா?" - வசந்தா குறுக்கிடுகிறாள்.

"வசந்தா! சும்மா இரு. புரியாமப் பேசாதே. உன்னை நீயே ஏமாத்திக்காதே..."

"இல்ல முத்துச்சாமி சார்... ஏமாத்திக்கலை... நல்லா யோசிச்சுத்தான் முடிவுக்கு வந்துருக்கோம்."



"அப்ப உனக்கு உங்க காதல் தோக்கறது பத்தி கவலையே கிடையாதா?"

"அது தோக்கலை... எங்க கல்யாண வாழ்க்கைக்காக விட்டுக் கொடுக்குது. அவ்வளவுதான்! அதை ஏன் தோல்வியா எடுத்துக்கணும்?"

"அப்ப ஜோதிய புருஷனா நினைச்ச மனசுல வேணுவை நினைக்க ஒரு நெருடலும் இல்ல உனக்கு... அப்படித்தானே?"

"அப்படிச் சொல்லமாட்டேன். அந்த நெருடல் போகப் போக சரியாயிடும்னு நம்பறேன்."

"யாரைக் காப்பாத்த இந்த தியாகம்? இதனால எந்த தேசத்துக்கு விடுதலை கிடைக்கப் போவுது? குறைந்த பட்சம், இன்னிக்கு குழாய்ல ஒரு மணி நேரம் கூடுதலா தண்ணி வருமா?"

"நீங்க ஏன் இப்படி அடம் பண்றீங்க. நீங்களும் தான் ஓடிப்போய் காதலிச்சுக் கல்யாணம் செய்து கிட்டீங்க... என்ன பிரயோஜனம்?

எல்லாரும் பார்த்துப் பொறாமைப்பட்ற அளவுக்கும் காதலிக்கறவங்களுக்கு நம்பிக்கை ஊட்ற மாதிரியும் வாழ உங்களால முடிஞ்சுதா?

வீணா வடிவு அக்காவை வாரிக் கொடுத்ததுதானே மிச்சம்?"

- வசந்தா தேள் கொட்டுவது போலக் கொட்டிய படி கேட்ட கேள்வி, முத்துச்சாமி நெஞ்சில் வலியை உருவாக்குகிறது.

ஏற்கெனவே நொந்து போன மனது... பல நாட்களாக அடைபட்டதில் துவண்டும் போய்விட்ட உடம்பு - இரண்டிலும் இப்பொழுது ஒரு சேர வலி.

தலை துவண்டு போக நெஞ்சில் கையைப்பிடிக் கிறார்.

"முத்துச்சாமி. முத்துச்சாமி... என்னய்யா பண்ணுது... டாக்டரக் கூப்பிடவா?" - நரசிங்கம் பதறுகிறார்.

"ஒண்ணுமில்ல, ஒண்ணுமில்ல..." - சமாளிக்கிறார் முத்துச்சாமி.

வேணு, வசந்தாவை நெருங்கி வந்து ஓங்கி ஒரு அறை விடுகிறான்.

"என்ன பொண்ணு நீ? யார்கிட்ட என்ன பேசற துன்னு இல்ல. அவர் நம்ம நல்லதுக்குப் பேசறார் அத தெரிஞ்சுக்க முதல்ல."

வசந்தா கன்னத்தில் கை பதித்தவளாகக் கலங்கிப் போகிறாள்.

"அடிக்காதப்பா... ஒரு பொண்ணை ஒரு ஆண் எந்த நிலையிலயும் கை நீட்டி அடிக்கக்கூடாது. அடிக்காதே அடிக்காதே... அம்மாடி, நாங்கஊர் பார்க்க பளபளப்பா வாழாம இருந்துருக்கலாம். ஆனா எங்க இல்லறமும், அதுல இருந்த அன்யோன்யமும், பாசமும், பரிவும் இந்த உலகத்துல யார்கிட்டேயும் நிச்சயம் இருந்திருக்காது! வாழ்க்கைல மட்டுமில்ல... செத்தபிறகும் நான் என் வடிவோட வாழத்தான் விரும்பறேன். இப்பகூட சொல் றேன்... இந்த வக்கீல் காசுக்கு மாரடிக்கிறவன்! உங்களை உங்க குணத்துக்கும், திடத்துக்கும் ஏற்ப பிளான் பண்ணி பிரிச்சிருக்காள், ஊருக்கு உபதேசம் பண்ற இவன், இவனோட மகளை மட்டும் ஒரு பெரிய பணக்காரன் மகனுக்குக் காதல் கல்யாணம் செய்து வெச்சிருக்கான். காதலை வாழ வைக்கறதுக்காக 'இல்ல. பணத்துக்காக! பையன் வீட்ல, இந்த விநாடி வரை அந்த ஜோடிங்கள



ஏத்துக்கல. ஏத்துக்க வைக்க, அவங்ககிட்ட இவன காதலுக்கு வக்காலத்து வாங்கிப் பேசினதக் கேட்டா நீங்க அசந்து போவீங்க!

இவன் நாக்குல சரஸ்வதி இருக்கா. ஆனா அவளையே இவன் இஷ்டத்துக்கும் வாடகைக்கு விட்டுப் பொழைக்கறவன். இவனையோ, இவன் கருத்தையோ நம்பாதீங்க. உங்களை நீங்க ஏமாத்திக்காதீங்க!"

முத்துச்சாமி மூச்சுக்கட்டிப் பேசிவிட்டு, அப் படியே பொத்தென்று விழுகிறார் நரசிங்கம் ஓடிப்போய் ஆட்டோ அழைத்துவரச் செல்ல, பின்னாடியே வேணு வக்கீல் நெருங்கி வந்து பதட்டப் பெருக்கோடு வசந்தாவைக் கேட்கிறார்.

"அம்மாடி இவர் பேச்சு...?"

"கவலைப்படாதீங்க... நாங்க கணக்குல எடுத்துக்கப் போறதில்ல. எங்க முடிவில எந்த மாற்றமுமில்லை."

"அப்பாடா....!" - அவரிடம் பெருமூச்சு. அது குன்றாதபடி வீட்டு வாசலுக்குச் செல்பவர், தனிமை யோடு தன் வசம் உள்ள செல்போனை எடுத்துத் தட்டு கிறார்.

மறுமுனையில் மாட்டுபவர் தர்மராஜ்.

"ஹலோ சார்! ஒரு கிளாட் நியூஸ்! என்னோட பிளான் பயங்கரமா ஒர்க் அவுட் ஆயிடிச்சு. இங்கு அந்த முததுச்சாமி ஆ ஊன்னு கத்திப் பார்த்தான். ஒண்ணும் பருப்பு வேகலை! இனி உங்ககுடும்ப கௌரவம் அந்தஸ்து எதுவும் எந்த நிலையிலயும் பாதிக்காது."

"தேங்க்ஸ்யா? நீ கோயபல்ஸும் சாணக்கியனும் ஒண்ணு சேர்ந்த கலவை! மோனிகா லெவின்ஸ்கி கேஸை

மட்டும் கிளிண்டன் உன்கிட்ட கொடுத்திருக்கணும், கலக்கியிருப்பே!"

"புகழ்ச்சி அப்புறம்! உங்க மகனும் மருமகளும் இந்த முத்துசாமிக்கு ஏதாவது உதவி செய்யணும்னு ஆசைப்பட்டு, உங்களப் பார்க்க வந்துகிட்டிருக்காங்க. அவங்க விருப்பப்படி நீங்க தாராளமா நடந்துக்கலாம்.

ஒரு பக்கம் - சொத்து பங்கு இல்லேங்கற உங்க மிரட்டல், மறுபக்கம் - என்னோட கலாச்சாரப் பூர்வ மான உபன்யாசம் - எல்லாம் ஜோடிங்களை உறுதியா நிக்க வைச்சுடிச்சு. இதுல உங்க மருமகளும் அந்த வசந்தா பொண்ணும் பின்னிட்டாங்க.

பசங்ககூட சரியில்ல. கடைசி வரை முட்டிப் பாத்தாங்க. முடியவே முடியாதுன்னு அவங்களையும் வழிக்குக் கொண்டு வந்துட்டாங்க."

"ரொம்ப சந்தோஷம்! அவங்க வரட்டும், நான் பாத்துக்கறேன். மயில் வாகனத்தையும் வரச் சொல்லி யிருக்கேன்."

"பாத்துக்குங்க, இங்க இப்ப இந்த முத்துச்சாமி நிலைமை மோசமா இருக்கு-மைல்ட் ஹார்ட் அட்டாக்னு நினைக்கறேன்."

"அப்படியா... என்ன பண்ணப் போறீங்க?"

"ஆட்டோ கூப்டப்போயிருக்காங்க. டாக்டர் கிட்ட தான் கூட்டிகிட்டுப் போகணும். என்னென்னமோ பேசிப் பார்த்தான். பலிக்கல! அதான் அதிர்ச்சியில் வலி வந்துடிச்சு போலருக்கு."

"ஒண்ணு பண்ணு! அவனை எப்படியாவது நம்ம பக்தவத்சலம் டாக்டர்கிட்ட கூட்டிகிட்டுப் போயிடு.



கேட்டா ராஜ வைத்தியம்னு சொல். ஆனா எந்த வைத்தியமும் பாக்காம, பாக்கற மாதிரி பக்தவத்சலம் பாசாங்கு பண்ணியே பரலோகம் அனுப்பிடுவான்!

- அவன் உயிரோடு இருக்கறது ஆபத்து அவன் இருக்கறவரை இந்தப் பெண்களாலையும் இப்ப இருக்கற உறுதியோட இருக்க முடியாது..."

"என்னங்க இது... ஆட்டக்கடிச்சு மாட்டக்கடிச்சு கடைசில மனுஷனையே..."

"சொன்னதைச் செய்... எந்த பழி பாவமும் வராமக் கொல்றதுக்கு அருமையா ஒரு சந்தர்ப்பம் கிடைச்சிருக்கு... அதவிடச் சொல்றியாக்கும்...?"

மறுமுனையில் தர்மராஜ் முடக்குகிறார். வக்கீலும் திரும்பிப் பார்க்கிறார். முத்துச்சாமி துடித்துக் கொண் டிருக்கிறார்.

கொஞ்சம் போல ஏதோ சிந்தனை...

நடுவில் உறுமியபடி வந்து தேங்குகிறது ஆட்டோ. நரசிங்கமும், வேணுவும் பாய்ந்து உள் செல்கின்றனர்.

வக்கீலும் உதவுவது போல் பாவ்லா செய்ய...

"நீங்க விடுங்க வக்கீல் சார்..."

"இருக்கட்டும். இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்துவிடல். நான் இவர் பேசினத அப்பவே மறந்துட்டேன். இவரை இம்மீடி யட்டா ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட் பக்தவத்சலம்கிட்ட கொண்டுபோவோம்."

"ஐயோ... அவர் பெரிய டாக்டராச்சே...?"

"இருந்தா என்ன...? நமக்குத் தேவை இப்ப முத்துச் சாமி உயிர். கமான் க்விக்..."

- ஆட்டோவில் இடமில்லாதுபோக, 'பரவா யில்லை' என்று வக்கீல் பாலசந்தர், ஆட்டோவில் டிரைவரை ஒட்டிக்கொண்டு அமர்கிறார். அந்த நிலை யிலும் வேணு அதற்காக சந்தோஷப்படுகிறான்.

என்ன ஒரு கரிசனம்?

பதவிசாக காரை விட்டு இறங்கிவரும் ஜோதியும் அனுவும், தர்மராஜுக்கும் ராஜேஸ்வரிக்கும் பரம சந்தோஷம் அளிக்கின்றனர். அதை விடச் சந்தோஷம் மயில்வாகனத்துக்கு.

சம்பந்திகள் வெற்றிப் புன்னகை நெளிய ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்கின்றனர்.

"வாப்பா... வாம்மா எங்கே போயிட்டு வரீங்க?" - மிகக் கரிசனமான வரவேற்பு தர்மராஜிடம்.

"அப்பா ஒரு முக்கியமான விஷயம்."

"தெரியும் வக்கீல் போன் பண்ணிச் சொன்னார்."

"சொல்லிட்டாரா?"

"ஆமாம்...! அனு, உன் கலாசார சிந்தனையை ரொம்ப பாராட்றேன்மா. ஜோதிகூட தடுமாறியிருக் கான். ஆனா நீ திடமா நின்னு உன்னை, உங்களுக்கு நடந்த கல்யாணத்தை, இந்தக்குடும்பத்தை, இதோட மானத்தை எல்லாத்தையும் காப்பாத்திட்டே...."

"இருக்கட்டும் மாமா, உங்ககிட்ட ஒரு உதவி கேக்கலாம்னு...?"

"என்ன... அந்த முத்துச்சாமிக்கு... ஐ மீன் என் சகலைக்கு ஏதாவது உதவி செய்யணுமாக்கும்?"

"ஆமாம்! அத எப்படி நீங்க கண்டுபிடிச்சீங்க?"



ஒரு யூகம்தான். வக்கீலும் சொன்னார். நான் அதுக்காக ஏற்கெனவே ஒரு திட்டம் வெச்சிருந்தேன்.சீ..."

- தர்மராஜ் ஒரு ஃபைலைத் தூக்கிப் போடுகிறார் அதில முத்துச்சாமி பேரில் சாலிடாக பத்து லட்சம்! அப்புறமாக அந்த இரண்டு குழந்தைகள் மேலும் தலா பத்து லட்சம். மாதம் வட்டியே கிட்டத்தட்ட ஐம்ப தாயிரம் வரும் விதமாக ஏற்பாடுகள்!

கண்களை அகலத் திறந்து ஆனந்த அதிர்ச்சி கொள்கிறான் ஜோதிசங்கர். எட்டிப்பார்க்கும் அனுவும் வியந்து போகிறாள்.

"அனு, உனக்கு இன்னொரு சந்தோஷமான செய்தி வேணு பேர்ல எல்லா கேஸையும் வாபஸ் வாங்கிட்டேன். நீ கொடுத்த பத்து லட்சத்தோட இன்னொரு பத்து லட்சம் தந்து ஒரு இண்டஸ்ட்ரி ஸ்டார்ட் பண்ண ஏற்பாடு செய்துருக்கேன்!"

அனுவுக்கு நிற்கும் இடம் நழுவுவதுபோல் ஒரு பிரமை சற்று முன்வரை முள்ளாகக் குத்திய பெற்றோர் களா இப்பொழுது இப்படி மலராக மாறியிருக் கின்றனர்?

அனு கண்கள் பனித்துப் போக, மயில்வாக னத்தைப் பார்த்து கைகளைக் கூப்புகிறாள்,

நறுக்குகிறது தொலைபேசியழைப்பு.

ஜோதிக்குப் பக்கமாக இருந்ததால் அவன் தான் ரிசீவரைப் போய் எடுத்தான். அடுத்த நொடி, கலங்கிப் போய் முகத்தில் ஏராள அதிர்ச்சிகளைக் காட்டினான்.

"என்ன ஜோதி...?"

"முத்துச்சாமி சித்தப்பாக்கு திடீர்னு ஹார்ட் அட்டாக் வந்து ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணியிருக் காங்க. டாக்டர் எவ்வளவோ போராடியும்...?"

"என்ன ஆச்சு?" - அனு நெற்றி புடைக்கக் கத்திக் கேட்கிறாள்.

"ஹி பாஸ்ட் அவே...!" அவனிடமிருந்து ரிசீவர் நழுவுகிறது!



ஏராள மாலைகளுக்கு நடுவில் முத்துச்சாமி சடலம். கால்மாட்டில் அந்த இரண்டு பெண் குழந்தைகளும் அப்பா தூங்குவதாக நினைத்துக் கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றன. அனுவும் வசந்தாவும் துக்கத்தில் புதைந்து போயிருக்கின்றனர். கூடவே வேணு வும் ஜோதியும்...

அனைவரையும் விட கூடுதலான துக்கத்தில் இருக் கிறாள் வசந்தா. தன் பேச்சுதானே அவரை நெஞ்சில் குத்தி வலியில் பிடித்து இழுத்து விட்டது என்கிற குற்ற உணர்வு. அனுவிடம் அதைச் சொல்லிச் சொல்லி அழுகிறாள்.

கூடவே இருக்கும் ஜோதியும் அதைக் கேட்டு மிடறு விழுங்குகிறான். அப்படியே வக்கீலை அந்தக் கூட்டத்தில் பார்க்கிறான். அவர் சலனமின்றி தர்ம ராஜிடம் பேசிக் கொண்டிருக்கிறார்... நடுவில் கூட்டத் தில் துளி சலனம்... டாக்டர் பத்தவத்சலம் வருவதால் வந்த சலனம் அது...

முன் வந்து, தர்மராஜ் வரவேற்பது போல கைகளை நீட்ட நெருங்கும் பத்தவத்சலம், "என் கேரியர்ல இது தான் எனக்கு ஏற்பட்ட முதல் தோல்வி. ஐ ஆம் சாரி!" - என்று சற்று சப்தமாகவே சொல்ல, அனைவரின் கவனமும் அவர் மேல் பதிகிறது.



"மனைவி மேல உயிரையே வெச்சிருந்த ஒரு அவதாரப் புருஷன் இந்த முத்துச்சாமி. அந்தம்மா பிரிவால இதயமே வெந்து போயிருந்துக்குன்னா எவ் வளவு ஃபீலிங் இருந்துருக்கணும்... யோசிச்சுப் பாருங்க..."

திரும்பவும் பத்தவத்சலத்திடம் பிரஸ்தாபம். அது அனைவரையும் பிசைகிறது அதுவரை அடக்கத்தோடு அழுதுகொண்டிருந்த ராஜேஸ்வரி, திடீரென்று நெஞ்சு பிசைந்த மாதிரி அழுதபடி மாடிபடி ஏறுகிறாள்.

தர்மராஜிடம், அதைப் பார்க்கவும் சற்றும் எதிர் பார்த்திராத திகைப்பு. மனைவியை சமாதானப்படுத்தும் நோக்கத்தோடு பின் தொடர்கிறார்.

"ராஜேஸ்வரி... ராஜேஸ்வரி..."

- அவள் மாடியறையில் போய், ஒரு ஓரமாக ஒடுங்கி விழுந்தபடி, தன்னை நெருங்கும் தர்மராஜை கண்ணீருடன் நிமிர்ந்து பார்க்கிறாள்.

"என்ன இது... எதுக்காக இப்படி அழுவறே?"

"அழுவாம... டாக்டர் சொன்னதைக் கேட்டீங் களா? வடிவுமேல எவ்வளவு பாசம் இருந்தா இப்படி ஆயிருக்கும் அவருக்கு! இப்படி, ஒரு மனுசனை ஒத்துக்காம, தவிக்க விட்டுட்டோமேன்னு நினைச்சேன். துக்கம் தாங்கலைங்க."

"மண்ணாங்கட்டி! இதயம் புண்ணுன்னு பத்தவச்சலம் சொன்னதை நீயும் நம்பிட்டியாக்கும். அது ஊருக்காக சும்மா சொன்னதுடி! உள்ளபடியே நடந்ததே வேற!"

"என்னங்க நடந்தது?"

"நெஞ்சுவலி வந்தது உண்மை. சமயத்துக்கு மருந்து கொடுத்திருந்தா பிழைச்சிருக்கக் கூடிய ஆளை - மருந்து மாத்திரை கொடுக்காம, ஊசி போட்றேன்னு எதையோ ஒண்ணைப் போட்டு, கொல்லாமக் கொன்னுருக்கார்டி பக்தவத்சலம்... எல்லாம் என் ஏற்பாடு!"

- அந்த நிலையிலும் கித்தாப்பு காட்டி கண்களைச் சிமிட்டுகிறார் தர்மராஜ்.

"ஏங்க அப்படி செஞ்சீங்க?"

"அவன் உயிரோட இருக்கறது ஆபத்துடி. நம்ம வக்கீல் வாய்ச் சாதுர்யம் காட்டி அந்தப் பெண்களைக் கட்டிப் போட்டிருக்கார். இவன் என்னடான்னா பழைய கதையைச் சொல்லியும், அந்த ஆள் கதையைச் சொல்லி யும், அவங்களைக் கலைக்கப் பார்த்துருக்கான்.

இன்னிக்கு இல்ல நாளைக்கு அவன் உயிரோட இருந்தாதான் ஆபத்து. நம்ம பெண்களோட மன உறுதியை நிச்சயம் கரைச்சிடுவான். பசங்கவேற இன் னும் முழுசா மாறலை. அரை மனசாதான் மாறியிருக் காங்க. அதான் பக்தவத்சலத்துக்கு போன் போட்டு காரியத்தை கமுக்கமா முடிய்யான்னேன். முடிச்சிட் டாரு. பாடிய எடுக்கறதுக்குள்ற பணத்த வாங்கிக்கவும், பிரச்சினை வந்துடாமப் பாத்துக்கவும்தான் கிளம்பி வந்துருக்காரு."

- தர்மராஜ் விவரிக்க விவரிக்க, ராஜேஸ்வரி பிளந்த வாயை மூடவில்லை.

"என்ன வாய் பிளந்திட்டே? அழுதது போதும்... வா கீழ!"



"அப்ப அந்த ஆள் பேர்ல குழநதைங்க பேர்ல போட்ருக்க பணம் எல்லாம்...?"

"அது அந்த முத்துச்சாமிக்குக் கொடுத்த விலை. பணத்தைக் கொடுத்து அவனை சமாதானப்படுத்த செஞ்ச முயற்சி.

ஆனா அவ்வளவு செலவு எனக்கு எதுக்கு...! ஈஸியா கொல்ல நானே சான்ஸ் தரேன்னு நெஞ்சு வலி சான்ஸைத் தந்தான். நானும் தருணத்தத் தப்பவிடலை. ஒழிச்சுக் கட்டிட்டேன். இப்ப நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன்."

- தர்மராஜ் விவரிக்க விவரிக்க ராஜேஸ்வரி அவரையே வைத்த கண் வாங்காது பார்க்கிறாள்.

"என்ன பாத்துகிட்டே இருக்கே? நாம போட்ட நாடகத்துல க்ளைமாக்ஸ் நடந்துகிட்டு இருக்கு. முத்துச் சாமியைப் போட்டு எரிக்கறதோட எல்லாம் முடிவுக்கு வருது! நம்ம அந்தஸ்து, ஸ்டேட்டஸ் இதோட யார் போட்டி இட்டாலும், அவங்க முடிவு சாம்பல்தான். இதை பசங்க புரிஞ்சுகிட்டாங்களோ இல்லையோ, பொண்ணுங்க புரிஞ்சுகிட்டிருக்காங்க."

- தர்மராஜ் கித்தாப்பு காட்டிபடி யதார்த்தமாகத் திரும்பியபோது, அனுவும் வசந்தாவும் அறைவாசலில். அவரிடம் திடுக்!



சினிமாவில்தான் சிதை எரியும்போது சுற்றி நின்று வேடிக்கை பார்ப்பதெல்லாம். நிஜத்தில் வெட்டியான் யாரையும் நிற்க அனுமதிப்பதில்லை.

முத்துச்சாமி விஷயத்திலும் அதுவே தொடர்கிறது.

வேணுவும் ஜோஸ்யம் சோகமாக வெளியே வருகின்றனர். சுடுகாட்டுக்கு வெளியே அனுவும் வசந்தாவும் முத்துச்சாமியின் குழந்தைகளை ஆளுக்கொன்றாகப் பிடித்தபடி நின்று கொண்டிருக்க, உறவுக்கூட்டம் மெல்ல கலைந்து போய்க் கொண்டிருக்கிறது.

வக்கில் தர்மராஜ், ராஜேஸ்வரி என்று மூவரும் மயானத்திற்கு காரில் வந்திருக்கின்றனர். சொல்ல முடியாத அளவு டென்ஷனோடு, மூவரும் அனுவையும் வசந்தாவையுமே பார்த்துக் கொண்டிருக்கும்போதுதான் அந்த அபூர்வமான விஷயம் நடக்க ஆரம்பித்தது.

அனுவும் வசந்தாவும் தங்கள் தாலியை வாங்கிக் கொண்டு திரும்ப மயானத்துக்குள் நடக்கின்றனர்.

அவர்களும் அந்தத் தாலியை வாங்கிக் கொண்டு திரும்ப மயானத்துக்குள் நடக்கின்றனர்.

மயானத்துக்கு வந்திருக்கும் நரசிங்கமும் மாணிக்கமும் கூட அதைப் பார்த்து திகைத்துப் போகின்றனர். உள்ளே சென்ற வேணுவும் ஜோதியும் எரியத் தொடங்கி விட்ட முத்துச்சாமியை, கலங்கிவிட்ட விழிகளோடு பார்த்து விட்டுத் திரும்ப, அனுவும் வசந்தாவும் உள்ளே நுழைகின்றனர். குழந்தைகள் வாசலிலேயே நிற்கின்றனர்.

சடலத்தின் முன், வேணு, அனு கழுத்தில், முன்பு வசந்தா கழுத்தில் தான் கட்டிய தாலியைத் திரும்பக் கட்டுகிறான்.

ஜோதியும் அதே போல அனு கழுத்தில் முன்பு தான் கட்டிய தாலியை வசந்தா கழுத்தில் கட்டுகிறான். இரண்டு ஜோடிகளும் சிதையைச் சுற்றிவரும்போது வெட்டியாய் தனது அதிர்ச்சியை ஆச்சரியத்தைக் காட்டுகிறான்.



வெளியே வரும் ஜோடிகள் முத்துச்சாமியின் குழந்தைகளை ஜோடிக்கொன்றாகத் தூக்கிக்கொண்டு நடக்க ஆரம்பிக்கிறார்கள்.

“ஜோதி...’ ராஜேஸ்வரி கத்துகிறாள்.

“வசந்தா...” மாணிக்கம் கத்திப் பார்க்கிறார்,

அவர்கள் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. பார்க்கவும் மாட்டார்கள்.

போய்க் கொண்டேயிருக்கிறார்கள். கலாச்சாரம்' காதல் இரண்டையுமே வாழவைக்க அவர்களுக்குத் தெரியும். இந்த வினாடி அவர்களுக்கு சமூக மதிப்பை விடவும் முத்துச்சாமியின் ஆத்ம சாந்தி மிகப் பெரியது.

இருந்து முடிக்க முடியாததை, எரிந்து முடித்து விட்ட மகிழ்வோடு முத்துச்சாமியின் சடலத்தில் அநியாயத்துக்கு ஒரு குதூகலம்!

புத்திசாலித்தனம் புத்திசாலித்தனம் என்று எதையெல்லாம் பலமாகக் கருதினார்களோ, அதுவே பகையாகி விட்ட துக்கத்தோடு அந்தப் பணக்காரர்களும் அதற்கு விலை போய் விட்டவர்களும் ஒடிந்து போய் நிற்க, பல அநீதிகளால் புதிய நியாயங்களைத் தேடிப் பிடித்துவிட்ட ஜோடிகள் புதிய உலகைக் காண போய்க் கொண்டிருக்கின்றன.

**காதல் சதுரங்கத்தில் காதல் மட்டும் என்றும் தோற்பதேயில்லை!**



